# சங்க இலக்கியத்தில் சமூகப் பொருளாதாரப் பதிவுகள்

காந்திகிராம கிராமியப் பல்கலைக்கழக

முனைவர் பட்ட (பிஎச்.டி) நிறைவின் ஒரு பகுதியாக

அளிக்கப்படும் ஆய்வேடு

**கோ.மகாலட்சுமி**

தமிழ்த்துறை

காந்திகிராம கிராமியப் பல்கலைக்கழகம்

காந்திகிராமம் - 624 302

தமிழ்நாடு

இந்தியா

ஜுலை 2015

**முனைவர். மு.குருவம்மாள்., எம்.ஏ., பி.எட்., பிஎச்.டி.,**

**பேராசிரியர்,**

**தமிழ்த்துறை,**

**காந்திகிராம கிராமியப் பல்கலைக்கழகம்,**

**காந்திகிராமம் - 624 302.**

# ஆய்வு நெறியாளர் சான்றிதழ்

**'சங்க இலக்கியத்தில் சமூகப் பொருளாதாரப் பதிவுகள்"** என்னும் தலைப்பில் **கோ.மகாலட்சுமி** செய்துள்ள இவ்வாய்வு காந்திகிராம கிராமியப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறையில் முனைவர் பட்டத்திற்காகத் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இவ்வாய்வின் மீது வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் படவில்லை என்றும் சான்று அளிக்கிறேன்.

இடம்:காந்திகிராமம் **(மு.குருவம்மாள்)**

தேதி: ஆய்வு நெறியாளர்

**கோ.மகாலட்சுமி, எம்.ஏ., எம்.ஃபில்.,**

**முனைவர் பட்ட ஆய்வாளர்,**

**தமிழ்த் துறை,**

**காந்திகிராம கிராமியப் பல்கலைக்கழகம்,**

**காந்திகிராமம் - 624 302.**

# ஆய்வாளர் உறுதிமொழி

**'சங்க இலக்கியத்தில் சமூகப் பொருளாதாரப் பதிவுகள்"** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காகச் செய்யப்பட்ட இவ்வாய்வு என் சொந்த முயற்சியால் உருவானதேயாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

இடம்: காந்திகிராமம் **(கோ.மகாலட்சுமி)**

தேதி: ஆய்வாளர்

**(மு.குருவம்மாள்)**

நெறியாளரின் உறுதிக் கையொப்பம்

# நன்றியுரை

‘**சங்க இலக்கியத்தில் சமூகப் பொருளாதாரப் பதிவுகள்**” என்னும் தலைப்பில், முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ள அனுமதி வழங்கிய, எமது காந்திகிராம கிராமியப் பல்கலைக் கழகத்திற்கு என் முதற்கண் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர் பட்ட ஆய்வாளராக என்னை ஏற்றுக் கொண்டு, இவ்வாய்வுப் பணியில் என்னை ஆர்வமுடன் செயலாற்ற வைத்து நெறிப்படுத்திய பாசமிகு . அம்மா பேராசிரியர் **மு.குருவம்மாள்** அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியைச் சமர்ப்பிக்கிறேன். நான் இப்பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்வதற்கு அனுமதி வழங்கிய பல்கலைக் கழகத் துணைவேந்தர் அவர்களுக்கும், பதிவாளர் அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் கல்விக்கு உறுதுணையாய் இருந்து என்னை முதல் பட்டதாரியாகத் தரம் உயர்த்திய எனது தந்தை உயர்திரு. **கு.கோபால்** அவர்களுக்கும், தெய்வ நம்பிக்கையுடன் எனது ஆய்வு முழுமையடைய உற்ற துணையாக இருந்த எனது அன்புத் தாயார் **கோ. தனலட்சுமி** அவர்களுக்கும் என் நன்றிகள் உரித்தாகட்டும்.

எனது முனைவர் பட்ட ஆய்வு முழுமையாக நிறைவு பெற, உற்ற துணையாய் இருந்து, வழி நடத்திச் சென்று, ஆய்விற்கான உதவிகளைச் செய்த என் அன்புக் கணவர் **கு.நந்தகுமார்** அவர்களுக்கு நன்றியை உரித்தாக்குகிறேன்.

மேலும், எனது ஆய்வு நேரத்தில், அகத்திலும், புறத்திலும் எந்த ஒரு இடையூறும் செய்யாமல், எனது ஆய்விற்கு கைகொடுத்த என் அன்பு மகள், **ந.தக்ஷயா** அவர்களுக்கு எனது அன்பான நன்றி.

முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ளத் தூண்டுகோலாய் அமைந்த எனது மரியாதைக்குரிய அன்பு அண்ணன் அண்ணி **கோ.கருப்பையா, க.புஷ்பா** அவர்களுக்கும் என் அன்பான நன்றியைச் சமர்பிக்கிறேன்.

எனது ஆய்வு சிறக்க மேலும் பல்வேறு உதவிகளை நல்கிய என் பெரிய மாமா, மரியாதைக்குரிய **சி.குஞ்சான், கு.பூபதி,** அவர்களுக்கும், எனது தோழி **பூ.ராஜசெல்வி** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

எனது ஆய்விற்கு உதவிசெய்த பேராசிரியர்களுக்கும், ஆய்வாளர்களுக்கும், பல்கலைக் கழக நூலகத்தாருக்கும், ஆய்வாளர் ஜோஸ்பின் செலின் மேரி அவர்களுக்கும், எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டினைச் செம்மையான முறையில் குறித்த நேரத்தில் தட்டச்சு செய்து கொடுத்த **“A TO Z Browsing Damakaa”** கணினி அச்சகத்தார் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**(கோ.மகாலட்சுமி)**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| ப | - | பக்கம் |
| பக் | - | பக்கங்கள் |
| பா.எ | - | பாடல் எண் |
| குறள் | - | திருக்குறள் |
| நூ | - | நூற்பா |
| மேலது | - | மேற்குறிப்பிட்ட நூல் |
| தொல் | - | தொல்காப்பியம் |
| உரை.ஆ | - | உரை ஆசிரியர் |
| தொகு.ஆ | - | தொகுப்பாசிரியர் |
| பதி.ஆ | - | பதிப்பாசிரியர் |
| ம.ப | - | மறுபதிப்பு |
| மு.ப | - | முதற்பதிப்பு |
| மொ.பெ | - | மொழிபெயர்ப்பாளர் |
| அகம் | - | அகத்திணையியல் |
| p | - | page |

# உள்ளடக்கம்

# சங்க இலக்கியத்தில் சமூகப் பொருளாதாரப் பதிவுகள்

0.1. ஆய்வின் தலைப்பு

0.2. ஆய்வின் நோக்கம்

0.3. ஆய்வின் எல்லை

0.4. ஆய்வின் அணுகுமுறை

0.5. ஆய்வு முன்னோடிகள்

0.6. ஆய்வின் கருதுகோள்

0.7. ஆய்வேட்டின் அமைப்பு

# சங்க இலக்கியத்தில் சமூகப் பொருளாதாரப் பதிவுகள்

## (ஆய்வுச் சுருக்கம்)

தமிழர் நாகரிகம், பண்பாடு, அரசியல், சமூகப் பொருளாதாரம் ஆகியவற்றின் தனித்தன்மையைப் புலப்படுத்தும் இலக்கிய விளைச்சலாக சங்க இலக்கியம் திகழ்கின்றது. அந்த வகையில் சங்க கால மக்களின் வாழ்வியல் சிந்தனைகளை ஆதாரமாகக் கொண்டு சங்க கால மக்களின் பொருளியல் நோக்கை அணுக வேண்டியது இந்த ஆய்விற்கு அவசியமான ஒன்றாகும்.

சங்க காலத்து இனக்குழுச் சமூகத்தின் எச்சங்களும் அதனை அடியொற்றி எழுந்த அரச மரபின் தோற்றங்களும் சங்ககாலச் சமூகத்தின் அடையாளங்கள். இனக்குழுச் சமூகத்திற்குக் குறிஞ்சி முல்லை நிலமும், அரசு உருவாக்கத்தின் தோற்றத்திற்கு மருதம் நெய்தல் நிலமும், சான்றுகள் தருகின்றன. இக்கருத்திற்கிணங்க சங்க காலச் சமூகத்தில் உயர்வு தாழ்வு இருந்தமையை 'வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும் கீழ்ப்பால் ஒருவன் கற்பின் மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே' (புறம் -183) என்ற வரிகள் வலுவான சான்றுகளாக அமைகின்றன.

சங்ககாலச் சமுதாயத்தின் தொழில் முறைகளால் சமூகப் பொருளாதாரக் கட்டமைப்பில் ஏற்றத்தாழ்வுகள் உருவாகின. உழுவித்துண்போரும் கலைஞர்களும் வர்க்கக் குழுக்களாகினர். சங்க இலக்கியங்களில் திணை சார் மக்களின் சமூகப் பொருளாதாரம், நிலவுடைமைச் சமூகத்தின் வளமை, வேந்தர் காலத்தின் வறுமை, பண்டமாற்று, வாணிகம், வாணிகத்தால் உருவான நாணயமாற்று, கலைஞர்களின் வறுமை வாழ்க்கை, ஈயாதானை இகழும் சங்கப்பாடல்களின் பின்புலங்கள் ஆகியவை ஒட்டுமொத்த சமூகப் பொருளாதாரப் பதிவுகளை அறிவதற்குச் சங்க இலக்கியங்கள் சான்றுகளாக அமைகின்றன.

## ஆய்வின் தலைப்பு

சங்ககாலச் சமூகத்தின் பொருளாதாரப் பதிவுகளை ஆராய்வதாக அமைந்த இந்த ஆய்வு **'சங்க இலக்கியத்தில் சமூகப் பொருளாதாரப் பதிவுகள்'** என்பதனைத் தலைப்பாகக் கொண்டுள்ளது.

## ஆய்வின் நோக்கம்

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முந்தைய மனிதனின் வாழ்வாதாரச் செயல்முறைகளையும், சமூகப் பண்பாட்டு வளர்ச்சியினையும், சமூகப் பொருளாதாரச் செயல்பாடுகளையும் அறிந்து கொள்ள சங்க இலக்கியங்கள் பெரிதும் துணை நிற்கின்றன. சங்க இலக்கியத்தின் மானுட வாழ்வியலை அறிந்து கொள்ள நானில வகைப்பாடு உதவுகின்றது. நானிலம் குறித்து ஆராய்வதற்கு புவியியல் அடிப்படையில் அமைந்த பதிவுகள் சான்றுகளாக அமைகின்றன. நானிலம் குறித்துக் கூறும் தொல்காப்பியர் **'முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச் சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே'** எனக் குறிப்பிடுகிறார்.

தொன்மையான தமிழ் மானுடத்தின் வளர்ச்சியினைக் குன்றுகளிலிருந்தும், காடுகளிலிருந்தும், வளமான சமவெளிப் பகுதிக்கும், கடற்கரைப்பகுதிக்கும் இட்டுச் சென்ற வரலாறு தொடர்பான இடப்பெயர்ச்சியினைச் சங்க இலக்கியங்களின் வாயிலாகத் தெளிவாக அறியலாம். நானிலங்களில் நிகழ்ந்த தொழில் முறைகளும், தொழில் முறைகளின் விளைவாக ஏற்பட்ட மாற்றங்களுமே சமூகப் பொருளாதாரம் குறித்த சிந்தனையை முன் வைக்கத் துணை புரிந்தன.

சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள மக்கள் பல்வேறு வகையினர் ஆவர். அந்த மக்கள் பல்வேறு வளங்களைப் பெற்றிருந்தனர் என்பதை,

**நாடன் என்கோ? ஊரன் என்கொ?**

**பாடிமிழ் பனிக்கடல் சேர்ப்பன் என்கோ?**

**யாங்கனம் மொழிகோ ஓங்குவான் கோதையை?**

**(புறம் 49, 1-3)**

என்ற வரிகள் தெளிவுபடுத்துகின்றன.சங்க இலக்கியப் பொருளாதாரச் செயற்பாடுகளாக குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நானிலங்களின் தொழில் முறைகள் அமைகின்றன. வேட்டைச் சமூகத்தில் மனிதர்கள் கிழங்குகள், காய்கள், கனிகள் ஆகியவற்றைச் சேகரிப்பவர்களாகவும், வேட்டையாடிகளாகவும் வாழ்ந்தனர். மேய்ச்சல் சமூகத்தில் ஆடு – மாடு வளர்ப்பையும், பால் உற்பத்தியையும், பால்படு பொருட்களின் பண்டமாற்றையும் , புன்புல வேளாண்மையையும் பிரதான பொருளாதாரச் செயற்பாடுகளாகக் கொண்டு வாழ்ந்தனர். வேளாண்மைச் சமூகத்தில் உழவுத் தொழில் முதன்மைப்படுத்தப்பட்டது. இனக்குழுவின் ஆட்சிப் பரப்பாக இருந்த நிலம் காலப் போக்கில் குறுநிலமன்னர்களின் சொத்தாக மாற்றம் அடைந்தது. இதன் விளைவாகச் சிற்றரசுகள் அழிந்து பேரரசுகள் உருவாகின. சங்ககாலத்தில் வேளாண்மை வளர்ச்சியடைந்து நிலவுடைமைச் சமூகம் துவங்கிய நிலையிலும், பண்டமாற்று முறை செயல்பட்டமைக்கு தமிழகம் முழுவதும் நிலவுடைமைச் சமூகம் ஒன்றுபோல அமையாமையே காரணம். நிலவுடைமைச் சமூகத்தில் ஒரு சிலரிடம் சேர்ந்த உபரி உற்பத்தி பேரரசு உருவாகக் காரணமாக அமைந்தது. இதற்கு,

**பெரு நெற் பல்கூட்டு எருமை உழவ!**
**கண்படை பெறாஅது, தண் புலர் விடியல்,**
**கருங் கண் வராஅல் பெருந்தடி மிளிர்வையோடு**
**புகர்வை அரிசிப் பொம்மற் பெருஞ் சோறு**

**( நற் - 60, 2-5)**

என்ற வரிகள் உதாரணமாக அமைகின்றன. வாணிகம், வாணிகத்தினால் உருவாகிய நாணயமாற்று முறை ஆகிய பல்வேறு போக்குகளைச் சங்க இலக்கியங்களின் வாயிலாகத் தெளிவாக அறிய முடிகின்றது. இத்தகைய சங்ககாலத்தின் பொருளாதாரச் செயற்பாடுகளுக்கு, நிலமும் நீரும் அடிப்படை ஆதாரங்களாக அமைகின்றன. ஆதலால் சங்க காலத்து மக்கள் இயற்கையைத்

தனதாக்கி, வாழ்வாதாரத்தை மேம்படுத்தி, பொருளாதாரத்தை வளர்த்து வாழ்ந்தனர் என்பதனைக் கருத்திற் கொண்டு சங்க இலக்கியத்தில் சமூகப் பொருளாதாரப் பதிவுகளை ஆராய்வது இந்த ஆய்வின் நோக்கம்.

## ஆய்வின் எல்லை

செவ்வியல் இலக்கிய வரிசையிலமைந்த பத்துப்பாட்டு நூல்களான திருமுருகாற்றுப்படை, பொருநாராற்றுபட்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும் பாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி, முல்லைப்பாட்டு, நெடுநல்வாடை, பட்டினப்பாலை, மலைபடுகடாம் ஆகிய நூல்களும், எட்டுத்தொகை நூல்களான நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு ஆகிய நூல்களும் இந்த ஆய்வின் எல்லையாக அமைந்துள்ளன.

ஆய்வுத் தலைப்பிற்குத் தொடர்பான சமூகவியல், மானுடவியல், வரலாற்றியல் சார்ந்த ஆய்வு நூல்களும், சங்க இலக்கியம் சார்ந்த ஆய்வு நூல்களும், ஆய்வுக்கட்டுரைகளும், திறனாய்வு நூல்களும், பிற பதிவுகளும் துணைமை ஆதாரங்களாக அமைகின்றன.

## ஆய்வின் அணுகுமுறை

ஆய்வின் அணுகுமுறைகளாக,

- ❖ சங்க இலக்கியங்களில் சமூகப் பொருளாதாரச் செயற்பாடுகளை நுணுகிப்பகுத்து ஆராய்வதால் பகுப்பாய்வு முறையும்,
- ❖ பகுப்பாய்வின் தெளிவில் கிடைத்தவற்றைத் தொகுத்து ஆராய்வதால் தொகுப்பாய்வு முறையும்,
- ❖ சங்க இலக்கியப் பாடல்களை விளக்கி ஆராய்வதால் விளக்கமுறை ஆய்வு முறையும்,
- ❖ சங்ககாலத் தமிழரின் சமூக வாழ்வியலை ஆராய்வதால் சமூகவியல் ஆய்வு முறையும்,

- ❖ சங்ககால மக்களின் தனி மனித - குடும்ப– சமூக நிலைப்பாடுகளை ஆராய்வதால் மானுடவியல் ஆய்வு முறையும்,
- ❖ சங்ககாலத்தின் சமூகப் பின்புலத்தை ஆராய்வதால் வரலாற்றியல் ஆய்வுமுறையும்,

என்று பல்துறை ஆய்வு முறைகளைக் கொண்டு அமைந்துள்ளது.

## ஆய்வு முன்னோடிகள்

இந்த ஆய்வின் முன்னோடி ஆய்வுகளாக,

- ❖ அரங்க. இராமலிங்கம் எழுதிய ‘சங்க இலக்கியத்தில் வேந்தர்’ என்ற நூலும்,
- ❖ கார்த்திகேசு சிவதம்பி எழுதிய ‘பண்டைத் தமிழ்ச் சமூகம்’ (வரலாற்றுப் புரிதலை நோக்கி) என்ற நூலும்,
- ❖ சசிவல்லி.வி.சி எழுதிய ‘பண்டைத் தமிழர் தொழில்கள்’ என்ற நூலும்,
- ❖ சண்முகம் பிள்ளை.மு எழுதிய ‘சங்கத் தமிழர் வாழ்வியல்’ என்ற நூலும்,
- ❖ சிவசுப்பிரமணியன்.ஆ எழுதிய ‘வரலாற்றுப் பொருள்முதல் வாதம் - ஓர் அரிச்சுவடி’ என்ற நூலும்,
- ❖ சுப்பிரமணியன்.ந் எழுதிய ‘சங்க காலச் சமுதாயம்’ என்ற நூலும்,
- ❖ தட்சிணாமூர்த்தி.அ் எழுதிய ‘சங்க இலக்கியம் உணர்த்தும் மனித உறவுகள்’ என்ற நூலும்,
- ❖ நவநீதகிருட்ணன்.மா எழுதிய ‘தமிழ் இலக்கியத்தில் ஆற்றுப்படை’ என்ற நூலும்,

- ❖ பெருமாள்சாமி.வெ எழுதிய 'சங்க காலத் தமிழகத்தின் சமூகநிலை' என்ற நூலும்,
- ❖ மாதையன்.பெ எழுதிய 'சங்க இலக்கியத்தில் குடும்பம்', 'சங்க கால இனக்குழுச் சமுதாயமும், அரசு உருவாக்கமும்' ஆகிய நூல்களும்,
- ❖ ராஜ் கௌதமன் எழுதிய ' பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும் ' என்ற நூலும்,
- ❖ வரதராசன்.வெ எழுதிய 'தமிழ்ப்பாணர் வாழ்வும் வரலாறும்' என்ற நூலும்,
- ❖ வித்தியானந்தன்.சு எழுதிய 'தமிழர் சால்பு' என்ற நூலும்,
- ❖ வேங்கடசாமி மயிலை.சீனி எழுதிய 'பழங்காலத் தமிழர் வாணிகம்' என்ற நூலும், ஆய்வு முன்னோடிகளாகக் கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வின் கருதுகோள்

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முந்தைய சமூகக் கட்டமைப்பு நிலம் சார்ந்து அமைந்தவை என்பதனை சங்க இலக்கியங்களின் துணை கொண்டு அறிய முடிகின்றது. சங்ககாலச் சமூகத்தின் நானிலங்களையும், நிலம் சார்ந்த உற்பத்தியையும், மனித உழைப்பையும் அடிப்படை ஆதாரமாக வைத்தே பொருளாதார நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. சமூக மாற்றத்திற்கும், சமூக மதிப்பிற்கும், நாகரீக வளர்ச்சிக்கும் பொருளாதாரக் காரணிகளே குறியீடுகளாக அமைகின்றன. அந்த வகையில் சங்ககாலச் சமூகத்தில் உற்பத்தி சார்ந்த மனித உழைப்பே சமூக ஏற்றத்தாழ்வை உருவாக்கியது. சங்க காலத்தில் நிலம் சார்ந்த வணிகம் பண்டமாற்று முறையிலும், நீர் சார்ந்த வணிகம் நாணயமாற்று முறையிலும் நடைபெற்றது. அன்று முதல் இன்று வரை உலகை வலம் வந்த தமிழகத்தின் விளைபொருட்களே விலை பொருட்களாக சங்க காலம் முதல் பதிவாகி வருவதனைக் கருதுகோளாக்கியுள்ளது இந்த ஆய்வு.

## ஆய்வுக் கட்டமைப்பு

இந்த ஆய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக

1. சங்ககாலத் திணைசார் குடிகளின் வாழ்வாதாரம் மற்றும் பொருளாதாரப் பதிவுகள்
2. சங்க காலப் பண்டமாற்று மற்றும் நாணய மாற்றுப் பதிவுகள்
3. சங்ககாலக் கலைஞர்களின் சமூகப் பொருளாதாரப் பதிவுகள்
4. சங்ககாலப் புலவர்களின் சமூகப் பொருளாதாரப் பதிவுகள்

என்னும் நான்கு இயல்களைக் கொண்டுள்ளது.

சங்ககாலத் திணைசார் குடிகளின் வாழ்வாதாரம் மற்றும் பொருளாதாரப் பதிவுகள் என்னும் முதலாவது இயலில் வாழ்வாதாரம் என்பது, வாழ்வாதாரத்தைத் தீர்மானிக்கும் காரணிகள், பொருளாதாரம் என்பது, பொருளாதாரத்திற்கான இலக்கணம் , செல்வ இலக்கணம், பொருள்சார் நல இலக்கணம், கிடைப்பருமை இலக்கணம், வளர்ச்சி அடிப்படையிலான இலக்கணம், பொருளாதாரத்தின் பிரிவுகளான நுகர்வு, உற்பத்தி, மாற்று, பகிர்வு, பொதுநிதி இயல், பொருளாதாரச் சமூகவியல், சமூகப் பொருளாதாரம் - விளக்கம், அடித்தளம் என்னும் பிரிவில் உற்பத்தி உறவுகள், உற்பத்தி சக்திகள் , மேற்கட்டுமானம், சங்ககால சமூகத்தின் வாழ்வாதாரம் ஆகியவை குறித்து விளக்கப்படுகின்றன.

திணை - சொல் விளக்கம், திணை சார் குடிகள் என்னும் பிரிவில் குடிகள் - விளக்கம், தொல்காப்பியர் கூறும் நிலம் சார் குடிகள், சங்ககாலச் சமூகத்தின் கட்டமைப்பு முறை, மார்க்சிய சமூக அமைப்பு முறையில் இனக்குழுச் சமூகம், நிலவுடைமைச் சமூகம், நகரச் சமூகம் குறித்தும், அரசு உருவாக்கத்தின் வளர்ச்சி நிலைகள், குறிஞ்சித் திணையின் சமூகப் பொருளாதாரப் பதிவுகள் என்னும் பகுதியில், வேட்டையாடுதலும், தேனேடுத்தலும் கிழங்ககழ்தலும், புன்புல வேளாண்மையும், முல்லைத்திணையின் சமூகப் பொருளாதாரப் பதிவுகள் என்னும்

பகுதியில், கால்நடை வளர்ப்பும், பால் மற்றும் பால்படு பொருள் விற்றலும், முல்லை நிலமும் புன்செய் வேளாண்மையும், மருதத்திணையின் சமூகப் பொருளாதாரப் பதிவுகள் என்னும் பகுதியில், நன்செய் வேளாண்மை, உழவுத்தொழில், நெய்தற் திணையின் சமூகப் பொருளாதாரப் பதிவுகள், என்னும் பகுதியில், நெய்தல் நிலக் குடியிருப்புகள், நெய்தல் நில மக்கள் தொழில்முறைகள், மீன் பிடித்தல், உப்பு உற்பத்தி, பாலைத்திணையின் சமூகப் பொருளாதாரப் பதிவுகள் என்னும் பகுதியில், ஆறலைக் கள்வர் - விளக்கம், பாலைத்திணை சார்ந்த மக்களின் தொழில் முறைகள் குறித்தும் விளக்கப்படுகின்றன.

சங்ககாலப் பண்டமாற்றும் நாணயமாற்றும் என்னும் இரண்டாவது இயலில் நிலம் மற்றும் நீர் சார்ந்த பண்டமாற்று வாணிகம், வணிகர் வாழ்க்கை , உள்நாட்டு வாணிபம், வெளிநாட்டு வாணிபம், நெய்தல் நிலமும் நாணயமாற்று முறையும், சங்ககால நாணய முறை, சங்ககால எடைகள், சங்ககால அளவைகள் என்னும் பகுதியில் முகத்தல் அளவைகள் என்னும் பகுதிகளில் தூணி, பதக்கு, மரக்கால்,அம்பணம்,ஆழாக்கு குறித்தும் நீட்டல் அளவைகளில் அணு, தேத்து, இம்மி, எள், நெல், பெருவிரல், முழம் குறித்தும் விளக்கப்படுகின்றன.

சங்க காலக் கலைஞர்களின் சமூகப்பொருளாதாரப் பதிவுகள் என்னும் மூன்றாவது இயலில், கலை - சொல் விளக்கம், கலைஞன் என்பவன், கலைஞனின் தன்மை, இலக்கணம் கூறும் கலைஞர், இலக்கியம் கூறும் கலைஞர், கூத்தர், பாணர், பொருநர், விறலி ஆகியோர் குறித்தும், சமூக நோக்கில் கலைஞர், பாணர் பதிவுகளில் பாணர் - சொல் விளக்கம், பாணர் வகைகள், யாழ்ப்பாணர் இசைப்பாணர், மண்டைப்பாணர், கலைஞர் வறுமை, புரவலரை நாடிச் செல்லல், கலைஞரும் திணைசார் மாந்தரும், அரசு உருவாக்கத்தில் கலைஞர், கலைஞரும் குறுநில மன்னனும், மன்னனும் கலைஞரும், கலைஞர் ஊடகமாகச் செயல்பட்டமை ஆகியவை குறித்தும் விளக்கப்படுகின்றன.

சங்ககாலப் புலவர்களின் சமூகப் பொருளாதாரப் பதிவுகள் என்னும் நான்காவது இயலில், புலவர் - சொல் விளக்கம், புலவரின் சமூக மதிப்பு, புலவரும்

சான்றோரும், புலவரும் பரிசிலும், புலவரும் மன்னரும் என்னும் பகுதிகளில் வேந்தர் புலவர்களை போற்றுதல், ஒற்றுமை, அறிவுரை, அஞ்சாமை குறித்தும் புலவரின் பகுத்துண்ணும் பண்பு, புலவரும் போரும் ஆகியவை குறித்தும் விளக்கப்-படுகின்றன.

ஆய்வில் கண்டறியப்பட்டவைகளைத் தொகுத்து முடிவுரையாக வழங்கப்பட்டுள்ளன. முடிவுரையைத் தொடர்ந்து இந்த ஆய்வின் மேலாய்வுக்குரிய களங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

இயல் -1

# சங்ககாலத் திணைசார் குடிகளின் வாழ்வாதாரம் மற்றும் பொருளாதாரப் பதிவுகள்

## பொருளடக்கம்

## இயல் -1

# சங்ககாலத் திணைசார் குடிகளின் வாழ்வாதாரம் மற்றும் பொருளாதாரப் பதிவுகள்

### 1.1 முன்னுரை

திணைசார் குடிகளின் வாழ்வாதார மற்றும் சமூகப் பொருளாதார ஒழுங்கமைவுகளைப் பரீசிலிக்கும் போது நானிலத்தாரது வாழ்வியலை ஆராய்வது அவசியமாகின்றது.சங்ககால சமூகத்தின் பொருளாதாரச் செயற்பாடுகளுக்கு நிலமும் கருப்பொருளுமே அடிப்படை. திணைக்கோட்பாட்டினை ஆராய்வதில் சிக்கல் இருப்பினும், திணைப்பகுப்பிற்கு நிலமும் கருப்பொருளுமே முதன்மை ஆதாரமாகும். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நானிலங்களைக் கொண்டு, அந்நிலமக்களின் தொழில் முறைகளை ஆராய்ந்து அணுக வேண்டியது அவசியமாகின்றது. திணை சார்ந்த மக்களையும், அவர்கள் சார்ந்த தொழில் முறைகளாக, குறிஞ்சி நில வேட்டையாடுதல், தேனெடுத்தல், கிழங்கு அகழ்தல்,புன்புல வேளாண்மையும், முல்லை நில ஆநிரைக் கவர்தல் , பால் - பால்படு பொருட்களை விற்றலும் , மருத நில உணவு உற்பத்தியும், நெய்தல் நிலக் கடலும் கடல்சார்ந்த மீன் விற்றலும், பாலை நில வழிப்பறித்தொழிலும் திணை மக்களின் பொருளாதாரப் பயன்பாட்டினை அறிவதற்கு சான்றாகும் என்பதனை விளக்குகின்றது இந்த இயல்.

### 1.2 வாழ்வாதாரம்

வாழ்வாதாரம் என்பது மனிதன் உயிர்வாழத் தேவைப்படும் பொருட்களின் தேவையாகும். அதாவது மனித வாழ்க்கைக்கு அடிப்படையான உணவு, உடை, உறைவிடம் போன்றவை இதில் அடங்கும். தனிமனிதனின் வாழ்வாதாரமே ஒட்டு மொத்த சமூகத்தின் வாழ்நிலையைத் தீர்மானிக்கிறது. “ தனிமனித வாழ்வின் சமூகப் பொருள் உற்பத்தியில் மனிதர்கள் திட்டவட்டமான உறவுகளை மேற்கொள்கிறார்கள். இவை இன்றியமையாதன: அவர்களது சித்தத்திலிருந்து சுயேட்சையாக நிற்பன: இந்த உற்பத்தி உறவுகள் அவர்களது பொருள்

வகையான உற்பத்தி சக்திகளின் வளர்ச்சியிலுள்ள ஒரு திட்டவட்டமான கட்டத்துக்கு இணைப் பொருத்தமாக அமைகின்றன. இந்த உற்பத்தி உறவுகளின் கூட்டுத் தொகை சமூகத்தின் பொருளாதாரக் கட்டமைப்பாக, உண்மையான அடித்தளமாக அமைகிறது. இவ்வடித்தளத்தின் மீது ஒரு சட்ட மேலடுக்கும் அரசியல் மேலடுக்கும் எழுகின்றன. இந்த அடித்தளத்துக்கு இணைப் பொருத்தமாக சமூக உணர்வின் திட்டவட்டமான வடிவங்கள் அமைகின்றன. மனிதர்களின் வாழ்நிலையைத் தீர்மானிப்பது அவர்களது உணர்வு அல்ல, மாறாக அவர்களது சமூக வாழ்நிலையே அவர்களது உணர்வைத் தீர்மானிக்கிறது."[1] மனிதனின் வளர்ச்சிப் போக்கே, சமூகத்தின் வளர்ச்சிப் போக்கினைத் தீர்மானிக்கிறது.

### 1.3 வாழ்வாதாரத்தைத் தீர்மானிக்கும் காரணிகள்

பொருளாதாரமும் சமூகமும், வாழ்வாதாரத்தைத் தீர்மானிப்பதில் முக்கியப் பங்கு வகிக்கின்றன. சமூகத்தின் பொருளாதாரமே வாழ்க்கை ஆதாரமாகக் கொள்ளப்படுகிறது. ஆகையால் சமூகம் குறித்தும், பொருளாதாரம் குறித்தும் அணுக வேண்டியது அவசியமாகிறது.

#### 1.3.1 பொருளாதாரச் சமூகவியல்

பொருளாதாரச் சமூகவியலின் அடிப்படைக் கருத்து சமூகத்தில் பொருளாதாரத்தைப் பற்றி ஆராய்வதாகும். பொருளாதாரச் செயல்கள் சமூகத்தில் எவ்வாறு முறைப்படுத்தப்படுகின்றன என்பதையும் ஆராய்கிறது."[2]

#### 1.3.2 ஜான் மேனார்டு கீன்சு என்ற அறிஞரின் கூற்று

" பொருளாதார அமைப்பு நிலையாக இருக்க வெண்டுமெனில் மக்களின் பங்கு முக்கியமானதாகும். பொருளாதார அமைப்பில் சமூகத்தின் வருவாய் மிகவும் முக்கியமானது என்கிறார். தனிமனிதனைப் பொறுத்தவரை அவன் செலவழிக்கும் மற்றும் சேமிக்கும் பணத்தின் கூட்டுத் தொகை தான் அவனது வருவாய். சமூகத்தின் வருவாய் என்பது, தனி மனிதர்கள் வாங்கப் போகும் பொருள்கள், தயாரிக்கப் போகும் பொருள்களின் மீது செய்யும் முதலீடு ஆகியவையாகும்."[3]

பொருளாதாரத்தையும் வாழ்வாதாரத்தையும், தனி மனிதர்களிடமிருந்தும் சமூகத்திடமிருந்தும் பிரிக்க இயலாது.

### 1.4 பொருளாதாரம்

மனித வாழ்க்கைக்குத் தேவைப்படும் மூலப் பொருட்கள் அனைத்தும் பொருளாதாரத்தைத் தீர்மானிக்கின்றன. மனிதன் தன் தேவைகளை நிறைவேற்ற விரும்பும் பொருளினாலோதான், பொருள் ஆக்கத்திற்கான வாழ்க்கை ஏற்படுகின்றது. மனிதன் பொருளை விரும்பவில்லை என்றால், அதற்கான தேவை இருக்காது. இருப்பினும் மனிதன் பொருள் இல்லாமல் வாழ்தல் இயலாது. ஆகையால் மனிதனுடைய பொருள் தேவைகளை அடிப்படையாகக் கொண்டே பொருளாதாரம் தனித்துறையாக வளர்ந்துள்ளது. அந்த வகையில் பொருளாதாரம் குறித்த பல்வேறு சிந்தனைகளை அறிஞர்கள் எடுத்துக் கூறியுள்ளார்.

#### 1.4.1 பொருளாதாரத்திற்கான இலக்கணம்

பொருளாதாரம் - பொருள் + ஆதாரம். பொருளாதாரம் குறித்த தெளிவான விளக்கங்களை அறிவது அவசியம் என்றுணர்ந்தே பொருளியல் அறிஞர்கள் அதற்கு இலக்கணம் வகுத்துள்ளனர்.

##### 1.4.1.1 பொருளாதாரம் குறித்த செல்வ இலக்கணம்

பொருளாதாரம் செல்வத்தைப் பற்றிய அறிவியல் என்று ஆடம்ஸ்மித் விளக்கம் தருகிறார். “அரசியல் பொருளாதாரம் செல்வத்தின் இயல்பைப் பற்றியும், அதன் உற்பத்தி மற்றும் பகிர்வு பற்றிய விதிகளைப் பற்றியும் விளக்க முற்படுது”[4]

“அரசியல் பொருளாதாரம் அல்லது பொருளாதாரம் செல்வம் தொடர்புடைய அறிவேயாகும்.”[5] என்று வாக்கர் இலக்கணம் தருகிறார்.

### 1.4.1.2 பொருள்சார் நல இலக்கணம்

பொருளாதாரத்திற்கு கிடைத்த அவப்பெயரை மாற்றி பொருளாதாரம் , ஒரு சமூக இயல் என்னும் தகுதியை அதற்குக் கொடுத்தவர் ஆல்பிரட் மார்ஷல் என்னும் அறிஞர், “சாதாரண மனிதன் அன்றாட வாழ்க்கையில் எவ்வாறு ஈடுபடுகிறான் என்பதை ஆராய்கிறது. நல்வாழ்கைக்குத் தேவையான பொருட்களை எப்படி பெறுவது? எப்படிப் பயன்படுத்துவது? என்பனவற்றோடு மட்டும் நெருங்கிய தொடர்பு கொண்ட தனி நபருடைய நடவடிக்கை, சமூக நடவடிக்கை ஆகிய இரண்டையும் பற்றி அது ஆய்வு செய்கிறது”[6] என்று விளக்கம் தருகிறார்.

### 1.4.1.3 கிடைப்பருமை இலக்கணம்

ராபின்ஸ் பொருளாதாரத்திற்கான புதியதோர் இலக்கணம் தந்துள்ளார். “பொருளாதாரம் என்பது கிடைப்பருமையான மாற்று வழிகளில் பயன்படக்கூடிய இயல்புகளைக் கொண்ட, சாதனங்களைக் கொண்டு விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ள மனிதன் மேற்கொள்ளும் நடவடிக்கைகளை ஆராய்வது தான் பொருளாதார இயல்”[7] என்று லயனல் ராபின்ஸ் விளக்கம் தருகிறார்.

### 1.4.1.4 வளர்ச்சி அடிப்படையிலான இலக்கணம்

பொருளியல் என்பது “குறிப்பிட்ட காலக் கட்டத்தில் பல்வேறு மக்கள் மற்றும் ஒரு சமுதாயத்தின் பிரிவுகளுக்கிடையே இன்றைய நுகர்வுக்காகவும், எதிர் காலத்திற்காகவும் , பல்வேறு பொருள்களை உற்பத்தி செய்து, அவற்றைப் பகிர்ந்தளிப்பதற்காக பணத்தைப் பயன்படுத்தியோ , இல்லாமலோ பல்வேறு வகையில் பயன்படக்கூடிய கிடைப்பருமையான உற்பத்தி மூலங்களை ஈடுபடுத்தி மனிதனும் சமுதாயமும் எவ்வாறு தெரிவு செய்கிறார்கள்”[8] என்பதைப் பற்றி ஆராய்வது.

### 1.4.2 பொருளாதாரத்தின் பெரும் பிரிவுகள்

பொருளாதாரத்திற்கு உயிர் மூலங்களாக இருப்பவை பொருளாதாரத்தின் பெரும் பிரிகளாகக் கருதப்படும் நுகர்வு, மாற்று, பகிர்வு, பொதுநிதி என்பனவாகும். இது குறித்து விரிவாகக் காணலாம்.

**“(1) நுகர்வு**

எல்லாப் பொருளாதார நடவடிக்கைகளுக்கும் மையமாக உள்ள மனித விருப்பங்களைப் பற்றி இப்பிரிவு கூறுகிறது. பண்டங்கள் பணிகள் இவற்றை நுகர்வதால் மனித விருப்பங்கள் நிறைவேற்றப்படுகின்றன. எடுத்துக் காட்டாக மனிதன் தனது விருப்பத்தை நிறைவேற்ற உணவை உண்கிறான். தண்ணீர் குடிக்கிறான், உடை உடுத்துகிறான். இந்த நடவடிக்கைகளை நுகர்வு என்கிறோம்.

**(2) உற்பத்தி**

மனித விருப்பத்தை நிறைவேற்ற பண்டங்கள், பணிகள் ஆகியவற்றை உற்பத்தி செய்யப்பட வேண்டும். விருப்பங்கள் உற்பத்திக்கு கொண்டு செல்கின்றன. உற்பத்தி பயன்பாட்டை உருவாக்குவதாகும். பொருளின் மதிப்பை அதிகப்படுத்தும் எல்லா நடவடிக்கைகளும் இதில் அடங்கும்.

**(3) மாற்று**

இந்த உலகம் சிக்கலானது. தான் பயன்படுத்தும் பொருள் அனைத்தையும் தானே உற்பத்தி செய்ய இயலாது. உலகத்தில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு உற்பத்தித் துறையில் ஈடுபட்டுள்ளனர். எடுத்துக்காட்டாக ஒரு விவசாயி பயிர்த் தொழிலிலும், ஒரு நெசவாளர் நெசவுத்தொழிலிலும் ஈடுபட்டுள்ளார். ஒவ்வொரு உற்பத்தியாளரும், தன்னிடமுள்ள உபரிப்பொருளைக் கொடுத்து பிற பொருளைப் பெறுகிறார்கள். இவ்விதமான ”மாற்று” அங்காடிகளில் நடைபெறுகிறது. எனவே ‘மாற்று’ என்ற பிரிவில் பொருள்களை வாங்குதல், விற்றல் தொடர்பான பேரங்கள், அங்காடிகளின் இயல்புகள் , பல அங்காடிகளில் விலை நிர்ணயம் போன்றவை இடம் பெறுகின்றன. மாற்றுக்கு அடிப்படை பணமாகும்..

## (4) பகிர்வு

முன்னர் குறிப்பிட்ட நான்கு காரணிகளால் ஒரு நாட்டின் தேசிய வருமானம் உருவாக்கப்படுகிறது. அவ்வாறு உருவாக்கப்பட்ட தேசிய வருமானம் அவற்றிற்கிடையே பகிர்ந்தளிக்கப்படுகிறது. இவ்வாறு பகிர்ந்தளிக்கப்படுவதை பற்றி குறிப்பிடுவது பகிர்வாகும். இப்பகிர்வில் நிலத்துக்கு வாரமும், உழைப்பிற்கு கூலியும், முதலுக்கு வட்டியும், அமைப்பிற்கு லாபமும் கிடைக்கிறது.

## (5) பொதுநிதி இயல்

தற்காலத்தில் பொது நிதி இயல் என்பது சேர்க்கப்பட்டுள்ளது. இவ்வியல் அரங்கத்தின் கடமைகள், பொது வருவாய், பொதுச் செலவு, பொதுக்கடன், நிதி, நிர்வாகம் ஆகியவை பற்றி குறிப்படுகின்றது. இந்த ஐந்து பிரிவுகளும் ஒன்றொடொன்று நெருங்கிய தொடர்பு உடையவை.”[9] இவ்வாறு இவ்வைந்து பிரிவுகள் குறித்து விவரிக்கின்றன.

பொருளாதாரம் குறித்த சிந்தனையை ஒவ்வொரு மனிதனும் கட்டாயம் அறிந்திருக்க வேண்டிய ஒரு செயல்பாடாகும். மனிதன் தன் வாழ்வின் முன்னேற்ற நிலையை அடைய சமூகத்தின் பொருளாதார நிலை துணை புரிகிறது.

## 1.5 சமூகப் பொருளாதாரம்

ஒரு சமூகம் அமைப்பு ஒரு கட்டத்திலிருந்து மற்றொரு கட்டத்திற்கு மாறுவதற்கும், சமூகம் ஏற்றத்தாழ்வு பெறுவதற்கும் அடிப்படைக் காரணமாக அமைவது அச்சமூகத்தில் நிகழும் சமூகப் பொருளாதார நிலையே. ஒரு சமூகம், நாடு, இயல்பான சமூகமாகத் திகழ்வதற்கு அச்சமூகத்தில் , நாட்டில் நிகழும் பொருள் உற்பத்திதான் அடிப்படை காரணமாக அமைகிறது. மனித சமூகங்களின் உற்பத்தி, பங்கீடு, நுகர்வு ஆகியவற்றை ஒழுங்கு செய்யும் நிறுவனமாக சமூகப் பொருளாதார அமைப்பு செயல்படுகின்றது.

“ எந்த ஒரு சமூகப் பொருளாதார அமைப்பிலும், அடித்தளமும் மேற்கட்டுமானமும் அடிப்படையான கட்டமைப்புக் கூறுகளாகும். அவையே அந்த

சமூகப் பொருளாதார அமைப்பின் பண்பு ரீதியான தனித்தன்மையை வழங்குகின்றன. அந்த அமைப்பிற்கும், பிற அமைப்புகளுக்கும் இடையிலான வேறுபாடுகளை அவையே சுட்டிக்காட்டுகின்றன. அடித்தளமும் மேற்கட்டுமானமும் தவிர ஒரு சமூகப்பொருளாதார அமைப்பு தன்னுள் சமூக வாழ்வின் கூறுகளையும் கொண்டுள்ளது. இருப்பினும் அடித்தளமும், மேற்கட்டுமானமுமே அச்சமூக அமைப்பை ஓர் ஒன்றிணைந்த வடிவமாக, அதன் பிரத்தியேக இயல்பை நிர்ணயிக்கின்றன"[10] எனவே சமூகப் பொருளாதாரத்தில் அடித்தளத்தையும் மேற்கட்டுமானத்தையும் விரிவாக தெரிந்து கொள்வது அவசியமாகிறது.

### 1.5.1 **அடித்தளம்**

ஒரு சமூதாயத்தின் வரலாற்றை முழுமையாக அறிவதற்கு எதனை ஆராய வேண்டும் என்ற கேள்விக்கு விடையாக ஒரு சமூகத்தின் பொருளுற்பத்தி முறையையே ஆராய வேண்டும் என்று மார்க்சியம் கருதுகிறது. ஒரு சமுதாயத்தின் பொருளுற்பத்தி முறையே ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தின் அடித்தளம் . உற்பத்தி சக்திகளும் ,உற்பத்தி உறவுகளும் ஒரு சமுதாயத்தின் பொருளுற்பத்தி முறை எனக் கூறப்படுகிறது.

#### 1.5.1.1 **உற்பத்தி சக்திகள்**

"உழைப்பு + உழைப்புக் கருவிகள் + கட்டிடம் + போக்குவரத்து மூலவளங்கள் = உற்பத்தி சக்திகள், மனித உழைப்பும் அவன் பயன்படுத்தும் கருவிகளும் , உற்பத்தி செய்யும் இடங்கள், பயன்படுத்தும் போக்குவரத்துச் சாதனங்கள், மூலப் பொருட்கள் இவையனைத்தும் இணைந்து உற்பத்தி சக்திகளாக மாறுகின்றன"[11]

#### 1.5.1.2. **உற்பத்தி உறவுகள்**

"பொருள்களை உற்பத்தி செய்யும் நிகழ்ச்சியில் மனிதர்களுக்கிடையே நிலவும் உறவு முறையினை உற்பத்தி உறவுகள் என்றழைக்கிறோம்.

(1) ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தில் உற்பத்திக் கருவிகள் யாருக்குச் சொந்தமாக இருந்தன?

(2) உற்பத்தியான பொருளுக்கு விலை நிர்ணயம் செய்யும் உரிமையாளரிடம் இருந்தது.

(3) உற்பத்திப் பொருள்கள் சமுதாயத்தில் எந்த முறையில் விநியோகம் செய்யப்பட்டன?

என்ற கேள்விகளுக்கு விடை கண்டால் ஒரு சமுதாயத்தில் நிலவிய உற்பத்தி உறவுகளை அறிந்து கொள்ளலாம். இக்கேள்விகளுக்கு விடைகள் ஒரு குறிப்பிட்ட சமுதாயத்திலுள்ள மக்கள் வாழ்க்கை நிலைமையினைப் புரிந்து கொள்ளத் துணைபுரியும்”[12] இவ்வாறு அடித்தளம் குறித்து மார்க்சியம் விளக்கம் தருகிறது.

1.5.2 **மேற்கட்டுமானம்**

ஒரு சமூகத்தின் அடித்தளமே மேற்கட்டுமானத்தை தீர்மானிக்கிறது. அதன் மேற்கட்டுமானமாக “அரசியல், சட்டவியல், தத்துவஞானம், அறிவியல், அழகியல் மற்றும் மதக் கருத்துக்கள், ஒத்த சித்தாந்த உறவுகள் மற்றும் அவற்றுடன் பொருந்திய நிறுவனங்களையும் கொண்ட அமைப்பாகும். அரசு, அரசியல் கட்சிகள், திருச்சபை இதரவை இதில் அடங்கும்.”[13]

வரலாற்றின் செயல்பாடுகளை விளக்குவதில் மேற்கட்டுமானம் முக்கியப்பணியை மேற்கொள்கிறது.

மேற்கண்ட செயல் கூறுகளின் தொகுப்பே தனிமனிதனின் வாழ்வாதாரத்தையும் , அவன் சார்ந்த குடும்பத்தையும், அது பிரதிபலிக்கும் சமூகத்தின் வாழ்வாதாரத்தையும் அறிந்து கொள்ள மிகப் பெரிய தூண்டுகோலாகவும், கருவியாகும் அமைகின்றது.

## 1.6 சங்ககாலச் சமூகத்தின் வாழ்வாதார மற்றும் பொருளாதாரம்

வாழ்வாதாரம் என்பது வாழ்க்கைத் தேவையை நிறைவு செய்யும் சக்திகளின் கூட்டமைப்பே ஆகும். சங்ககால மக்கள் நிலத்தையும் நீரையும் அடிப்படையாக வைத்தே வாழ்க்கைத் தேவையை நிறைவு செய்தனர். சங்ககாலச் சமூகத்தின் பொருளாதாரத்தை தீர்மானிக்க, திணை மக்களும் , அம்மக்கள் சார்ந்த உழைப்பும் உற்பத்தியும் துணை புரிகின்றன. சங்ககால சமூகத்தின் பொருளாதாரத்தை அறிந்து கொள்ள சங்க இலக்கியங்கள் உதவுகின்றன. அந்த வகையில் திணைசார் குடிகளின் சமூகப் பொருளாதாரம் குறித்து விளக்குகிறது இந்த இயல்.

## 1.7 திணை - சொல் விளக்கம்

திணை என்னும் சொல்லுக்கு உரையாசிரியரான இளம்பூரணர், "பொதுக்கருத்து அல்லது உள்ளடக்கம்"[14] என்று விளக்கம் தருகிறார். மற்றொரு உரையாசிரியரான நாச்சினார்க்கினியர் திணை என்னும் சொல்லை "ஒழுக்கம் அல்லது நடத்தை"[15] என்று வகைப்படுத்திக் கூறுகிறார்.

தினணப்பகுப்பு பற்றி ஆராய்ந்த கார்த்திகேசு சிவதம்பி "நச்சர் இச்சொல்லுக்கு நிலம் என்றும், குலம் அல்லது குடும்பம் என்றும் உரை எழுதுகிறார்."[16] குழு (கணம்) அல்லது குடியிருப்பு என்ற பொருளில்திணை நிலைப் பெயர் என்ற சொற்றொடர் வருகிறது. திணை என்ற சொல்லுக்கு ஆரம்பத்தில் குழு (கணம்) குடும்பம், குடியிருப்பு என்ற பொருள் உண்டு"[17]

"திணை என்பது நிலம், இடம், பகுதி, மனை வீடு, இனம் சாதி, குலம், குடும்பம், நடத்தை, பெயர்களில் ஒரு வகை என்ற பொருள்களையும் உடையது. இச்சொல்லுக்கு நல்லகுடி, உயர்குடி"[18] என்ற பெயரும் உண்டு.

"பெயர் சொல்லின் பிரிவுகளைச் சுட்டிக்காட்ட திணை என்ற சொல்லைப் பயன்படுத்துவதானது, இப்பெயர் பிரிவு அல்லது குழு என்ற பொருள் உடையது என்பதற்குச் சான்றாகும். தமிழில் பெயர்ச் சொற்கள் உயர்திணை, அஃறிணை

என்ற பாகுபடுத்தப்பட்டு உள்ளன. கால்டுவெல் இதனை "உயர்சாதிப் பெயர்ச்சொல் என்றும், சாதியற்றப் பெயர்ச் சொல் (Ligh Caste and Casteless) என்றும் மொழி பெயர்த்துள்ளார்."[19]

## 1.8 திணை சார் குடிகள்

திணை உருவாக்கத்திற்கு அடிப்படையாக நிலவியற்கை கூறுகள் அமைகின்றன. நில இயல்பானது நானிலங்களின் தன்மையினை வைத்து அமைந்துள்ளது. நானிலப்பகுதிகளிலும் வாழ்ந்த மக்கள் பலரும் வேறுபட்ட சமூகப் பிரிவுகளையும், வாழ் நெறிகளையும் உடையவர்களாக இருந்தமையை அறிய சங்க இலக்கியங்களில் சான்றுகள் அதிகம். நானிலம் குறித்துக் கூறும் தொல்காப்பியர் ஒவ்வொரு நிலத்தோடும் உலகம் என்ற சொல்லை இணைத்துக் கூறுகிறார்.

**"மாயோன் மேய காடுறை உலகமும்**

**சேயோன் மேய மைவரை உலகமும்**

**சேந்தன் மேய தீம்புனல் உலகமும்**

**வருணன் மேய பெருமணல் உலகமும்**

**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**

**சொல்லிய முறையால் சொல்லவும் படுமே"[20]**

நானினலத்திற்கு உரித்தான தனிப்பண்புகளை அறிந்து கொள்ள கருப்பொருள் உதவுகின்றன. "பறவை விலங்கு முதலான உயிரினமும், தாவரமும் ஆகிய ஒவ்வொரு நிலத்திற்கும் ஒத்த நிலையில் அமைகின்ற இயற்கைக் கூறுகள் செய்யுளிற் கூறப்பெறும் கருப்பாருள் ஆகின்றன. ஒவ்வொரு நிலமும் அதற்குரிய தெய்வம், உணவுப் பொருள், மாவடை, மரவடை, குறிப்பிட்ட முழவு வகைகள் வேறுபட்ட தொழில்கள், இசை தனித்தன்மை, இசைக்கருவிகளையும் பிறவற்றையும் பெற்றிருந்தது. இதனால் வெவ்வேறு நிலங்களும் தத்தமக்குரிய பண்புகளையும்

வளர்ச்சியையும் உய்த்திருந்தன என்று கூற இடந்தருகின்றது."[21] இக்கருத்தினை தொல்காப்பிய நூற்பா,

**"தெய்வம், உணவே, மா, மரம், புள், பறை**

**செய்தி, யாழின் பகுதியொரு தொகைஇ**

**அவ்வகை பிறவும் கரு என மொழிப"[22]**

எடுத்துக்காட்டுகிறது. நானிலங்களின் சமச்செறிவும், வெப்பநிலையின் இயல்பான மாற்றங்களும் ஒவ்வொரு நிலத்தின் தாவர உயிரினங்களும், பறவை, விலங்கு, உணவுப் பொருள்களும், மக்களின் வாழ்க்கைத் தொழில்களும், திணை சார் குடிகளின் அடிப்படை ஆதாரங்களாகத் திகழ்கின்றன.

### 1.8.1 குடிகள் - குறித்த விளக்கங்கள்

சங்க இலக்கியங்களில் குறிக்கப்பெறும் திணை சார்ந்த குடிகள் என்பவர்கள் நானிலத்திற்குரிய மக்கள் ஆவர். குடிகள் என்பதற்கு,

**"கற்றோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு**

**முற்றோன்றி மூத்தக் குடி"[23]**

என்று தமிழினத்தின் தொன்மையினைக் குறிப்பிட முனைந்த பண்டை இலக்கணத்தார் 'குடி' என்ற சொல்லினை மக்கள் தொகுதியினைக் குறிக்கப் பயன்படுத்தியுள்ளமை புலப்படுகின்றது.

சங்க இலக்கியங்களில் "குடி என்பது பொதுவாக இரத்த உறவு கொண்ட தாயாதிகளைக் கொண்ட குடும்பங்களின் தொகுதியைக் குறிப்பதாயிருந்தது. குடிக்கு இணைச் சொற்களாக இல், இடம், திணை, குலம்"[24] போன்றவை காணப்படுகின்றன.

“குடி எனும் சொல் சங்க காலத்தில் மக்கள் கூட்டத்தைக் குறித்தது. குழு, ஊர், குடும்பம், வீடு என்ற பொருளிலும் வழங்கப் பெறுகின்றது என்றும், குடி என்ற சொல் சங்க இலக்கியங்களில் இருநூற்றி ஐம்பத்து எட்டு இடங்களில் ஆளப்பட்டுள்ளது.”[25] என்று குறிப்பிடுகிறார்.

“குடி என்பது சமுதாயத்தின் அடிப்படைக்கூறு. குடி என்பது (Linage) என அழைக்கப்படுவதாகும். அது தானே தன்னை ஆட்சி செய்து கொள்ளும் தன்மையுடையது.”[26]

இக்கருத்துக்களின் அடிப்படையில் குடி என்பது மக்கள் கூட்டத்தையும் குழுவையும், ஊரையும், குடும்பத்தையும், குலத்தையும், பழைமையான குடிச்சிறப்பையும் குறிக்க பயன்பட்டது என்பதை அறிய முடிகின்றது.

### 1.8.2 நிலம் சார்ந்த குடிகள்

ஒவ்வொரு நிலத்துக்குரிய மக்கட் பெயர்களும், தொழில் முறையால் அமைந்த பெயர்களும், நிலத்துக்குரிய பண்புகளின் அடிப்படையில் குறிக்கப்பெற்றன. தொல்காப்பியத்தில் பெயர்கள் இரு பிரிவுகளாக வகுக்கப் பெற்றுள்ளன. அவை நிலம் அல்லது திணையால் அமைந்த பெயர்கள், தொழிலால் அமைந்த பெயர்கள் எனக் குறிப்பிடப்படுகிறது. இதனை உணர்த்தும் நூற்பா

**“பெயரும் வினையும் என்றுஆ இருவகைய**

**திணைதோறும் மரீஇய திணை நிலைப் பெயரே”**[27]

ஒவ்வொரு திணைக்கும் மரபு பற்றி வரும் பெயரும், தொழில் பற்றி வரும் பெயரும் எனப்பெயர் இரு வகைப்படும்.

சங்க காலம் நான்கு வகையான ஒழுக்கங்களைக் கொண்ட, இயற்கைப் பின்னணியில் அமைந்த வாழ்வியல் நெறிகளைக் கொண்ட, திணை நிலைச் சமுதாயங்களின் ஒட்டு மொத்த வாழ்க்கை நடைமுறைகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. மலைப்பகுதி, காட்டுப்பகுதி, வயற்பகுதி, கடற்பகுதி எனும்

நானிலங்களின் செயற்பாடுகளை ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்த, நான்கு வகை மக்களின் வாழ்வியலை எடுத்துக் காட்டுவது அவசியமாகிறது. ஒவ்வொரு நிலப்பிரிவையும் சார்ந்த இயற்கை வளங்கள், அந்நிலத்துக்குரிய நாகரீக வளர்ச்சிக்குத் தூண்டுதலாய் அமைந்தன.

ஒவ்வொரு நிலத்துக்குரிய மக்கள் கூட்டத்தை "ஆயர், பொதுவர் (முல்லை) கானவர், குன்றவர் (குறிஞ்சி) நாட்டவர், ஊரவர் (மருதம்) பரதவர், துறையோர் (நெய்தல்) என்று வழங்கினர். மக்கள் தாம் வாழிடத்தின் பெயராலும் குறிக்கப்பட்டனர். கோவலர் (முல்லை) வேட்டுவர் (குறிஞ்சி) உழவர் (மருதம்) திமிலர் (நெய்தல்) ஆகியன ஒவ்வொரு நிலத்திலும் தொழிலால் அமைந்த பெயர்களாகும்."[28]

"குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் 'குறவர்' என்றும் 'குன்றவர்' என்றும் 'இறவுளர்' என்றும் அழைக்கப்பட்டார்கள்."[29] முல்லை நிலத்தில் வாழ்ந்த மக்கள் இடையர், எயினர் (எயினர் - வேடர் ) என அழைக்கப்பட்டார்கள்."[30] "நெய்தல் நிலத்து மக்கள் பரதவர் என்றும், பட்டினர் என்றும் பெயர் பெற்றனர்."[31]

"குறிஞ்சி நில மக்கள் கானவர், குறவர், குன்றவர் என்று அழைக்கப்பட்டனர்."[32] "முல்லை நிலத்து மக்களை கோவலர், ஆயர், அண்டர், இடையர் என்னும் பெயர்களால் அழைப்பர்."[33] மருத நிலத்து வாழும் மக்கள் "களமர், உழவர்"[34] எனப்படுவர். "நெய்தல் நில மக்கள் பெருங்கடற் பரதவர் எனப்படுவர்."35 பாலை நிலத்து வாழும் மக்கள் "மறவர், எயினர்"[36] எனப்படுவர்.

மருத நிலத்தில் வாழும் மக்கள் "உழவர், கடையர், உழத்தியர் கடைசியர் என்போர் பொது மக்களாவர். இவர்களில் உயர்ந்தோரை ஊரன், மகிழ்நன், கிழத்தி, மனைவி"[37] என்று அழைத்தனர். முல்லை நிலத்தில் வாழ்ந்த மக்கள் "இடையர் எனவும், குற்றமில்லாத கோவலர் எனவும், அறம்புரி நெஞ்சுடைய ஆயர்"38 எனவும் கூறுவர். "குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் குறவர்" என்றனர். குறவருள் செல்வத்தாலும் குடியாலும் உயர்ந்தவர் பொருப்பன், சிலம்பன், வெற்பன்,

கொடிச்சி எனப் பெயரிட்டு அழைக்கப்பட்டனர்."[39] "நெய்தல் நில மக்கள் சேர்ப்பன், புலம்பன், பரத்தி, நுளைச்சி ஆகியோர் உயர்ந்தவராகக் கருதப்பட்டனர். நுளையர், நுளைச்சியர், பரதவர், பரத்தியர், அளவர், அளத்தியர் என்போர் பொது மக்களாவர்."[40]

"பாலை நிலத்து விடலை, காளை, மீளி, எயிற்றி என்போர் உயர்ந்த மக்களாவர். எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர் என்போர் பொது மக்களாவர்."[41]

இவ்வாறு ஒவ்வொரு திணை சார்ந்த குடிகள் தங்களுக்குரிய தொழில் முறையால் பல்வேறு பெயர்களால் வழங்கப்பட்டமையை அறிய முடிகின்றது.

## 1.9 திணை சார் குடிகளின் சமூகப் பொருளாதாரப் பதிவுகள்

திணை சார் குடிகளின் சமூகப் பொருளாதாரம் என்பது நிலம் சார்ந்ததாகவும், நிலம் சார்ந்த தொழில் முறையை கொண்டு அமைந்ததாகவும் காணப்படுகிறது. சங்க இலக்கியங்களில் பொருளாதாரம் என்பது திணை மக்களின் வாழ்வாதாரச் செயற்பாடுகளை கொண்டே அமைந்துள்ளது. திணை சார் சமூகப் பொருளாதாரமானது, குன்றுகளிலிருந்தும், மலைகளிலிருந்தும், சமவெளிப் பகுதிகளிலும், நடை பெற்ற உற்பத்தி முறைகளையும் , அதன் வளர்ச்சியில் ஏற்படும் மாற்றங்களையும் எடுத்துக் கூறுவதாக அமைகிறது.

சங்க கால மக்களின் பாகுபாடு புவியியல் அடிப்படையில் அமைந்தது எனலாம். மனித சமூகத்தின் சமூகப் பொருளாதார உருவாக்கங்களை அறிந்து கொள்ள வரலாற்று ரீதியான செயற்பாடுகள் பெரிதும் துணை நிற்கின்றன.

"திராவிடற்கு முற்பட்ட தொன்மையான தமிழ் மக்கள் குன்றுகளிலிருந்தும், காடுகளிலிருந்தும் , வளமான சமவெளிப் பகுதிக்கும் அல்லது வேறு கடற்கரைப் பகுதிக்கும் சென்ற வரலாற்று ரீதியான இடப் பெயர்ச்சியையும் அல்லது வேறு வகையில் சொல்லப்போனால் புதிய கற்கால வேடர் நிலைகளிலிருந்து தொடங்கி இடைப்பட்ட நிலையிலுள்ள ஆட்டுமந்தை மேய்ப்பாளர் நிலையைக் கடந்து

நிலைத்த வாழ்க்கையை உடைய உழவன், மீன் பிடிப்பவன் நிலைக்கு வந்த வளர்ச்சியையும் , இவ்வைந்து பிரிவுகளும் வெளிப்படுத்துவது சாத்தியமே”[42]

“திணைக்குரிய பொருளாதார நடவடிக்கைகளில் அடித்தளமான பொருள் உற்பத்தி முறைக்கும், மேல்கட்டுமானத்தில் இடம் பெறும், பண்பாட்டிற்கும் இடையிலான உறவினை சங்க இலக்கியங்கள் சுட்டும். உரிப்பொருளின் துணையுடன் உய்த்தறியலாம். ஐந்து திணைகளாக நிலப்பகுதியைப் பிரித்த நம் முன்னோர்கள் ஒவ்வொரு திணைக்கும் உரியனவாக முதல் - கரு - உரி மூன்று பொருட்களைக் குறிப்பிட்டுள்ளனர்.”[43] ஒரு திணைக்குரிய கருப்பொருளில் நடைபெறும் பொருளாதார நடவடிக்கைக்கு தொழிலே அடிப்படையாக அமைகின்றது.

திணைச் சமூகத்தின் பொருளாதாரப் பதிவுகளை ஆராய்வதற்கு ஆ.சிவசுப்பிரமணியனின் பொருளாதார நடவடிக்கைகளும், கலாநிதி கா.சிவதம்பியின் பொருளாதார கொள்கைகளும் அடிப்படையாக அமைகின்றன. “திணை சார் பொருளாதார நடவடிக்கைகளாக குறிஞ்சித் திணையின் வேட்டையாடுதல், தேன் எடுத்தல், கிழங்கெடுத்தல், புன்புல வேளாண்மையும், முல்லைத் திணையின் கால்நடை வளர்ப்பும், கொல்லை வேளாண்மையும், மருதத்திணையின் நன் செய் வேளாண்மை, கைத் தொழில்கள், வாணிபமும், நெய்தல் திணையின் மீன்பிடித்தல், உப்பு உற்பத்தி, வாணிபம்.”[43] போன்றவையாகும்.

“குறிஞ்சித் திணையின் தேன் எடுத்தல், மூங்கிலரிசி, கிழங்ககழ்தல், தினைக்கதிரை உண்ணும் பறவைகளை ஓட்டுதல், முல்லைத்திணையின் ஆநிரை மேய்த்தல், தினை சாமைப் பயிர்களுக்கு களை எடுத்தல், எருதுகளைக் கொண்டு தானியக் கதிர்களைப் போரடித்தல், மருதத்திணை நடுதலும், களைக்கட்டலும், அரிதலும் கடா விடுதலும், நெய்தல் திணையின் மீன்பிடித்தல், உப்பு விளைத்தல், இரண்டையும் விற்றல், பாலைத் திணையின் வழிப் போக்கர்களைத் தவறாக வழிப்படுத்தி அவர்களை வழிப்பறி செய்தல”[44] ஒவ்வொரு பிரிவானது பொருளாதார அமைப்பின் தன்மைகளையும் ஒரே சீரற்ற வளர்ச்சியின்

தோற்றத்தையும் காண்பதாக காட்டுகிறார். ஆசிரியர் கா.சிவத்தம்பி ஒவ்வொரு திணை சார் சமூகத்தின் பொருளாதார நடவடிக்கைகளை விரிவாக ஆராய்வது இந்தப்பகுதி.

### 1.9.1 சங்ககால சமூகத்தின் அமைப்பு முறை

சங்ககாலச் சமூக அமைப்பினை அக்கால இலக்கியங்கள் மூலம் அறிய முடிகிறது. அந்நாட்டின் பழைமையான குடிகளும், இதற்கு சான்றாதாரங்களாக அமைக்கின்றன. சமூக அமைப்பு முறையானது மாற்றங்களுக்கு உட்பட்டதாகவும் மாறும் தன்மை கொண்டதாகவும் இருக்கின்றது. இதனை வலியுறுத்தியே அறிஞர்களின் கருத்துக்களும் அமைகின்றன.

“மாறுதலுக்கு உட்படாதவை எவையும் இல்லை அனைத்தும் மாறிக் கொண்டிருக்கின்றன என்பது மார்க்சியம். எனவே சமூக அமைப்புகளும் உற்பத்தி உறவுகளின் அடிப்படையில் மாற்றம் கொள்ளும் சங்க காலச் சமுதாயமும் ,பெரும் மாறுதல்களுக்கு உள்ளான கால கட்டம்.”[45] என்று வரையறை செய்துள்ளனர்.

### 1.9.2 மார்க்சிய சமூகத்தின் அமைப்பு முறை

மார்க்சிய அறிஞர்களின் கருத்துப்படி, சமூக அமைப்பு முறையில் சங்க காலமானது மாற்றங்களுக்கு உட்பட்டது. சங்க இலக்கியங்களை வரலாற்றுப் பொருள் முதல்வாத அடிப்படையில் விளக்குவதில் மார்க்சியர் ஆர்வம் காட்டியுள்ளனர். ஒரு சமூகத்தின் உற்பத்தி முறையை நுணுகினாலே அதன் பிற கூறுகளை விளக்கிப் புரிந்து கொள்ள முடியும் என்பது மார்க்சியர் கருத்தாகும். சங்க இலக்கிய வழித் தென்படும் காலச் சூழலில் இரு வகைச் சமுதாய அமைப்புகள் இருந்தன. அவை,

**“1. இனக்குழு அமைப்பு**

**2. நில உடைமை அமைப்பு.”[46]** என்று மே.து. ராசுக்குமார் குறிப்பிடுகிறார்.

**“1. உணவு தேடி வாழும் இனக்குழு வாழ்க்கை,**

**2. கால்நடை வளர்ப்பினை மையமாகக் கொண்ட மேய்ச்சல் நில வாழ்க்கை,**

**3.உணவு உற்பத்தி செய்யும் ஒருவிதமான நிலவுடைமைச் சமுதாய வாழ்க்கை.”**[47]

சங்க இலக்கிய காலச் சூழலில் மூன்று வகையான சமூக அமைப்புகள் நிலவியதாகக் கருதுகிறார்.

### 1.9.3 இனக்குழுச் சமூகமும், நிலவுடைமை வளர்ச்சியும்

சங்ககால சமூக முறையானது இனக்குழு வாழ்க்கை முறை அழிந்து நிலவுடைமைச் சமூகம் உருப்பெற்றதனை, மார்க்கிய அறிஞர்களும், பிற அறிஞர்களும் தங்களது ஆராய்ச்சியில் எடுத்துக் காட்டியுள்ளனர். திணைக்குரிய சமூக அமைப்பு நிலைகளை,

“ இனக்குழுச் சமூகம் (**குறிஞ்சி, முல்லை, நெய்தல்)** நிலவுடைமைச் சமூகம் **(மருதம்)** நகரச் சமூகம் **(புகார், மதுரை, வஞ்சி)** ஆகிய சமூக அமைப்புகளைச் சங்க காலம் கொண்டிருந்தது”[48] என்று மார்க்சியர் கருதுவதாக கொள்ளலாம்.

“இனக்குழு வாழ்க்கை முறை மாறி நிலவுடைமைச் சமூகம் உருவான காலம் சங்க காலம்”[49] என்பது நா.வானமாமலை கருத்து.

“சங்க காலம் ஒரு மாறுதல் நிலையைக் குறிப்பதாகும். அது இனக்குழு வாழ்க்கை அழிந்து நிலவுடமையாக மலரும் கால கட்டத்தைக் குறிக்கின்றது.”[50] என்பது கா.சிவத்தம்பி கருத்து.

### 1.9.4 அரசு உருவாக்கத்தின் வளர்ச்சி நிலைகள்

குழுச் சமூகமாக வாழ்ந்த மக்கள் வரலாற்று ரீதியான மாற்றங்களால் அரசு உருவாக்கத்தின் வளர்ச்சி நிலைகளைப் பெற்றனர். இதற்கு உணவுப் பொருள்களும், உற்பத்தி முறைகளுமே அடிப்படையாக அமைகின்றன. இதன் அடிப்படையில் பழந்தமிழகத்தின் வளர்ச்சி நிலைகளை த.வசந்தா குறிப்பிடுகிறார்.

"தங்களது தேவைகளுக்கு வேண்டிய உணவுப் பொருள்களை உற்பத்தி செய்யும் நிலையில் படிப்படியாக ஏற்பட்ட வளர்ச்சி, உபரி உற்பத்திக்கும், அடுத்து ஏற்பட்ட பொருளாதார உறவுகள் குழுத்தலைவர்கள், சிற்றரசர்களாகவும் பின்னர் பேரரசர்களாகவும் உருப்பெறவும் வாய்ப்புகளை ஏற்படுத்தின. இந்த வளர்ச்சி நிலைகள் பழந்தமிழகத்தில் உருப்பெற்ற வரலாற்றினைப் புறநானூறும் பிற இலக்கியங்களும் விவரிக்கின்றன.**"**[51] என்பர்.

" இனக்குழுச் சமூகம் அழிந்து நிலவுடைமை தோன்றிய காலம் கூடவே அரசு உருவான காலம் - குறுநில மன்னர்கள் (வேளிர்) அழிந்து பேரரசு உருவான காலம் சங்க காலம் என்று மார்க்சியர் வரையறை செய்கின்றனர்."[52] என்பர்.

அரசு உருவாக்கத்தின் வளர்ச்சி நிலைகள் சமூக அமைப்பின் தன்மைகளை அறிந்து கொள்ள வாய்ப்பாக அமைந்துள்ளது என்பதே மார்க்சியர் கருத்து எனக் கொள்ளலாம்.

### 1.10 குறிஞ்சித் திணையின் சமூகப் பொருளாதாரப் பதிவுகள்

திணைச் சமூகத்தின் பொருளாதார அடித்தளமானது அச்சமூக மக்களின் தொழில் அடிப்படையிலான செயல்பாடுகளாகும் என்பது ஏற்கத்தக்கனவாக உள்ளன. ஏனெனில் பொருளாதார தன்மையினை அறிந்து கொள்ள அந்நாட்டு மக்களின் தொழிலே அடிப்படை. அந்த வகையில் குறிஞ்சித் திணையின் பொருளாதாரத்தை அறிவதற்கு குடிகளின் உழைப்பும், உற்பத்தியும், வாழ்வாதாரமும் (உணவு) மேம்பாடு உடையன. சங்க இலக்கியங்களில் குறிஞ்சித்

திணைப் பாடல்களில் வேட்டையாடுதலும், வேளாண்மையும் இடம் பெறுகின்றன. இதனையே,

"வேட்டையாடுதல் தேன் எடுத்தல், காட்டுக்கிழங்குகளை அகழ்ந்தெடுத்தல், புன்புல வேளாண்மை என நான்கு வகையான பொருளாதார நடவடிக்கைகளில் குறிஞ்சி நில மக்கள் ஈடுபட்டிருந்ததாக சங்க நூல்கள் வாயிலாக அறிகிறோம். இவற்றுள் முதல் மூன்று உணவு சேகரித்தலையும், நான்காவது உணவு உற்பத்தியையும் சுட்டுகின்றன."[53]

## 1.10.1 வேட்டையாடுதல்

காட்டுமிராண்டியாக வாழ்ந்த மனிதன் படிப்படியாக வளர்ந்து முன்னேறி நாகரிக நிலையை அடைந்தான். அன்றைய கால கட்டத்தில் உணவுக்காக வேட்டைத் தொழிலையே பெரிதும் சார்ந்திருந்தனர். அந்நிலையில் மனிதன் உணவுக்காகத் தொடர்ந்து விலங்குகளை வேட்டையாடி வந்தான். உடும்பு, முயல், பன்றி, மான் போன்ற விலங்குகளை வேட்டையாடி வந்தமையை சங்க இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன.

### 1.10.1.1 குறுந்தாள் உடும்பு

ஊருக்கு அண்மையில் இருந்த மடுக்கரையில் உடும்பினை வேட்டையாடியமையை பாடல் வரிகள் விளக்குகின்றன.

**"அருமிளை இருக்கை யதுவே - மனைவியும்**

**வேட்டச் சிறாஅர் சேட்டிலம் படராது**

**படுமடைக் கொண்ட குறுந்தாள் உடும்பின்**

**விழுக்கு நிணம் பெய்த"[54]**

மனைவியும், இளைய சிறுவர்களும் நெடுந்தொலைவு செல்லாமல் மடைப்பகுதியில் பிடித்த குட்டையான கால்களை உடைய உடும்பின் தசையை இட்டு உண்டனர் என்ற செய்தி புலப்படுத்துகின்றன.

### 1.10.1.2 மனவுச் சூழ் உடும்பு

மேட்டு நிலத்திலே விளைந்த செல்லினது சிவந்த அவிழாகிய சோற்றை, உடும்போடு சமைத்தனர்.

**“களர் வளர் ஈந்தின் கார்கண் டன்ன**

**சுவல்விளை நெல்லின் செவ் அவிர்ச் சொன்றி**

**மலி தந்த மனவச் சூழ் உடம்பின்**

**வறைகால் யாத்தது, வயின்தொறும் பெறுகுவீர்”**[55]

வளைந்த வில்லையுடைய எயினர்களின் அரணில் சென்று தங்கினால் மேட்டு நிலத்தில் வளர்ந்த ஈந்தின் விதைபோன்ற சிவந்த நெல்லால் சமைத்த சோற்றை நாயால் கவ்விக் கொணரப்பட்ட உடும்பின் கறியொடு ஒவ்வொரு அரணிலும் பெருவிர் என்ற கருத்திலிருந்து எயினர்கள் வேட்டைக்கு செல்லும்போது நாயோடு செல்வர் என்பதை அறியலாம்.

### 1.10.1.3 கொலை இயக் கானவர்

உயிர்களைக் கொன்று உண்ணும் தொழிலை புரியும் வேடர்கள், விலங்கு இறைச்சியோடு தேனாலாகிய மதுவை உண்டனர் என்பதை பாடல் வரிகள் எடுத்துகாட்டுகின்றன.

**“கொடுந்தொழில் வல்வில் கொலை இய கானவர்**

**நீடு அமை விளைந்த தேக்கள் தேறல்**

**குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து**

**தொண்டகச் சிறுபறைக் குரவை அயர்”[56]**

மலைவாழ் மக்களாகிய வேட்டுவர், கொடுமையான தொழிலைச் செய்கின்ற வில்லையுடைய பிற உயிர்களைக் கொல்லுகின்ற வேடர்கள் நீண்ட மூங்கில் குழாய்களில் முற்றி விளைந்த தேனாலாகிய மதுவைத் தம் சுற்றத்தாருடன் குடித்து மகிழ்ந்து தொண்டகம் என்ற சிறிய பறையை முழக்கிக் குரவைக்கூத்து ஆடுவார்கள் என்று விளக்குகிறது.

### 1.10.1.4 வன்கைக் கானவன்

வலிமையான கையை உடைய கானவன் ஆண் முள்ளம் பன்றியை வேட்டையாடும் தன்மையை,

**“ உரவுக்கணை**

**வன்கைக் கானவன் வெஞ்சிலை வணக்கி**

**உளமிசைத் தவிர்த்த முளவுமான ஏற்றையொடு**

**மனைவாய் ஞமலி ஒருங்குபுடை ஆட”[57]**

என்ற வரிகள் குறிப்பிடுகின்றன. வலிமையான கையை உடைய கானவன் தன் அம்பால் எய்து, கொன்ற ஆண் முள்ளம் பன்றியைக் கைக்கொண்டு தன் வீட்டிலுள்ள நாய்கள் எல்லாம் பக்கத்திலே குரைத்து விளையாடி வர வேட்டையில் வெற்றியடைந்த மகிழ்ச்சிக்குரியவனாக இருப்பான் என்பதை பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

### 1.10.1.5 கடமான் கொழுங்குறை

மலைக் குறவர்கள் உடும்பின் இறைச்சியையும் , பன்றியின் தசையையும் உண்டு முற்றிய தேனால் ஆக்கப்பட்ட கள்ளையும் மூங்கில் குழாயில் இட்டு அருந்தினர் என்பதனை,

**“அருவி தந்த பழஞ்சிதை வெண்காழ்**

**வருவிசை தவிர்த்த கடமான் கொழுங்குறை**

**முளவுமாத் தொலைச்சிய பைப்நிணப் பிளவை**

**பிளவுநாய் முடுக்கிய தடியொடு விரைஇ**

**வெண்புடைக் கொண்ட தூய்த்தலைப் பழனி**

**இன்புளிக் கலந்து மாமோ ராகக்**

**கழைவளர் நெல்லின் அரிஉலை ஊழ்த்து"**[58]

அருவியில் அடித்து வரப்பெற்ற பலாப்பழத்தின் வெள்ளிய கொட்டையுடன், ஓடி வருகின்ற விரைவைத் தவிர்த்துக் கொல்லப் பெற்ற கடமானின் கொழுத்த தசையினையும், எய்ப்பன்றியைக் கொன்று பெற்ற பசுமையான நிணத்தைப் பிளந்து எடுத்த தசையினையும், பெண் நாய் ஓடிக் கடித்த உடும்பின் தடியொடு கலந்து, வெண்மையான தோட்டையுடைய புளியம்பழத்தின் இனிய புளிப்பையும், பசு எருமை இவற்றின் மோரை உலையாக வார்த்து, மூங்கில் நெல் அரிசியை உலையில் வைத்துக் கொடுத்தனர் என்று பாடல் வரிகள் பொருள் தருகின்றன. இத்தகைய உணவுகளை குறமகள் சமைத்தமையை, இக்கருத்தின் மூலம் அறிய முடிகின்றது.

### 1.10.1.6 முளவுமாத் தொலைச்சும் குன்ற நாட

மலை நாட்டைச் சேர்ந்த தலைவன் பன்றியைக் கொன்று உணவோடு சேர்த்து சமைத்துக் தின்றமையை,

**"தீம்பழப் பலவின் களைவினை தேறல்**

**விளைஅம்பின் இளையரொடு மாந்தி,**

**ஒட்டு இயல் பிஜயா வயநாய் பிற்பட,**

**வேட்டம் போகிய குறவன் காட்ட**

**குளவித் தண்புதல் குருதியொடு துயல்வர**

**முளவுமாத் தொலைச்சும் குன்ற நாட"[59]**

பலாப்பழத்தில் விளைந்த தேனைப்பருகி , சீழ்க்கை ஒலியோடு செல்லும் இளைஞன் ஒருவன் வேட்டை நாய்கள் பின்வரச் சென்றான். அப்போது முள்ளம்பன்றி ஒன்று மல்லிகைப் புதரின் கீழே மறைந்து நின்றது. அப்பன்றியை அவன் கொன்றான். அத்தகைய மலைநாட்டை சேர்ந்த தலைவன் என்று குன்றத்தின் தலைவனைப் பற்றியும் , வேட்டைத் தொழில் பற்றியும் எடுத்துக் கூறுகிறது.

தினைப்புனத்தை அழிக்க வந்த பன்றியை கானவன் தமது அம்பினால் கொன்று வீழ்த்தினான் என்பதை,

**"கழுதிற் சேணோன் ஏவொடு போகி**

**யிழுதினன்ன வானிணஞ் செருக்கி**

**நிறப்புண் கூர்ந்த நிலத்தின் மருப்பின்**

**நெறிகெடக் கிடந்த இரும்பிணர் எருத்தின்**

**இருள் துணிந்தன்ன ஏனம"[60]**

பன்றியொன்று தினைப்புனத்தை மேய்ந்து அழிப்பதற்கு வந்தது. பன்றியின் காலடியோசைகேட்ட கானவன் பரண்மேல் இருந்தபடியே ஓசைவந்த திசையை நோக்கி அம்பு ஒன்றை வேகமாகச் செலுத்தினான். கானவன் கடுகச் செலுத்திய அம்பு பன்றி புண்ணுடனும் அம்புடனும் ஓடிப்போனது. ஓடிய பன்றி புண்ணின் வலியின் கடுமையால் மயங்கி தான் வந்த பாதையை மறந்து வழிமாறிச் சென்று வீழ்ந்து இறந்தது என்று பொருள் உணரப்படுகின்றது. இது போன்ற இன்னும் பல பாடல்கள் வேட்டையாடுதல் குறித்து விவரிக்கின்றது.**(புறம் - 320, 214, 152, 324, 322,319, 325, 306, நற் - 212, 282, அகம் - 318, 172 பெரும்- 126, மதுரை- 64,**

**குறிஞ்சிப் - 123)** போன்ற பல பாடல்கள் வேட்டைத் தொழில் குறித்து விளக்குகின்றன.

இவ்வாறு கானவா் உடும்பு, முயல், பன்றி, முள்ளம் பன்றி, மான், புலி முதலிய காட்டு விலங்குகளை வேட்டையாடி உணவு சேகரித்தலில் ஈடுபட்டனா். உணவுத் தேவைக்காக வேட்டையாடுதல் குறிஞ்சி நிலத்தவரின், தொழிலாகவும் வாழ்க்கை ஆதாரமாகவும் அமைந்தததது.

### 1.10.2 தேனெடுத்தலும் கிழங்ககழ்தலும்

குறிஞ்சி மலைச் சாரல்களில் தேன் மிகுதியாக கிடைப்பதையும், கவலைக் கிழங்கழ்தலையும் சங்க இயக்கியங்களில் காண முடிகின்றது. மலைச்சாரலிலே தேன் மிகுதியாகக் காணப்படும். உயர்ந்த இடங்களிலுள்ள தேனை மூங்கிலையே ஏணியாகக் கொண்டு ஏறி தேன் எடுப்பா்.

#### 1.10.2.1 மால்பு கண்ணேனி

மூங்கிலின் கணுவைக் கழியாமல் கால் வைக்கும் படி செப்பஞ் செய்து சாா்த்தி அக்கணுவையே படியாகக் கொண்டு ஏறுவது கண்ணேனி எனப்படும். இது சங்க இலக்கியங்களில் **'மால்பு'** என்ற சொல்லால் குறிக்கப்பட்டுள்ளது. இதனை,

> **"கலைகை யற்ற காண்பின் நெடுவரை**
> **நிலைபெய்து இட்ட மால்புநெறி ஆகப்**
> **பெரும்பயன் தொகுத்த தேங்கொள் கொள்ளை**
> **அருங்குறும்பு எறிந்த கானவா் உவகை"**[61]

பாடல் வரிகள் விளக்குகின்றன. இனிமையான நீண்ட மலையில் நிலையாகக் கட்டப்பெற்ற கண்ணேனி வாரியாக, பெரிய பயன் உண்டாகத் தொகுத்து வைத்திருந்த தேனை அழித்துக் கொள்ளை கொண்டபின் அரிய சிற்றரண்களையும், அழித்த மகிழ்ச்சியாலுண்டான கானவரின் ஆரவாரமும் தேனெடுத்தலும் குறித்து

அறிய முடிகிறது. குறிஞ்சிப் பற்றி கூறும்போது அந்த மலைப்பகுதியிலே தேன் கூடுகள் தொங்கும் மலை உச்சிகள் மிகுதி என்று கூறுவர் என்பதை,

**“தென் தூங்கும் உயர்சிமைய**

**மலைநாறிய வியன் ஞாலத்து”[62]**

என்ற வரிகள் தேன் கூடுகள் தொங்குகின்ற உயர்ந்த மலை உச்சிகளும் இவ்வுலகில் அழகு காட்சிகளாகவும், அரிதான பொருளாகவும் உள்ளன என்று குறிப்பிடுகிறது. இதனைக் குறுந்தொகை,

**“ பிரசந் தூங்குமலை”**

(குறுந். 392.8)

பாடல் வரி விளக்குகின்றது. ஒரு பக்கம் அருவி ஆர்த் தொழுக, ஒரு பக்கம் பாணருடைய மண்டைகள் (கலங்கள்) நிரம்பிய வழிய வேண்டி வடித்தலால் சிந்திய இனிய கள்ளாகிய தேறல் கல்லையுருட்டி ஒழுகும் என்று , மலையின் தேன் வளம் குறித்தும் கானவர் அங்கு தேனெடுத்தது குறித்தும் தேன் சுவை சொட்டக் கபிலர் கூறுவதை இப்பாடல் வரிகளின் மூலம் அறியலாம்.

**“ஒரு சார் அருவி ஆர்ப்ப வொருசார்**

**பாணர்மண்டை நிறையப் பெய்மார்**

**வாக்கவுக்க தேக்கட் தேறல்**

**கல்லைத் தொழுகும்”[63]**

மலையின் சிறப்பை கூற வந்த ஆசிரியர் அதற்கு தேனடையை சான்று கூறி விளக்குவது மலையின் சிறப்பை எடுத்துக்காட்டுகிறது.

### 1.10.2.2 அறைகூறு தீம்தேன்

மலையின் சிறப்பை கூற முற்பட்ட ஆசிரியர் தேனடைகளின் உயரத்தை,

**“அறைவுறு தீம்தேன் குறவர் அறுப்ப**

**முயலுநர் முற்றா ஏற்று அரு நெடுஞ்சிமைப்**

**புகல்அரும் பொதியில் போலப்”[64]**

உச்சிப்பாறைகளில் தேனடைகளை அறுத்து எடுக்க முயலும் குறவர்கள் அடைய இயலாத ஏறுதற்கு அரிய சிகரங்களையுடைய பொதியமலை என்று குறவர் மலையின் சிறப்பையும், தேன் எடுக்க முடியாத சிரமப்படும் குறவர்களின் தன்மையினையும் எடுத்துக் காட்டுகின்றன.

### 1.10.2.3 கவலைக் கெண்டி

குறிஞ்சி நிலத்தவர் கவலைக் கிழங்கை அகழ்ந்துண்டனர் என்பதை,

**“ கவலைக் கெண்டிய அகல்வாய்ச் சிறுகுழி”[65]**

குறிஞ்சி நிலத்து மக்கள் கவலைக் கிழங்கை அகழ்ந்துண்ட இடத்தில் குழியில் ஒரு கானவன் மணியைப் பெற்றான் என்பதனை இப்பாடல் வரியின் மூலம் அறிய முடிகிறது.

### 1.10.2.4 கொழுங் கிழங்கு மிளரக் கிண்டி

குன்றுவர்கள் கிழங்குகளை அகழ்ந்தெடுத்த இடத்தில் தினையை விதைத்தனர் என்ற செய்தியை,

**“கொடுகிழங்கு மிளரக்கிண்டி, கிளையொடு**

**கடுங்கண் கெர்ல் உழுத பூமி**

**நல்நாள் வருபதம் நோக்கி, குறவர்**

**உழ அது வித்திய பருஉக்குரல் சிறுதினை**

**முந்துவிளை யாணர் நாற் புதிது உண்மா”[66]**

குறிப்பிடுகின்றது. மலர்ந்த காந்தளின் வலிமையான கிழங்கு வெளிப்படக்கிளறித்த தன் கூட்டத்துடன் காட்டுப்பன்றி உழுத புழுதியில் பருவம் பார்த்து விதைத்தனர் குன்றவர். பருவம்பார்த்து பயிர் செய்தமையை விளக்குகிறது.

இவ்வாறு குறிஞ்சி நிலத்து மக்களின் தொழிலாக அமைந்த தேடினடுத்தலும், கிழங்கல்தலும் அவர்களுடைய வாழ்வாதாரத் தேவைக்கு அடிப்படையான உணவு சேகரித்தலையே மையமாகக் கொண்டுள்ளன என்பதை அறிய உதவுகின்றன.

**1.10.2.5 புன்புல வேளாண்மை**

குறிஞ்சி நிலமும், முல்லை நிலமும், நீர்வளம் குன்றிய பகுதிகளாதலின் பருவமழையை எதிர்நோக்கியே தொழில் மேற் கொண்டனர். புன்செய் வேளாண்மையில் ஈடுபட்ட குறிஞ்சி நில மக்கள் தினை, வரகு, அவரை, உழுந்து, பயிறு ஆகியவற்றை பருவம் அறிந்து பயிர் செய்தனர். அம்மக்கள் பருவமழை தொடங்கும் முன்னே மரங்களை வெட்டிக் கொளுத்தி விளைநிலம் ஆக்கினர்.

**1.10.2.6 குறமகள் காக்கும் ஏனல்**

புன் செய் பயிர்களாகிய தினை, வரகு ஆகியவை நன்றாக செழித்து வளரும், அவ்வாறு வளர்ந்த பிறகு அந்த பயிர்ளை உண்ணவரும் பறவைகளை விரட்டக் குளிர், தட்டை ஆகிய கருவிகளைப் பயன்படுத்துவர் குறத்தியர். இதனை

**“தழலை வாங்கியும் தட்டை ஒப்பியும்**

**அழல்ஏர் செயலை அம்தழை அசைஇயும்**

**குறமகள் காக்கும் ஏனல்”**[67]

பாடல் வரிகள், தோழியோடு நடந்து சென்று நெருப்புப் பந்தத்தைச் சுற்றியும், தட்டையைத் தட்டியும் அசோக இலைகளால் ஆகிய தழை ஆடையை உடுத்தும் குறமகளாகிய தலைவி காக்கும் திணைப்பயிர் என்று பொருள் தருகிறது. இதனைக் குறிஞ்சிப்பாட்டு,

**“தழலை தட்டையும் குளிரும் பிறவும்**

**கிளகடி மரபின ”[68]**

தழல், தட்டை ஆகிய கருவிகளைக் கொண்டு தினைப்புனம் காத்தமைப் புலப்படுகின்றது.

**1.10.2.7 கானவன் எறிந்த கடுஞ்செலல் நெகிழி**

தினைப்புனங்களில் பறவைகளே அன்றி விலங்குகளும் பயிரைக் கவர்ந்துண்பன. யானை போன்ற விலங்குகளைக் கொள்ளிக்கட்டையினால் விரட்டுவர். இது நெகிழி என்ற சொல்லால் சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. இதனை

**“ களிசிறந்து**

**வாலா வேழம் வணர் கவர்தலின்**

**கானவன் எறிந்த கடுஞ்செலல் நெகிழி**

**வேய்பயில் அடுக்கம் சுடர மின்னி**

**நிலைகிளிர் மீனின், தோன்றும் நாடன்”[69]**

ஆண்யானை வளைந்த தினைக் கதிரைக் கவரும், அதைக் கண்ட கானவன் எரிகொள்ளியை எறிவான். அது மூங்கிலில் பரவிப் பக்க மலையில் ஒளி விளங்கும் படி மின்னி எரி நட்சத்திரம் போலத் தோன்றும். இத்தகைய மலைக்குரிய நாட்டை உடையவன் தலைவன் என்று விளக்குகிறது.

**1.10.2.8 பெருங்கல் அடாஅர்**

தினைப்புனத்தை அழிக்க வரும் பன்றியைப் பிடிக்க பெரிய கல்லாலான ஒரு பொறியை வைத்திருப்பர் அப்பொறி அடாஅர் என்ற சொல்லால் வழங்கப்பட்டது.

**“தினையுடன் கெர்ல் இரியப் புனவன்**

**சிறுபொறி மாட்டிய பெருங்கல் அடாஅர்**

**ஒண்கேழ் வயப்புலி படுஉம் நாடன்”[70]**

தினைப்புனத்ததில் மேயும் பன்றியைக் கொல்ல அப்புனத்தின் தலைவன் கல்லால் அமைந்த சிறு பொறியை வைத்திருந்தான் .அப்பொறியில் நிறமும் வலிமையும் பொருந்திய புலி புகுந்து இறந்தது. இத்தகைய மலைக்குரிய நாடன் என்று தினைப்புனத்தை அழிக்க வரும் விலங்குகளை பிடிக்க இத்தகைய கருவி பயன்பட்டமையை அறியலாம்.

### 1.10.2.9 ஐவனம் கவரும் குன்ற நாடன்

கானவர் விளைவிக்கும் புன்செய் பயிர்களில் நெல் வகைகளும் அடங்கும். இதனை சங்க இலக்கியத்தில் ஐவன நெல், மூங்கில் நெல் போன்ற பெயர்களில் வழங்குவர். இத்தகைய நெல்லை உண்பதற்கு காட்டுப் பன்றி வருவதனை

**“சிறுகட் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்**

**துறுகல் அடுக்கத்து வில்லோர் மாற்றி**

**ஐவனம் கவரும் குன்ற நாடன”[71]**

இப்பாடல் வரிகள். சிறிய கண்களையும் மிகுதியான சினத்தையும் உடைய ஆண்பன்றி குண்டுக்கல் நிறைந்த பக்கமலையில் வில் ஏந்திய காவல்காக்கும் காவலரை ஏமாற்றி மலைநெல்லைக் கொள்வதற்கு இடமான மலைநாடன் என்று பொருள் தருகிறது. இதனை உணர்த்தும் மற்றொரு பாடல்.

**“அருவிப் பரப்பில் ஐவனம் வித்தி”**

என்ற வரி ஐவன நெல்லைப் பயிரிடுவதைக் குறிக்கிறது.

### 1.10.2.10 கருங்கொடி மிளகு

சங்க காலச் சமூகத்தின் பொருளாதாரப் பெருக்கத்திற்கு ஆக்கம் தருவது மிளகு. இது குறிஞ்சி நிலப்பகுதியில் விளையக்கூடியது. மிளகுக் கொடி கொத்துக் கொத்தாகக் காய்க்கும் பசிய காய்களையுடையது என்பதை,

**“கருங்கொடி மிளகின் காய்த்துணர் பசுங்கறி**

**திருந்தமை விளைந்த தேக்கட் தேறல்**

**கான்நிலை எருமைக் கழைபெய் தீம்தயிர்**

**நீலநிற ஓரி பாய்ந்தென நெடுவரை**

**நேமியின் செல்லும் நெய்க்கண் இறாஅல்**

**உடம்புணர்பு தழீஇய ஆசினி அனைத்தும்**

**குடமலை பிறந்த** ”[72]

விளக்குகிறது. கரிய கொடிகளையுடைய மிளகிள் கொத்தாக உள்ள பசுங்காய்களும், நன்றாக முற்றிய மூங்கில் குழாய்களில் தேய்த்த சுவையான தயிரும், நீண்டு உயர்ந்த மலைகளின் தேன் முற்றியதால் நீல நிறம் பாய்ந்தது போன்றிருக்கும சக்கரத்தைப் போன்ற தேனடைகளும், இவற்றோடு கூடுதலைக் கொண்ட ஆசினிப் பலாப்பழம் மேற்கு மலையில் தோன்றியது.

குறிஞ்சி மலைப்பகுதியில் விளையக்கூடிய புன்புல பயிர்களான தோரை நெல்லும், வெண் சிறு கடுகும், ஐவனம் என்னும் வெண்ணெல்லும், இஞ்சி, மஞ்சள், மிளகு போன்றவை விளைகின்றன என்பதனை ,

**“மனமுள்ள அகில், சந்தன மரங்களை அழித்துத் திருத்திய மேட்டு நிலத்தில் விதைத்த சிறிய கதிர்களையுடைய தோரை நெல்லும், நீண்ட தாளினையுடைய வெண் சிறு குருகும், ஐவனம் என்னும் வெண்ணெல்லொடு பிணக்கங்கொண்டு வளருமாறு செய்து இஞ்சி, மஞ்சள் பசிய மிளகுக்கொடி ஆகியவற்றை விளைவிப்பா”[73] என்று குறிப்பிடுகிறார்.**

### 1.10.2.11 பெரும்புனக் குறவன்

குறிஞ்சி நிலத்தில் விளையக்கூடிய தினைப்பயிர்களில் அவரையும் ஒன்று. தினையரிந்த தாளின் மேல் அவரைக்கொடி படரும் அவரையின் மலர் வெண்ணிறமுடையது என்பதை,

**"பெரும்புனக்குறவன் சிறுதினை மறுகாற்**

**கொழுங்கொடி அவரை பூக்கும"[73]**

மலைப்பக்கத்தில் உள்ள பெரிய தினைப்புனத்தை உடைய குறவன் சிறிய திணைப்பயிரை அரிந்த பின் மீண்டும் பயிரின் ஊடே வளமான அவரைக் கொடி வளர்ந்து பூக்கும் என்பதனை இப்பாடல் வழி அறிய முடிகின்றது.

### 1.10.2.12 வெண்கால் காய்ந்த அவரை

அவரை கொடி பூத்துக் குளுங்கும் இடத்தில் கிளிகள் அதனைத் திண்ண வரும் அந்த கிளிகளை விரட்டும் மலைநாடு .இத்தகைய மலை நாட்டில்,

**"சிறுதினை கொய்த இருவி வெண்கால்**

**காய்த்த அவரைப் படுகிளி கடியும்**

**யாணர் ஆகிய நன்மலை நாடர்"[74]**

சிறிய தினைக் கதிர்களை அறுத்த பின்பு கீழே உள்ள வெண்மையான தட்டைகளில் அவரைக் செடி வளர்ந்து காய்கள் காய்த்ததுள்ளன. அவற்றை தின்னக் கிளிகள் வருகின்றன. அந்தக் கிளிகளை ஓட்டுவதற்கு இடமான புதிய வருவாய்களை உடைய நல்ல மலைநாடன். இத்தகைய மலைப்பகுதியில் அவரைப் பயிர் பயிரிடப்படுகிறது.

### 1.10.2.13 கவண் உமிழ் கடுங்கல்

தினை பயிர் குறிஞ்சி நிலத்தில் விளையும் முக்கிய தானிய வகை. குறவர் தம் உழைப்பின் பயனான முதிர்ந்த தினையைக் காவல் செய்ய உயர்ந்த

பரணிலே ஏறி மலையிடற்களிற் செறிந்த காடுகளில் வாழும் யானைகளைக் கற்களை வீசி விரட்டுவதை,

> **“புலந்து புளிறு போகிய புனஞூழ் குறவர்**
>
> **ருயர்நிலை யாதனை மேறிக் கைபுடையூஉ**
>
> **அகன்மலை இறும்பில் துவன்றிய யானைப்**
>
> **பகல்நிலை தளர்க்கும் கவண்உமிழ் கடுங்கல்**
>
> **இருவெதிர் ஈர்ங்கழை தத்திக் கல்லெனக்**
>
> **கருவிரல் ஊகம் பார்ப்போடு இரிய**
>
> **உயிர்நெகு மரவின் கூற்றத் தன்ன**
>
> **வரும்விசை தவிராது மரம்மறையாக் கழிமின்”**[75]

பாடல் வரிகள் விளக்குகின்றன. தினைப்புனத்தைக் காத்தற்குச் சூழ்ந்த குறவா் மரங்களின் மேல் நிர்மாணித்த பரண்களால் ஏறிக்கையைக் கொட்டி, அகன்ற மலையிலுள்ள குறுங்காட்டில் நிறைந்த யானைக்கூட்டத்தை பகல் காலத்திலேயே நிலை தளரச் செய்யும் கவணால் கொடிய கற்கள் கொண்டு எறிவர். பெரிய மூங்கில் கழைகளில் தத்தித்தத்தி, கருவிரழையுடைய குரங்குகள் தம் குட்டியுடன் ஓடும். அக்கற்கள் உயிரைப் போக்கும் தன்மையான வரும் வேகம் தவிராது வரும். அதனால் மரங்களில் ஒதுங்கி நின்று பார்த்துச் செல்லுங்கள் என்று வழிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

சங்ககாலச் சமுதாயத்தின் முக்கிய விளைபொருட்களாக வரகும் தினையும் விளங்கின. அவரை, கொள்ளூ என்பன புன்செய் நில வருவாய்களை தரத்தக்கனவாக இருந்தன. தினைவிளைச்சலுக்கு ஆதரமான புன்செய் வேளாண்மை குறிஞ்சி சமூகத்தின் பொருளாதாரச் செயற்பாட்டுக்கு அடிப்படையாக விளங்கிற்று. இதனால் தினைவிதைப்பதும், தினை - ஏனல் எனக் காப்பதும் அறுவடை செய்வதும் முக்கியச் செயற்பாடுகளாக அமைந்திருந்தன. தினை விதைப்பது

ஆடவர்தம் செயலாக இருக்க, அதைக் காப்பது பெரும்பான்மையும் மகளிர் தம் செயலாகவே இருந்துள்ளது. தினைக் கதிர்களை, கிளிகள் போன்ற பறவைகள் உண்ணாதவாறு பெண்கள் தினைப்புனம் காத்தனர் - மகளிர் தட்டை, கவண் போன்ற கருவிகளைக் கொண்டு தினைப்புனம் காத்தனர் என்பது,

**“கொடிச்சி யின்குரல் கிளிசெத் தடுக்கத்துப்**

**பைங்குர லேனற் படற்தருங் கிளியென**

**காவலுங் கடியுநர் போல்வர்**

**மால்வரை நாட வரைந்தனை கொண்மோ”**

ஐங்குறுநூறு பாடலடிகளின் வாயிலாகப் புலனாகிறது. தினைப்புனங்காத்தல் முதன்மையாகக் கொள்ளப்படுகிறது. தினைப்புனங்காத்தல் பற்றி திருவள்ளுவர் ‘உழவு” என்னும் அதிகாரத்தில் உழவு செய்வதைவிட பயிரினைக் காப்பது மிகவும் கடினமானதாகக் குறிப்பிடப்படுகிறார்.

**‘ஏரினும் நன்றால் எருகிடுதல் கட்டபின்**

**நீரிலும் நன்றதன் காப்பு”**

**(குறள் - 1038)**

என்னும் இக்குறட்பாவின் மூலம் இது வெளிப்படுகின்றது. உழவு, பயிரிடல், உரம் வைப்பது, நீர் பாய்ச்சுவது போன்ற எல்லா வேலைகளையும் விட பயிர்காப்பது கடினமானதாக வள்ளுவர் குறிப்பிடுகிறார்.வண்ணமிகு மலர்களைச் சூடிக்கொண்டு, தலைவி தினைப்புனங் காக்கப் பறை, கவண் போன்ற கருவிகளை எடுத்துக்கொண்டு பெண்கள் தினைப்புனங்காத்த செய்தியினை,

**‘வேயன்ன மென்றோளால்**

**மயிலன்ன மென்சாயலார்**

**கிளிகடியினனே”**

புறப்பாடலொன்று சுட்டுகின்றது. காவலின் போது அதற்கான கருவிகளாகிய தட்டையினையும், ஒலி எழுப்பும் தழலையும் கொண்டு சென்று பறவைகளை விரட்டினர் எனலாம். தினைப்புனக்காவல் காக்கும் தலைவி தன் தோழியரோடு வேங்கைப்பூ மாலைஅணிந்து மகிழ்ந்தாள். கையில் வைத்திருந்த தழல் (கவண்), தட்டை போன்ற கருவிகளைக் கொண்டு பறவைகளை விரட்டியதை,

**‘பொலிந்த வாயமொடு காண்டக இயலிற்**

**தழலை வாங்கியும் தட்டை யோட்ச்சியும்**

**அழலோ் செயலை யந்தழை யசையஇயுங்**

**குறமகள் கக்கும் ஏனற்**

**புறமுகந் தருதியோ வாழிய மழையே”**

**(அகம் - பா.எ, 188)**

பாடல் வரிகளின் மூலம் அறியலாம். மேலும் கருவிகள் கொண்டு பறவைகளை விரட்டினர். அதற்குச் சான்றாக,

**‘ கோதையைப்**

**புனவர் தட்டை படைப்பி னயல**

**திறங்குகதி ரலமரு கழனியும்”**

**(புறம் - பா.எ,49)**

இப்புறப்பாடல் அமைகின்றது. காவலின்போது அதற்கான கருவிகளாகிய தட்டையினையும், ஒலி எழுப்பும் தழலையும் கொண்டு சென்று பறவைகளை விரட்டினர் என்பது புலனாகிறது.

இவ்வாறு குறிஞ்சித் திணையின் புன்புல வேளாண்மைத் தொழில் குறித்து பல்வேறு பாடல்கள் சங்க இலக்கியங்களில் விரவிக் காணப்படுகின்றன. மேற்குறிப்பிட்ட பாடல்களை தவிர **(அகம் - 267, நற் - 448, குறுந் - 155, 100, 35,13,393,119, மதுரை- 291-295, புறம் - 168, அகம் 73 பெரும்- 126 பெரும் - 154, குறுந் - 82, பரி – 16. சிறுபாண் 43-44 மலைபடு 343 134,306, 206, 108, அகம-˙ 78, 322 குறுந்- 105)** போன்றவை புன்புல வேளாண்மை குறித்த பல்வேறு செய்திகளை நமக்குத் தருகின்றன. இவை குறிஞ்சி நிலத்தின் பொருளாதாரத்தை பகுத்துணர பெரிதும் துணை நிற்கின்றன.

## 1.11 முல்லைத் திணையின் சமூகப் பொருளாதாரப் பதிவுகள்

இறைச்சிக்காக மட்டுமே கால்நடைகள் பயன்பட்ட குறிஞ்சி நில வாழ்க்கையில் இருந்து விற்பனைப் பொருளாகவும் உணவுப் பொருளாகவும் கால்நடைகளின் பாலும், பால் பொருட்களும் மாறிவிட்ட மேய்ச்சல் நில வாழ்க்கையின் சமூகப் பொருளாதாரப் பதிவுகள் ஆநிரைகளை சார்ந்தே அமைந்துள்ளது. மேய்ச்சல் சமூகத்தில் பொருளாதார செயற்பாடுகளுக்கு பாலும், பால்படு பொருள்களான மோர், நெய் ஆகியன இருந்தமையை சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

மேய்ச்சல் நில சமூகத்தைப் பற்றி கூறும் போது **“வாழ்விடம் பொருளாதாரம், சமூகம் என்ற நூலில் பயிர் செய்கைப் பொருளாதாரத்தைக் காட்டிலும், கால் நடை மேய்ச்சல் பொருளாதாரம் தனது மேம்பட்ட வழக்கத்தில் ஒரே இடத்தில் குடியிருக்கும் மக்கள் வாழ் பகுதிகளின் எல்லைப்புறங்களில் அமைந்திருக்கின்றது. அப்பகுதியில் வேளாண்மை வளர்ச்சிக்கும் போதிய ஆதரவு இருக்குமாயின் மக்கட் தொகை நெருக்கமுடையதாகவும் மற்றும் செல்வச் செழிப்புடையதாகவும், அது மாற இயலும். அத்தகைய பகுதிகளில் நிலைத்த மக்கள் கூட்டொருமைப்பாடு சமூகங்களோடு கூடி ஒன்றுபடுகிறார்கள். இறுதியாக முல்லை நிலப்பகுதி வேளாண் பகுதியொடு ஒருங்கினைந்த மேற்கூறிய வற்றை நிரூப்பிக்கிறது.”**[76]

கால்நடைச் சமூகங்களில் வேளாண்மை கூடுதலான முக்கியத்துவம் பெற்றமையை **“பல பகுதிகளில் எங்கெல்லாம் இயற்கைச் சூழல் சாதகமாக இருந்ததோ அங்கல்லாம் மேய்ச்சல் வேளாண்மையாக அல்லது கலப்பு வேளாண்மையாக உழவும் மேய்ச்சலும் சேர்ந்தே** செய்யப்பட்டன”[77]

சங்க இலக்கியங்களில் திணைச் சமூகம் பற்றி கூற வரும் ஆ.சிவசுப்ரமணியன், “பொருள் உற்பத்தி முறைகளும், வேலைப்பிரிவினைகளும் அங்கு இருந்தமையைச் சுட்டுவதற்கு,

1. **தோட்ட வேளாண்மை**
2. **கால் நடை வளர்ப்பு**
3. **பால் மற்றும் பால்படு பொருள்களை விற்றுவரல்**

என்று குறிப்பிட்டுள்ளார்.”[78]

மேய்ச்சல் நில சமூகத்தின் முக்கிய விளைவாக அதன் தேவைக்கு மேலான உபரி உற்பத்தி உண்டாயிற்று . இதனை எங்கலஸ் **“ஆடு மாடுகளை வளர்ப்பது, விவசாயம் செய்வது , வீட்டில் செய்யும் கைத்தொழில்கள் ஆகிய எல்லாத் துறைகளிலும் உற்பத்தி பெருகுகிறது. இதனால ̇மனிதனின் உழைப்பு சக்தி தனது வாழ்க்கைத் தேவைக்கு வேண்டியதை விட அதிகமாகவே உற்பத்தி செய்ய முடிந்தது”[79] என்று குறிப்பிடுகிறார்.**

அதிக உற்பத்தியின் விளைவாக வேலையின் அளவு அதிகரித்து உழைப்பு சக்தி அதிகம் தேவைப்பட்டது. இத்தேவையை நிறைவு செய்ய போர்கள் உருவாயின. இதனால் பிடிப்பட்டவர்கள் அடிமைகளாக்கப்பட்டார்கள். மேய்ச்சல் சமூகத்தின் தொழில் அடிப்படையிலான பொருளாதாரச் செயற்பாடுகளை அறிவது அவசியமாகிறது.

### 1.11.1 கொடுங்கோற் கோவலர்

இடைச்சி சேரியிலே பன்னிற மணிகளை நிரல்படக் கோத்தாங்குச் சிறிய தாமணியிலே தொடுக்கப்பட்ட பன்னிற ஆன்கன்றுகள் நிற்கின்ற அங்கும், அவற்றின் பால் அன்புகொண்ட ஆய்மகள் 'நுந்தாயர் இன்னே வருந்த வேண்டாம்' என்று ஆறுதல் கூறுவதாக,

**"சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்**

**உயதுயர் அலமரல் நோக்கி ஆய்மகள்**

**நடுங்குசுவல் அசைத்த கையள் கைய**

**கொடுங்கோல் கோவலர் பின்னின்று உய்த்தர**

**இன்னே வருகுவர் தாயர்"**[80]

பாடல் வரிகள் அமைகின்றன. சிறிய கயிற்றால் இளங்கன்றுகளைக் கட்டியிருந்தனர். அவை தம் தாயார் வரவை நோக்கி பசியால் துன்பத்துடனும், வருத்தத்துடனும் அங்குமிங்கும் பார்த்துக் கொண்டிருந்தன. அதைக் கண்ட இடைக்குலப் பெண், குளிரால் தோள்மேல் கைகளைக் கட்டிக் கொண்டு நின்றவள். கொடிய கம்புகளையுடைய இடையர் பின்னே நின்று செலுத்த இப்போது, உங்கள் தாயர் வந்து விடுவர் என்று குறிப்பிடுவதாக அமைந்துள்ளது இப்பாடல்.

### 1.11.2 கொல்லைக் கோவலர்

தோட்ட உழவினைக் காக்கும் மேய்ச்சல்காரர் கொல்லைக் கோவலர் என்று அழைக்கப் பெறுவர். இதனை

**"கொல்லைக் கோவலர் குறும்புனம் சேர்ந்த**

**குறுங்காற் குரவின் குவிஇணர் வான்பூ**

**ஆடுடை இடை மகன் சூடப் பூக்கும"**[81]

கொல்லைகளில் இருக்கும் ஆநிரை மேய்ப்போரின் சிறிய புனத்தைச் சார்ந்ததும் , குறுகிய காலை உடையதுமான சூரா மரத்தில் வெண்மையான பூங்கொத்துக்களை ஆடு மேய்க்கும் இடையன் அணிந்து கொள்ளுமாறு பூப்பிக்கும் இது குறித்துக் கூறும் மற்றொரு பாடல்.

**"கொல்லைக் கோவலர் எல்லி மாட்டிய**

**பெருமர ஒடியல் போல "**[82]

ஊர்த்தோட்டத்தில் கோவலர்கள் எரிக் கொளுத்திய பெரிய மரத்தினது ஒடிந்த பகுதியைப் போல என்று பொருள் தருகிறது.

**1.12 கால்நடை வளர்ப்பு**

கால்நடை வளர்ப்பில் ஈடுபட்ட முல்லை நில மக்களிடம் தாம் வளர்க்கும் கால்நடையில் அடிப்படையில் வேறுபாடுகள் உருவாகியிருந்தன. இதனை ஆ.சிவசுப்பிரமணியன **"எருமைகளை வளர்ப்போர் கோட்டினத்தாயன் (கலித்தொகை 103 : 33,105,58) என்றும் , பசுக்களை வளர்ப்போர் நல்லினத் தாயர் " அல்லது" கோவலினத்தாயர் (கலித் தொகை 103 : 36, 104 : 6, 11- 10) என்றும் ,ஆடுகளை வளர்ப்போர் புல்லினத் தாயன் (கலித் தொகை 103 : 47, 110 :1) என்றும் குறிப்பிடப்படுகின்றனர்" 83** தொடக்க கால கால்நடைவளர்ப்பில் அதன் ஊண் முக்கியத்துவம் பெற்றிருந்தது. வீரர்கள் பசுவைக் கொன்று அதன் புலாலை உண்டனர் என்று,

**"பயம்நிரை தழீஇய கடுங்கண் மழவர்**

**அம்புசேண் படுத்துவன் புலத்து உய்த்தெனத்**

**தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில்**

**கொழுப்பு எறந்து, குருதி தூஉய்,**

**புலவுப் புழுக்கு உண்ட வான்கண் அகல்அறைக்"**[83]

வரிகள் உணர்த்துகின்றன. பாலாகிய பயனைத் தரும் பசுக்களைக் கவர்ந்த வெட்சி வீரர் தம்முடன் போரிட்ட கரந்தை வீரரை வன்மையான வாள் கொண்டு வீசியும் அம்பை எய்தும் நெடுந்தூரம் விரட்டினர். ஆநிரையை வலிமையான காட்டில்பசுவைக் கொன்று அதன் குருதியைத் தூவித் தெளித்துப்பலியிட்டனர். பின்பு புலாலைப் புழுக்கித் தின்றனர் என்று பொருள் தருகிறது.

### 1.12.1 பால் நொடைஇடையன்

மேய்ச்சல் சமூகத்தில் கால்நடைகளின் பாலும் பால்படு பொருள்களும் முக்கிய பொருள் ஆதாரமாக இருந்தன. இதனை சங்க இலக்கியங்கள் ஆதாரங்களோடு விளக்குகின்றன.

**“பறிப்புறத்து இட்ட பால்நொடை இடையன்**

**நுண்பல் துவரைஒருதிறம் நனைபேத்**

**தண்டுகால் வைத்த ஒடுங்குநிலைஇ”**[84]

மழை காலிறங்கிப் பொழிகின்ற மழைக்காலத்தில் இறுதி நாள் பால் விலை கூறும் இடையன், கையில் பலவாகிய கால் இட்டு பின்னிய உறியுடன் தீக்கடை கோல் முதலான, கருவி பலவற்றை கொண்ட தோற்பையினையும் , ஒரு சேர சுருக்கிக் கட்டினார் என்று இடையன் குடியிருப்பு பற்றி கூறப்பட்டுள்ளது.

### 1.12.2 நாள் மோர் மாறும் நல்மாமேனி

முல்லை நில மக்களாகிய இடையர்கள் குடில் அமைத்து அதிலே ஆடு மாடுகளை கட்டி வைத்து காவல் காத்தனர். குழலைச் சுற்றிக் கிடைக்கும் ஆடுமாடுகளின் கழிவுகளை எருவாகப் பயன்படுத்தினர். ஆடு மாடுகளிலிருந்து கிடைக்கக்கூடிய பால், மோர் ஆகிவற்றை விற்றனர் என்ற செய்தியை பெரும்பாணாற்றுப்படை,

**“. மாறிய**

**குளகு அரை யாத்த குறுங்கால், குரம்பை,**

**சேற்றை வாயில், செறிகழிக் கதவின்**

**கற்றை வேய்ந்த கரித்தலைச் சாம்பின்**

**அதளோன் துஞ்சுசம் காப்பின் உதள,**

**நெடுந்தாம்பு தொடுத்த குறுந்தறி முன்றில்**

**கொடுமுகத் துருவைடியாடு வெள்ளை செக்கும்**

**இடுமுன் வேலி எருப்படு வரைப்பின்**

**நள்இருள் விழயல்பஜளளபுப் பெசி**

**புலிக்குறல்  மத்தம் ஒலிபீப வாங்கி**

**ஆரம்பிவான்  முகை அன்ன உம்புமுகிழ்**

**உறை அமை தீம்தயிர் கலக்கி, நுரைதெரிந்து**

**புகர்வாய்க் குரிசி பூஞ்சுமட்டு இரீஇ**

**நாள்மோர் மாறும் நல்மா மேனி”[85]**

முல்லை நில மக்களாகிய இடையர் வசிக்கும் ஊர்களில் சிறுசிறு குடிகள் காணப்பெற்றன. குடிகளின் வாயிலில் கட்டையான கால்களில் ஆட்டிற்குரிய குழைகள் கட்டி இருந்தன. அங்கு ஆட்டுக்குட்டிகள் அவற்றைத் தின்று கொண்டிருந்தன. குழலின்  வாயில் கழிவுகள் குப்பையாகக் கிடந்தன. குழல் கதவுகள் மூங்கில் கழிகளால் அமைக்கப் பெற்றிருந்தன. உட்பகுதியில் ஆட்டுத்தோல் படுக்கையாக ஆட்டைக்காவல் காப்போன் படுந்திருந்தான். நீண்ட கயிறுகளால் கிடாய்கள் கட்டப்பெற்றிருந்தன. வளைந்த முகமுடைய  செம்மறி ஆடுகளுடன் வெள்ளாடுகளும்  அங்கு இருந்தன. அச்சிறு குழல்களைச் சுற்றி

முள்வேலி அமைத்திருந்தனர். குழலைச் சுற்றி ஆடு மாடுகளின் கழிவுகளாகிய எருமிகுதியாகக் காணப்பெற்றது. அத்தகைய ஊரில் முல்லை நில இடைக்குலப் பெண் இருள் புலரும் காலையில் பறவைகள் எழுகின்ற காலத்தில் எழுந்த புலிக்குரல் போன்று ஒலிக்கின்ற தயிர் மத்தினை எடுத்துத் தயிர் கடைவாள் குடைக்காளான் போன்று தயிர் உறைந்திருக்கும் . அதைக் கடைந்து அதிலிருந்து வந்த வெண்ணெயை எடுத்துத் தனியாக வைத்து விட்டு மோரை மட்டும் அதற்குரிய பானையில் எடுத்துக் கொண்டு புள்ளிகளையுடைய அம்மோர்ப்பானையைத் தலையில் மென்மையான சும்மாட்டின் மீது வைத்து விற்கச் செய்வாள்.

### 1.12.3 கோவலர் விடுநிம் உடைத்த கலும்கண் கூவல்

கால்நடைகளை வளர்க்கும் இடையர் ஆடு மாடுகள் நீர் அருந்துவதற்காக நிர் ஊற்றுக்களை தோண்டுதல் உண்டு என்பதை,

> **“ கோவலர்**
>
> **விடுநிலம் உடைத்த கலுர் மண் கூவல்**
>
> **கன்றுடை மடப்படி களிறொடு தடவரும்**
>
> **புன்தலை மன்றத்து அம்குடிச் சீறூர்த்”[86]**

பால் சுரக்கும் மடிகளோடு ஒலிக்கும் மணிகளைக் கொண்ட பசுக்கூட்டம் நீர் குடிக்கும் பொருட்டு ஆயர் தரிசு நிலத்தில் கற்களை உடைத்து உண்டாக்கிய நீர் கசிகின்ற ஊற்றுக் கண்களை உடைய கிணற்றில் பெண் யானை தன் கன்றுடன் குடிக்க முயன்று ஆண் யானை தடவிப் பார்க்கும் வழிகளை உடையது காடு.

### 1.12.4 மடிவாய் இடையன்

ஆடுமாடுகளை ஓட்டுங்காலத்துச் சீழக்கையொலி செய்வாராதலின் இவர்தம் வாய் மடிந்து காணப்படும் என்பதை,

> **“பாசிலைத் தொடுத்த உவலைக் கண்ணி,**

**மாசுஉண் உடுக்கை, மடிவாய் இடையன்**

**சிறுதலை ஆயமொடு குறுகல் செல்லாப்**

**புலிதுஞ்சு வியன்புலத் தற்றே”**[87]

பசுமையான இலைகளால் தொடுக்கப்பெற்ற மாலையையும் அழுக்குப் படிந்த உடையையும், சீழ்க்கையடிக்கும் வாயையும் உடைய இடையன், சிறிய தலையை உடைய ஆட்டுக்குட்டியுடன் நெருங்க முடியாத புலி வாழும் பெரிய கட்டிடத்தை போன்றது என்று கூறுகிறது. கால்நடைகள் மிகுந்த சொத்தாகவும், செல்வங்களாகவும் சங்க காலத்தில் பயன்பட்டன. ஒரு குறிப்பிட்ட கால கட்டத்தில் பணத்தின் பணியைக் கால்நடைகள் செய்தமைக்கு சான்றுகள் உள்ளன.

**“கால்நடைகளை வைத்திருப்பது மனிதனின் தலையான செல்வம் என்று வேத நூல்களில் மீண்டும் மீண்டும் கூறப்படுகிறது. மக்களுக்கு பசுக்களைத் தரும்படி வேதப்பாக்களை ஆக்கியோர் கடவுள்களை இடையறாது வேண்டுகிறார்கள். போர் ஆநிரை கவர்வதற்கான முயற்சியாக்க கருதப்பட்டது. கால்நடைகள் கைப்பற்றப்படுவது வேத இனக்குழுக்களுக்கு இடையே மோதல்களுக்கு முக்கிய காரணமாய் இருந்ததாகத் தெரிகிறது”**[88]

போரில் கவர்ந்து வரப்பட்ட பசுக்கூட்டத்தை தம் ஊரிடத்தில் நிறுத்தி, அவற்றைத் தம்முள் பகிர்ந்து கொள்ளுதலையும் தொல்காப்பியம்,

**“ முற்றிய**

**ஊர்க்கொலை, ஆகொள் பூசல் மாற்றே**

**நோயின்று உய்த்தல், நுவலுரித் தோற்றம்**

**தந்துநிறை பாதீடு, உண்டாட்டு கொடைஎன”**[89]

**(தொல், புறத்-நூ, 1004)**

பசுக்கூட்டத்தைக் கொள்ளுதல், பகைவரோடு செய்யும் சண்டை பசுக்கூட்டத்தை நோயில்லாமல் தம் நாட்டுக்கு கொணரல், சொல்லிய இடத்துத் தோன்றுதல், பசுக்கூட்டத்தைக் கொணர்ந்து நிறுத்துதல், பங்கு வைத்தல், மகிழ்ச்சியால் உண்டு களித்தல் தானமாகக் கொடுத்தல் ஆகியன. இவ்வாறு கால்நடைகள் சொத்தாக விளங்கியமைப் புலப்படுகிறது.

### 1.12.4 கொடுங்கோற் கோவலர் ஏறுடை இனநிரை

கடிய குளிர் வாட்டும் கதிர்காலப் பருவம் ஆயினும் இடையர்கள் ஆநிரை மேய்க்கும் தொழிலை தவறாது செய்தனர் என்பதை,

**“ஆர்கலி முனைகிய கொடுங்கோல் கோவலர்**

**ஏறுடை இனைநீரை வேறுபுலம் பரப்பிப்**

**புலம்பெயர் புல்பொடு கலங்கிக் கோடர்**

**நீடுஇதழ்க் கண்ணி நிரலைக் கலாவ**

**மெய்க்கொள் பெரும்பனி நலியப் பலருடன்**

**கைக்கொள் கொள்ளியர் கவுள்புடையுங் நடுங்க”**[90]

மழை காரணமாக மிகுதியாக வெள்ளம் பெருகியது. வளைந்த கம்பியுடைய முல்லை நிலமக்களாகிய இடையர் ஆகிய கோவலர் தம் மாடு -ஆடு ஆகிய கால்நடைகளை மேய்ச்சலுக்கு மேட்டு நிலங்களுக்குக் கொண்டு சென்றனர். தம்மிடத்தை விட்டு நீங்கிய தனிமையில் கலங்கினர். காந்தள் பூவின் நீண்ட இதழ்களால் தலைமாலை அணிந்திருந்தனர். அத்தலைக் கண்ணியில் நீர் விழுதலால் கலக்கமடைந்தனர். உடம்பில் மிகுதியான குளிர்ச்சியால் வருந்தினர். குளிர்ச்சியைப் போக்கக் கையில் கொள்ளிக் கட்டைகளை வைத்திருந்தனர். கன்னங்களும் பற்களும் பறை கொட்ட நடுங்கினர் என்று எதிர்காலத்தின் குளிர் மிகுதியை எடுத்துக் காட்டுகிறது.

### 1.12.5 மன்ற எருமை மலர்தலைக் கார்ஆன்

விடியற் பொழுதிலே தொழுவத்திலுள்ள அகன்ற தலையையுடைய எருமையின் பாலைக் கரந்து விட்டு, அதனை மேய்ப்பிற்குப் பிடித்துச் செல்வர் இளயசிறுவர்கள். இதனை,

**"மன்ற எருமை மலர்தலைக் காரான்**

**இன்தீம் பாற்பயம் கொண்மார் கன்றுவிட்டு**

**ஊர்க்குறு மாக்கள் மேற் கொண்டு கழியும்**

**பெரும்புலர் விடியல்"[91]**

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன. ஊரில் உள்ள சிறுவர்கள் பெரிய தலையை உடைய கரிய எருமைகளில் இனிய பாலைக் கரந்து கொள்வற்காக அவற்றின் கன்றுகளைத் தொழுவில் விட்டு வைப்பர் எஞ்சிய எருமைகளின் மேலேறிச் சென்று தனியே மேய்த்து வருவர்.

### 1.12.6 பல்லாண் கோவலர்

பலவாகிய ஆநிரைகளை உடையவரான முல்லைப் பூக்கண்ணியை அணிந்த கோவலர்கள் புல்மிகுதியாக உள்ள பரந்த நிலத்திலே பரவலாக மேயவிடுவர் என்பதனை,

**"முல்லைக் கண்ணிப் பல்லாண் கோவலர்**

**புல்லுடை வியன்புலம் பல்லா பரப்பி"[92]**

இப்பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

### 1.12.7 கல்லாக் கோவலர்

ஆநிரைகளை மேய்க்கும் பொழுது அவை நீரைக் குடிப்பதற்காக கோவலர் தம்முடைய கையிலுள்ள கோலால் சிறிய பத்தலைத் தோண்டுவர். இதனை

**“கல்லாக் கோவலர் கோலில் தோண்டிய**

**ஆன் நீர் பத்தல்”**[93]

அறியாமையுடைய இடையர்கள் இரும்புக் கம்பியால் நிலத்தைத் தொண்டாமல் ஆநிரை மேய்க்கும் கொலால் தோண்டி ஏற்படுத்திய நீர்ப்பள்ளம் என்று பொருள் கூறுகிறது இப்பாடல் வரிகள்.

### 1.12.8 குழல்வாய்க் கோவலர்

ஆநிரைகளை வளமான முல்லை நிலப்பரப்பிலே மேயவிட்ட கோவலர் வேய்க்குழலை வாயின்கண் வைத்து முல்லைப்பண்ணை இசைப்பர் என்பதனை,

**“.. கன்றொடு**

**கறவைப்புலலினம் புறவுதொறு உகளக்**

**குழல்வாய் வைத்தனர் கோவலர்”**[94]

பசுக்கூட்டங்கள் கன்றுடன் காடு தோறும் தாவி வர இடையர் தம் குழலை வைத்து ஊதத் தொடங்கினர் என்று கோவலர்கள் முல்லைப்பண்ணை ஆநிரை மேய்க்கும் தொழில் மேற்கொண்ட போது ஊதினர் என்பதை அறிய முடிகிறது.

### 1.12.9 கோற்கைக் கோவலர்

ஆநிரைகளை பகல் பொழுதெல்லாம் மேய்த்துவிட்டு மாலைப்பொழுதிலே தனது மனை நோக்கி ஓட்டிச் செல்வர். இதனை,

**“தாம்பு அசைகுழவி வீங்குசுரை மடியக்**

**கனையலங் குரல கால்பரி பயிற்றப்**

**படுமணி மிடற்ற பயநிரை ஆயம்**

**கொடிமடி உடையர் கொல்கைக் கோவலர்**

**கொன்றைஅம் குழலர் பின்றைத் தூங்க,**

**மனைமனைப் படரும் நனைநகு மாலை”**[95]

கொன்னைத் தீங்குழல் ஊதுபவராய் உள்ள இடையர்கள் கையில் கோலுடன் மேய்ச்சலுக்கு விடப்பட்ட பசுக்கூட்டங்கள் முன்னே செல்லப்பின்னே மெதுவாக நடந்து பால் மடிச்சுமை குறையுமாறு வீடுகளில் கன்றுகளிடம் சேர்ப்பிக்கும் மாலைப்பொழுது என்று கோவலர்களின் ஆநிரை மேய்த்தலை எடுத்துக் காட்டுகிறது இப்பாடல் வரிகள்.

இவ்வாறு மேய்ச்சல் சமூகத்தின் முக்கியத் தொழிலாக கால்நடை வளர்ப்பை எடுத்துக் கூறுவதாக அமைந்துள்ளன. இவை சமூகத்தின் பொருளாதார நடவடிக்கைகளுக்கு ஆதாரமாக விளங்குகின்றன.

## 1.13 முல்லை நிலமும் புன்செய் வேளாண்மையும்

பருவ மழையை எதிர்நோக்கி பயிர் செய்யப்படும் வேளாண் முறை புன்செய் வேளாண்மையாகும். வரகு இந்நிலத்தின் முக்கியப்பயிர் வகையாகும். இது கார் காலத்தில் செழித்து வளரும்.

### 1.13.1 செவ்விகொள் வரகு

பருவத்தின் தன்மையை எடுத்துக்கூறும் கார் பருவத்தின் தன்மையினை உணர்த்தும் வகையில் வரகு பயிர் வளர்ந்தமையை,

**“செவ்விகொள் வரகின் செஞ்சுவற் கலித்த**

**கவ்வை நாற்றின் கார்இருள் ஓர்இலை**

**நவ்வி நாள்மறி கவ்விக் கடன் கழிக்கும்**

**கார்எதிர் தண்புனம் காணின்”**[96]

விளக்குகின்றது. செம்மண் மேட்டில் தழைத்த செவ்விய பருவத்தை அடைந்த வரகின் நாற்று காற்றில் அலைந்து ஒன்றோடொன்று ஊராய்ந்து ஒலி எழுப்பும்,

அதன் கரிய இருள்போன்று கருத்த ஓர் இலையை மான்குட்டி கடித்து தின்று அந்நாளுக்கு உரிய பசியைத் தீர்த்துக் கொள்ளும். அத்தகைய கார்ப் பருவத்தைக் கொண்ட தன்மையாக வனம் என்று விளக்குகிறது. இதனை வலியுறுத்தும் மற்றொரு பாடல்,

**“வானம் வாய்ந்த வாங்குகதரி வரகின்”**

**(முல்லைப் - 98-98)**

என்ற பாடல் வரி காட்டில் பெய்த மழையால் வளைந்த கதிரையுடைய வரகுகள் விளைந்திருந்தன என்று குறிப்பிடப்படுகிறது.

**1.13.2 வாலிதின் விளைந்த புதுவரகு**

வரகு தன் இலைதழைத்துப் பெருகி, மெல்லிய மயிலினது ஈன்றணிய பேடையைப் போன்று ஓங்கி, கரிய தண்டு நீண்டு, எல்லாம் ஒரே நேரத்தில் சூல் விரிந்து ஒரே சீராய் கதிரினது அடியும் தலையும் ஒடியாமல் செழுமையாக மிகக் காய்க்கும். இக்காட்சியைப் புறநானூறு.

**“கார்ப்பெயல் கலித்த பெரும்பாட்டு ஈர்த்துப்**

**பூமி மயங்கப் பலஉழுது, வித்திப்**

**பல்லி ஆடிய பல்கிளைச் செவ்விக்**

**களைகால் கழாலின், தொடு ஒலிபு நந்தி,**

**மெய்மெயில் புனிற்றுப்பெடை கடுப்ப நீடிப்**

**கருந்தாள் போகி, ஒருங்குபீள் விரிந்து,**

**கீழும் மேலும் எஞ்சாமைப் பலகாய்த்து**

**வாலிதீன் விளைந்த புதுவரகு”**[97]

மேட்டு நிலத்தில் கார்கால்பருவ ஈரத்தில் புழுதி கலக்கப் பலமுறை உழுது, விதைத்து பலகை அடிக்கப்பெற்ற பல கிளைகளை உடைய நிலையில் களைகளை அடியொடு பறித்தலால் பண்ணைப் பிடித்துச் சிறந்த மெல்லிய பெண் மயில்போலக் கரிய தண்டு நீண்டு எல்லாக் கதிர்களும் விரிந்து கீழும் மேழும் குறைவில்லாமல் நிறைய காய்த்து விளைந்த புதிய வரகை அறுத்தல் உண்டு என்று பாடல் வரிகள் விளக்கம் தருகின்றன.

இவ்வாறு முல்லை நிலத்து மக்கள் ஆநிரை மேய்த்தலையும், புன்புல வேளாண்மையையும் தொழிலாகக் கொண்டு பொருள் ஆதாரத்தைப் பெற்றனர்.

### 1.13.3 கவைக்கதிர் வரகு

வரகினைக் கதிரோடு கூடிய தட்டைகளினின்றும் பரித்தெடுத்த எருதுகளை மிதிக்க விடுவர். கதிர்களினின்றும் உதிர்ந்த அகன்ற பாறையிற் குவித்துத் தூற்றி எடுப்பர். இதனை

**“சுவற் கலித்த ஈர்இலை நெடுந்தோட்டுக்**

**கவைக்கதிர் வரகின் கால்தொகு பொங்கழி**

**கவட்டுஅடிப் பொருத பலிசினை உதிர்வை**

**அகன்கண் பாறைச் செவ்வயின் தெறீஇ”**[98]

புதிய தோட்டத்தில் தழைத்த குளிர்ந்த இலையில் நீண்ட இதழ்களை உடைய கதிரோடு வரகின் தட்டைகளைப் பொலியாகத் தொகுத்தனர். பொலியில் மாடுகளின் பிளவுபட்ட குறம்புகளால் துவைக்கப் பெற்றுப் பல கிளைகளில் இருந்து உதிர்ந்த வரகினை அகலமான பாறைகளில் குவித்தனர் என்று குறிப்பிடுகிறது. வரகானது புறாவின் முட்டை போன்று இருக்கும் என்பதை,

**புறவுக் கருவண்ண புன்புல வரகு**

புறநானூற்றுப்பாடல் வரி குறிப்பிடுகிறது.

### 1.13.4 குறுந்தாள் வரகு

நெடுங்கொத்தை உடைய பூளைப்பூப் போன்று இருக்கும் வரகின் தன்மையை,

**“எழுகாடு ஓங்கிய தொழுவுடை வரைப்பில்**

**பிடிக்கணத்து அன்ன குதிருடை முன்றில்**

**களிற்றுத் தான்புரையும் திரிமரப் பந்தர்**

**குறுஞ்சாட்டு உருளையொடு கலப்பை சார்த்தி,**

**நெடுஞ்சுவர் பறைந்த புகைசூழல் கொட்டில்**

**பருவ வானத்துப் பாமழை கடுப்பக்**

**கருவை வேய்ந்த கவின்குடிச் சீறூர்**

**நெடுங்குரல் பூளைப் பூவின் அன்ன**

**குறுந்தாள் வரகின் ”[99]**

பாடல்வரிகள் விளக்குகின்றன. முல்லை நிலத்தில் இடையர்கள் வாழ்கின்ற பகுதியைச் சுற்றி முள்ளால் அமைந்த உயிர் உள்ள வேலியை அமைத்திருந்தனர். அவர்கள் வீட்டு முற்றத்தில் பெண் யானைக்கூட்டம் போன்ற குதிர்களில் வரகுக் கதிரைப் போட்டு வைத்திருந்தனர். அத்துடன் முன்றிலில் வரகுக் கதிரைத் திரிப்பதற்கு யானைகளின் கால்கள் போன்ற திரிமரங்கள் இருந்தன. சின்ன வண்டிகளின் சக்கரங்களையும், கலப்பையையும் நீண்ட சுவரில் சார்த்தி வைத்திருந்தனர். அப்பகுதியே உணவாக்கும் சமையல்கட்டாக இருந்ததால் புகை படிந்திருந்தது. கார்காலத்து வானத்து மேகங்கள் தோன்றுவது போல அவர்களுடைய குழசைகளில் வரகு வைக்கோலால் கூரைபோட்டிருந்தனர். அழகிய சிறிய ஊராக அது அமைந்தது. குட்டையான அழயையுடைய வரகுப்பயிரால் வந்த நீண்ட கொத்துக்களையுடைய பூளைப்பூ போன்ற வரகுச் சோற்றை வேங்கைப்

பூவை ஒத்தது. இவ்வாறு கோவலர்களின் ஊர் அமைத்திருத்ததையும், அதனைச் சுற்றி வரகுத் தாள் போடப்பட்டு இருந்ததையும் அறிய முடிகிறது.

### 1.14 மருதத்திணையின் சமூகப்பொருளாதாரப் பதிவுகள்

மருதநிலம் என்பது மலைக்கும் கடலுக்கும் இடைப்பட்ட பகுதியாகும். பல்வகைப் பயிர்வகைகளும் வளர்ப்பதற்கு ஏற்ற நில வளமும் நீர்வளமும் கொண்டது. மக்கள் மிகுதியாக வாழுகின்ற நிலம் மருதத்திணையின் ஒழுக்க முறைகளைப் பற்றிக் கூற முற்படும் கா.சிவத்தம்பி,

**“மருதத்தின் ஒழுக்க முறையான ஊடலின் சமூகப்பொருளாதார முக்கியத்துவம் எளிதில் புரியக்கூடியதே. மருதத்தின் வேளாண்மையின் வளர்ச்சியானது விரிவான தனி நிலவுடைமை வளர்ச்சிக்கு அடிகோலியது. வேளாண்மை நடைபெறும் இப்பகுதியில்தான் நாம் முதல் முறையாக நில உடைமையற்ற வேலைகளைக் காண்கிறோம். வேளாண்மை நடைபெறும் நிலப்பகுதிகளை வருணிக்கும் போது கவிஞர்கள் அடிக்கடி விதைத்தல், அறுவடை செய்தல் ஆகிய செயல்களைச் செய்யும் வினைவலர் என்பவரைக் குறிப்பிடுகிறார்கள். பொருளாதார ஆதிக்கத்தின் அடிப்படை உபரி உற்பத்தி”100 என்று குறிப்பிடுகிறார்.**

மருத நிலத்தின் பொருளாதார செயற்பாடுகளுக்கு அடிப்படையாக நன்செய் வேளாண்மையும், வேளாண் வளர்ச்சியில் ஏற்பட்ட கைத்தொழில்களும், அதனைச்சார்ந்த வாணிபமும் முக்கிய தொழிலாக அமைந்தமையை அறிய வாய்ப்பாக அமைகின்றன சங்க இலக்கியங்கள்.

#### 1.14.1 நன்செய் வேளாண்மை

மக்களின் வளமான வாள்விற்கும் வசதிக்கும் பயன்படும் அடிப்படையான தொழில்கள் வாழ்வியலோடு நெருங்கிய தொடர்புடையன. மனித வாழ்விற்கு அடிப்படையான உணவு வேளாண்மையின் மூலமே பெறப்படுகிறது. இதுவே ஒவ்வொரு மனிதனின் பெருமைக்கும் சிறுமைக்கும் அடிப்படை காரணமாக அமைகிறது.வேளாண்மைத் தொழிலானது பன்னெங்டுகாலமாக தமிழரின்

தொழிலாகக் கருதப்பட்டது. சங்க இலக்கியங்களில் வேளாண் என்ற சொல் இரண்டு இடங்களிலும் வேளாண்மை என்ற சொல் ஓரிடத்திலும் இடம் பெற்றுள்ளது"101 என்ற குறிப்பை சசிவல்லி தருகிறார். வேளாண்மைப் பற்றி பழந்தமிர் இலக்கண நூலான தொல்காப்பியம், உழவுத் தொழிலுக்கு உரிய மாந்தர்களே,

**"வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது**

**இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி"**[102]

வேளாண் மாந்தர்கள் என்று குறிப்பிடுகிறார். **"வேளாண்மை என்பதை ஒரு கலை என்றும், ஓர்அறிவியல் என்றும் கூறலாம். வேளாண்மை என்பது பொருளாதார வளர்ச்சிக்காகப் பயிர்களையும், கால்நடைகளையும் கொண்டு செய்யப்படும் தொழிலாகும். இவ்வேளாண்மைத் தொழிலில் பயிர்உற்பத்தி, கால்நடை பராமரிப்பு தோட்டக்கலை, பால்பண்ணை, காடு வளர்ப்பு, மீன்வளம் மற்றும் வேளாண் பொறியியல் போன்ற பிரிவுகள் அடங்கும்"**[103]

நானிலங்களுள் மண்வளமும், நீர்வளமும் குறைந்த பகுதியை வன்புலம் என்றும், முல்லையும் குறிஞ்சியும் இதற்குச் சான்றாகும். மாறாக வளமும் நீர்வளமும் நிறைந்த இடத்தை மென்புலம் என்றும், மருதமும் நெய்தலும் இதற்குச் சான்றுகள் என்று

**"வன்புலக் கேளிர்க்கு வருவிருந்து அயரும்**

**மென்புல வைப்பின் நன்நாட்டுப் பொருந**

**(புறம் 42,பா.எ-17-18)**

என்று குறிப்பிடுகிறது.

### 1.14..1.1 உழு தொழில்

மருத நிலத்தின் உற்பத்தி பெருக்கத்தை அறிவதற்கு உழுதுண்போரும், உழுவித்துண்போரும் முக்கிய காரணிகளாக இருக்கின்றனர். நிலவுடைமை சமூகத்தின் தோற்றம் மருத நிலத்தின் தொடக்கம் எனக் கொள்ளலாம்.

**"தமிழகத்தில் பிற நிலங்களை விட மருதநிலத்தில் மாற்றம் முன்னதாகவே நிகழ்ந்தது. இங்கு எல்லாச் சமூக உறவுகளின் வளர்ச்சியையும் நிர்ணயிக்கக்கூடிய உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சியை புரிந்து கொள்ள சூழ்நிலைகளின் தன்மையால் தீர்மானிக்கப்படுகின்றது என்ற மார்க்சிய அறிஞர்களின் கூற்று"[104]** என்று வெ.பெருமாள்சாமி குறிப்பிடுகிறார்.

மருத நில மக்கள் மிகுதியாக உழவுத் தொழிலில் ஈடுபட்டனர். அந்நிலத்திற்குரிய மக்களை "ஊரன், மகிழ்நன், கிழவன், மனைவி, கிழத்தி, உழவர், உழத்தியர், கடையர், கடைசியர், களமர், தொழுவர் எனப்பட்டனர். இவர்களில் ஊரன் மகிழ்நன், கிழவன், மனைவி, கிழத்தி என்போர் மேன் மக்கள் எனப்பட்டனர். இவர்கள் அடிமை எஜமானர்களும் ஆண்டைகளும் ஆவர். உழவர், உழத்தியர், கடையர், கடைசியர், களமர் தொழுவர் என்போர் கீழ்மக்கள் எனப்பட்டனர்."105 உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற பாகுபாடு மருத நிலத்தில் மிகுதியாகக் காணப்பட்டது. மருத நிலத்தில் உழைக்கும் மக்களாக உழவர், உழத்தியர், கடையர், கடைசியர் முதலியவர்கள் கருதப்பட்டனர். இவர்கள் உழவுத்தொழிலில் சிறப்புப் பெற்றிருந்தனர். உழவுத் தொழில் மேற்கொள்ள வேண்டிய உத்திகளாக வள்ளுவர்.

**"ஏரினும் நன்றால் எருவிடுதல் கட்ட பின்**

**நீரினும் நன்று அதன் காப்பு"[105]**

ஏரால் உழுதலைப் போல எருவிடுதலும் பயிருக்கு நல்லதேயர் களையினை நீக்கிய பிறகு பயிரை பாதுகாத்தல் நீர்பாய்ச்சுதலைப் போல நல்லதேயாகும் என்று உழவர் குறித்து வள்ளுவர் கூறும் தொழில் நுட்பம் விளங்குகிறது.

### 1.14.1.2 கழனி உழவர்

வயலில் உழுதொழில் புரிந்தவர்களை கழனி உழவர் என அழைத்தனர் . சோழ நாட்டின் வளமையை எடுத்துக் கூறுவதற்கு இத்தகைய உழவு பயன்பட்டமையை,

**"பழன மஞ்ஞை உகுத்த பீலி**

**கழனி உழவர் ஆட்டொடு தொகுக்கும்**

**கொழுமீன் விளைந்த கள்ளின்**

**விழுநீர் வெலி நாடுகிழ வோனெ."[106]**

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன. வயலில் மயில் உதிர்த்த தோகையை நெற்கதிரொடு சேர்க்கப்படுவதும், கொழுத்த மீனையும் முதிர்ந்த கள்ளையும் உடைய நீரை வேலியாகக் கொண்ட சோழ நாட்டு வேந்தன் எனக் குறிப்பிடுகிறது.

### 1.14.1.3 வீழ்குடி உழவர்

உழவுத் தொழிலில் ஈடுபடும் உழவன் வறுமை நிலையில் இருந்தமையை போர்களத்தோடு ஒப்பிட்டுக் கூறுவதாக புறநானூறு எடுத்துக்காட்டுகிறது.

**"வாழ்தலின் வருஉம் வயல்வளன் அறியான்**

**வீழ்குடி உழவன் வித்து உண்டா அங்கு"[107]**

வருங்கால வாழ்வுக்கு வளமாக இருக்கும் வாய்ப்பை அறியாதவனாய் வறுமையான குடும்பத்தை உடைய உழவன் விதையைச் சோறாக்கி உண்டது போல என்று உழவன் வருங்காலத்திற்கு சேமிக்கும் பழக்கம் இல்லாதவனாய் இருந்தான் என்பது புலனாகிறது.

### 1.14.1.4 தண்டளை தழீஇய தளரா இருக்கை

நெற்பயிர் பயிரிடப்பட்டமையை அறிந்து கொள்ள பெரும்பாணாற்றுப்படை துணை புரிகிறது. மாடுகளைக் கொண்டு நிலம் உழப்பட்டமை, உழுத நிலத்தைக்

காலால் மட்டப்படுத்தப்பட்டு நாற்று நட்டு, களைபறித்து அறுவடை செய்து நெல்லைத் தூற்றி பயிர் செய்தமையை,

**“பாம்பு உறை மருதின் ஓங்குசினை நிழல்**

**பலிபெறு வியன்கலிம் மலிய ஏற்றி**

**கணமகொள் சுற்றமொடு கைபுணர்ந்து ஆடும்**

**துணங்கை அம்பூதம் துகில் உடுத்தவை போல்**

**சிலம்பி வால்நூல் வலந்த மருங்கின்**

**குழுமுநிலைப் போரின் முழுமுதல் தொலைச்சி**

**பகடுஊர்பு இழிந்த நீக்கிப் பைது அற**

**குடகாற்று அறிந்த குப்பை, வடபால்**

**செம்பொன் மலையின், சிறப்புப் தோன்றும்**

**தண்டளை தழிஇய தளரா இருக்கை”**[108]

மருதநில உழவர் வைக்கோல் போர்களைப் பாம்புகள் வாழுகின்ற மருத மரத்தின் நிழலில் வரிசையாகப் பெரும் புதர்களைப் போன்று காட்சி அளிக்கும் நிலையில் வைத்திருந்தனர். பாம்பு உறைகின்ற மருத நிலமாக இருப்பதால் எலிகள் வந்து நெற்கதிரைத் தின்னாத நிலை அமைகிறது. ஆடு அடித்ததற்கு முன்பு வைக்கப்பட்ட வைக்கோல் போர்கள் புதர்கள் போன்றும் அதைச் சுற்றி நூலாம்படை அந்தப்புதர்கள் வெண்மையான துகிலை உடுத்தி இருந்ததைப்போலும் காட்சி அளிக்கிறது. சூடு அடித்தற்காக அப்போர்களை எல்லாம் இழுத்துப் போட்டுக் களைகளைக் கொண்டு ஆடு அடித்தனர். பின்பு மேல் காற்றின் உதவியுடன் பொலிதூற்றிக் துரும்பு, தூசு இவற்றை நீக்கி நெல்லை மட்டும் பொன்மலை போன்று குவித்திருந்தனர். அத்தகைய மருதநில உழவர் செல்வ வளத்துடன் வாழ்ந்தனர். உழவர்களின் செல்வ செழிப்பைப் பாடல்வரிகள் புலப்படுத்துகின்றன.

### 1.14.1.5 உழா நுண்டொளி நிரவிய வினைஞர்

காளைகள் சண்டையிட்டமையால் உழவர்கள் அவ்விடத்தில் உழுது நாற்று நட்ட செய்தியை பெரும்பாணாற்றுப்படை,

**“பைஞ்சாய் கொன்ற மண்படு மருப்பின்**

**கார்ஏறு பொருத கண்அகன் செறுவின்**

**உழாஅ நுண்தொளி நிரவிய வினைஞர்**

**முடிநாறு அழுத்திய நெடுநீர்ச் செறுவில்**

**களைஞர் தந்த கணைக்கால் நெய்தற்**

**கள்கமழ் புதுப்பூ முனையின்”**[109]

வயலுக்கு வந்த காளைகள் நண்டுப் புடையிலுள்ள கோரைப்புல்லைக்குத்தி எடுக்கும் போது கொம்புகளில் மண் ஒட்டி இருக்கும். இது காளைகளின் இயல்பு. அதனுடன் காளைகள் தம்முள் சண்டையிடும். அதனால் வயல் உழாமலே சேறாகும். அதை உழவர்கள் சமப்படுத்தி நாற்றை நடுவர் என்று மருத நில வயலின் செழுமையை உணர்த்துகின்றன.

### 1.14.1.6 சிறைகொள் வேலி

மருதநில வளத்தை அறிவதற்கு காவிரி நாட்டு வளம் துணை புரிகிறது. காவிரி பாயும் சோழ வள நாடு நீர்வளம் மிகுந்து காணப்பட்டது. இதனால் நெற்பயிர் அதிகம் பயரிடப்பட்டன. இதனை உணாத்தும் செய்தியாக,

**“கூனிக் குயத்தின் வாய்நெல் அரிந்து**

**சூடு கோடாகப் பிறக்கி, நாற்தொறும்**

**குன்று எனக் குவைஇய குன்றாகக் குப்பை**

**கடுந் தெற்று மூடையின் இடம்கெடக் கிடக்கும்**

**சாலி நெல்லின் சிறைகொள் வேலி**

**ஆயிரம் விளை யுட்டு ஆகக்**

**காவிரி புரக்கும் நாடுகிழ வோனே"**[110]

என்று இப்பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன. மிகுதியான நீர் வளம் இருப்பதால் வயல்கள் நன்றாக விளைந்தன. வளைந்த கதிர் அறுவாளால் நெல்லை அரிந்தனர். அரிந்த நெல்லை மலைபோன்று குவித்தனர். நாற்தோறும் எடுக்க எடுக்கக் குறையாது குன்று போன்று அந்நெற்குவியல்கள் காணப்பெற்றன. மூடையில் கட்டிக் குவித்தனர். எங்கும் இடம் இல்லாத நிலையில் நெல் குவிக்கப்பட்டு இருந்தது. ஒரு வேலி நிலம் ஆயிரம் கலம் நெல்லைத தந்தது. அத்தகைய வளத்தை தருகின்ற நாடு காவிரி பாயும் சோழ வள நாடு எனப் பொருள் உணர்த்துகிறது. மருதத்திணையின் செல்வ வளத்தை அறிவதற்கு இப்பாடல் வரிகள் சிறந்த உதாரணம்.

### 1.14.1.7 முடந்தை நெல்லின் கழை அமல்

நீர் நிரம்பிய வயலில் விளையக்கூடிய நெல் வகைகள் ஒன்று முடந்தை நெல். இது மூங்கிலை போன்று பருத்த நெற்பயிர்களை உடைய நெல் வகையாகும். இது மருத நிலத்தில் விளையக்கூடியது என்பதை பாடல் வரிகள் விளக்குகின்றன.

**"தடந்தாள் நாரை படிந்துஇரை கவரும்**

**முடந்தை நெல்லின் கழைஅமல் கழனி**

**பிழையா விளையுன்"**[111]

நெடுங்காலை உடைய நாரைகள் இருந்து இரை கவரும் வளைந்து முடம் பெற்ற மூங்கில்கள் போன்று பருத்த நெற்பயிரின் தாள்கள் நெருங்கிய வயல்களைக்

கொண்டதும் இந்நாடு என்று சோழ நாட்டின் வளமையைக் கூற இத்தகைய நெல் வகைப் பயன்படுகிறது.

### 1.14.1.8 செந்நெல்லின் செறுவிற் கதிர்

மருத நிலம் கழனியில் விளையக்கூடிய நெல் வகைகளில், செந்நெல் வகைகள் சிறப்பிற்குரியதாக கருதப்படுகிறது இதனை,

**“செந்நெல்லும் செறுவில் கதிர்கொண்டு களவன்**

**தண்ணக மண் அனைச் செல்லும்”[112]**

நண்டு செந்நெல் விளையும் வயலில் புகுந்து முற்றிய கதிர்களைக் கொண்டு தன் குளிர்ச்சி பொருந்திய வளைக்குள் இருக்கும் என்பதை செந்நெல் விளையும் கழனி உணர்த்துகிறது. நெற்கதிர்களை அறுவடைசெய்யும் உழவர் இளநீர், நுங்கு, கரும்புச்சார் கலந்த பானத்தைப் பருகிக் கடலில் விளையாடினர்.. வெப்பத்திற்கு வெறுப்புத்தரும் வகையில், ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் என்னும் மூன்று நீரும் கலந்த கடலில் விளையாடினர். எனவே, நெற்கதிர்களை அறுத்து ஓய்வு பெறும் வேளை களைப்பாறினர் என்பதை,

**“ நெல்லரியு மிருந் தொழுவர்**

**முண்டகக் கோதை யொண்டொடி மகளிர்**

**இரும்பனையின் குரும்பை நீரும்**

**பூங்கரும்பின் றீஞ்சாரும்**

**ஓங்குமணற் குவவுத் தாழைத்**

**தீ நீரோ டுடன்வராஅய்**

**முந்நீருண்டு முந்நீர்ப் பாயும்**

**தங்கா உறையுள் நல்லூர்”**

(அகம்,பா.எ-28)

இப்பாடல் வரிகள் குறிப்பிடுகின்றன. அறுவடை செய்த நெற்கட்டுகளை அதற்கான களம் ஒன்றை அமைத்து அதில் கொண்டுவந்து சேர்த்தனர்.

### 1.14.2 கரும்பு

நெல்லிற்கு அடுத்தபடியாக மருத நிலப்பரப்பில் விளைவிக்கப்பட்டது கரும்பாகும். வயல்களை பாத்தி பாத்தியாகப் பிரித்துக் கரும்பை நடுவர் அந்நிலத்து மக்கள். கரும்பு விளைவிக்கப்பட்டமையை பல்வேறு பாடல்கள் உணர்த்துகின்றன.

#### 1.14.2.1 கரும்பு நடு பாத்தியன்ன பெருங்களிற்றடி

நீர்வளமும், நிலவளமும் நிறைந்த மருதநிலப்பரப்பில் கரும்பு பயிரிடப்பட்டது. அவ்வாறு பயிரிடப்பட்ட கரும்பானது ஒரு பெரிய யானையின் காலடி அளவாக இருந்தது என்பதை,

**“விண்தொட நிவந்த விலங்குமலைக் கவாஅன்**

**கரும்பு நடு பாத்தி அன்ன**

**பெருங்களிற்று அடிவழி நிலைஇய நீரே”[113]**

நாட்டில் வானளவான உயர்ந்த குறுக்காக வளர்ந்த மலைச்சாரலின் அடிவாரத்தில் கரும்பை நடுவதற்குத் தோண்டிய பாத்தி போன்ற பெரிய களிற்றின் அடிச்சுவடுகளில் தங்கிய பள்ளத்து நீர் என்று விளக்கம் தருகிறது.

#### 1.14.2.2 தேம்பாய் மருதம்

கரும்பு மிகுந்து விளையக்கூடிய மருதநிலப்பகுதி கரும்புகள் பருத்தும் கணுக்கள் திரண்டும், மிக உயர்ந்தும் வளர்ந்தன கரும்பு. இன்ன காலத்தில் விளையக்கூடியது என்று குறிப்பிடப்படவில்லை நீர்வளம் மிகுந்திருந்தால் ஆண்டு முழுவதும் தொடர்ந்து பயன்தரக்கூடிய பயிராய் விளங்குவது கரும்பு. இதனை

**“காலம் அன்றியும் கரும்பு அறுத்து ஒழியாது**

**அரிகால் அவித்து, பலர் விழவின்**

**தேம்பாய் மருதம் முதல்படக் கொன்று**

**வெண்தலைச் செம்புனல் பரந்துவாய் மிகுக்கும்**

**பலசூழ் பதப்பர் கரிய வெள்ளத்துச்**

**சிறைகொள் பூசலின்,புகன்ற ஆலயம்”**[114]

வயலில் அறுக்கும் பருவம் இல்லாவிட்டால் கரும்புகள் அறுக்க இயலாநிலையில் வளரும் அறுத்த பின்பு அரிகால் சூடி வளர்ந்த பூக்களைக் கொண்டு செய்வதை வழிபடுவர். மருத மரத்தின் உச்சிவரை புதுவெள்ளம் வந்து பெருகி அங்குள்ள வைக்கோல் புரிகலால் சுற்றப்பெற்ற மணல் கோட்டையைக் கரைத்து அழிக்கும் மக்கள் வெள்ளத்தினை அணைகட்டித் தடுத்து நிறுத்த விரும்பும் மக்கள்கூட்டம் பழைமையான ஊரில் விழாவினைக் கண்டு திரும்பும் செழிப்புடைய மருத நிலம் என்று மருதநிலச் செழிப்பை தெளிவாக்குகிறது.

இவ்வாறு மருத நிலத் தொழில்கள் சிறப்புடையதாக இருந்தது. எனினும் உழைக்கும் வர்க்கத்தைச் சேர்ந்த மக்கள் வர்க்கக் குழுவாகியமை விளங்கும்.நில உடைமையாளர்களுக்கும், உழைப்பவர்களுக்கும் இடையே உயர்வு தாழ்வுகளோடு காணப்பட்டமையால் பொருளாதாரத்திலும் ஏற்றத்தாழ்வுகள் காணப்பட்டமையை அறிய முடிகின்றது.

### 1.15 நெய்தற் திணையின் சமூகப் பொருளாதாரப் பதிவுகள்

கடல் சார்ந்த நிலத்தை நெய்தல் என்று உணர்கிறோம். இத்தினை மக்கள் பரதவர் என அழைக்கப்பட்டனர் இவர்களுடைய பொருளாதார வளமைக்கும்., செழுமைக்கும் கடலும், கடல் சார்ந்த மீன் பிடி தொழிலும் முக்கிய ஆதாரமாக

அமைந்தன. இது மட்டுமின்றி பண்டமாற்று, வாணிபமும் பிற திணைகளுடனான தொடர்பை மேம்படுத்தி பொருளாதார பெருக்கத்திற்கு வழிகோலியது.

### 1.15.1 மீன் பிடித்தல்

நெய்தற் நிலத்து பரதவ மக்கள் கடலில் மீன் பிடித்தலைத் தலையாயத் தொழிலாகக் கொண்டிருந்தனர். இப்பரதவர்கள் மீன்வேட்டையாடுவதாலும். உப்பு விளைவிப்பதாலும், கிடைக்கக்கூடிய பொருளைக் கொண்டே வாழ்க்கை நடத்தினர். பரதவர்கள் படகுகளில் ஏறி மீன்பிடி வலைகளைப் பயன்படுத்தி மீன்பிடித்தனர் இதனைப் பல்வேறு பாடல்கள் புலப்படுத்துகின்றன.

### 1.15.1.2 கொடுமுடி வலைஞர்

மீன்பிடித் தொழிலை மேற்கொண்ட வலைஞர் மீன் விற்றலையும், அதைப்பிடிப்பதற்கு வலைகளையும் பயன்படுத்தினர் என்பதை,

**“வள்ளை நீக்கி வயமீன் முகந்து**

**கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்”[115]**

வள்ளைக் கொடிகளை நீக்கி வலிமையான மீன்களை முகந்து வந்து விலைகூறி விற்றலால் ஏற்படும் ஓசையும் கொடிய முடிகளையுடைய மீன்வலைகளைக் கொண்டிருக்கும் வலைஞர் குடியிருப்பு என்று விளக்குகின்றது.

### 1.15.1.3 பறியுடைய மூன்றில்

நெய்தற் மக்கள் நுளையர், வலைஞர், பரதவர் எனப் பலவாறு அழைக்கப்பட்டனர். அவ்வாறு வலைஞர் என்ற நெய்தற் மக்கள் குடியிருப்புகள் அமைத்து அதைச் சுற்றி புடலை, பாகற் போன்ற கொடிகளை அமைந்திருந்தனர். இத்தகைய வலைஞர் குடியிருப்பைப் பற்றி பெரும்பாணாற்றுப்படை,

**“குறியிறைக் குரம்பைப் பறியுடை முன்றில்**

**கொடுங்காற் புன்னைக் கோடுதுமித்து இயற்றிய**

**பைங்காய் தூங்கும் பாய்மணற் பந்தர்,**

**இளையரும் முதியரும் கிளையுடன் துவன்றி,**

**புலவ நுனைப் பகழியும் சிலையும் மான்"[116]**

வீட்டின் வாசலில் பறி என்னும் மீன்பிடிக்கும் கருவி இருந்தது. நெய்தல் நில மரமாகிய புன்னையின் வளைந்த காலையுடைய மரத்தை வெட்டி அதைப் பந்தல் போன்று அமைத்திருந்தனர். தாழ்ந்த இறைப்பை உடையதாக வீடுகள் அமைந்திருந்தன. வீட்டின் வாசலில் பறி என்னும் மீன்பிடிக்கும் கருவி இருந்தது. நெய்தல் நில மரமாகிய புன்னையின் வளைந்த காலையுடைய மரத்தை வெட்டி, அதில் பந்தல் போன்று கொடிகள் படர்ந்திருந்தன. அதன் பசுமையான காய்கள் தொங்கிக் கொண்டிருந்தன. அப்பந்தலில் அடியில் இளைகளும் முதியவர்களும் தங்கள் சுற்றத்தாருடன் குடியிருந்து மகிழ்ந்தமையை உணர முடிகிறது.

### 1.15.1.4 திண்திமில் வன்பரதவர்

பரதவர்கள் படகுகளில் சென்று மீன் பிடித்தனர் என்பதை புறநானூறு,

**"திண்திமில் வன்பரதவர்**

**வெப்புடைய மட்டுஉண்டு**

**தண்குரவைச் சீர்தூங்குந்து"[117]**

வலிமையான படகை உடைய மீனவர் வெதுப்பு ஏற்றும் கள்ளைக்குடித்து மெல்லிய குரவைக் கூத்தின் தாளத்திற்குத் தக ஆடுவர் என்று நெய்தல் நிலப்பரதவர் கள்ளையும் குடித்து குரவைக் கூத்தும் ஆடியமையை தெளிவுபடுத்துகிறது இப்பாடல் வரிகள்.

### 1.15.1.5 கொடுந்திமிற் பரதவர்

மீன் பிடிக்கும் படகுகளாகிய திமிலை கொல்லன் உருவாக்கித் தர அதனைப பயன்படுத்தி பரதவர்கள் கழியையும் கடலையும் துழாவி மீன் பிடித்து வந்தனர். சுறாமீன் பிடித்தலை மீன் வேட்டம் என்பர். இத்தகைய செயலினை,

**“ கொல்வினைப் பொலிந்த கூர்வாய் எறிஉளி**

**முகம்பட மடுத்த மளிவெதிர் நோன்காழ்**

**தாங்குஅரு நீர்ச்சுரத்து எறிந்து வாங்குவிசைக்**

**கொடுந்திமிற் பரதவர் கோட்டுமீன் எறிய”[118]**

கொல்லன் தொழிலால் சிறப்புடைந்த கூர்மையான வாயையுடைய எறியும் உளியை மாற்றிய முதிர்ந்த மூங்கிலின் வன்மையான வெள்ளம் தாக்கலும் கடலில் உள்ள நீர் வழியில் எறிந்து வேகம் மிகுந்த வளைந்த திமில் எனும் படகை உடைய பரதவர் கொம்புள்ள சுறாமீனை எறிந்து பிடிக்க முயல்வர் என்றும் நெய்தல் நில மகளிரின் பணியை எடுத்துரைப்பதாகவும் இப்பாடல் அமைந்துள்ளது.

### 1.15.1.6 நடுநாற் வேட்டம்

நெய்தற் நிலப்பரதவர் இரவு பகல் பாராமல் கடலில் மீன் பிடிக்கச் சென்றனர். என்பதை நற்றினை,

**“கயிறுகடை யாத்த கடுநடை எறி உளித்**

**தின்திமில் பரதவர் ஒண்சுடர்க் கொளீஇ**

**நடுநாள் வேட்டம் போகி வைகறைக்**

**கடல்மீன் தந்து, கானற் குவைஇ**

**ஓங்குஇரும் புன்னை வரிநிழல் இருந்து**

**தேன்கமழ் தேறல் கிளையோடு மாந்தி”[119]**

முறுக்குண்ட கயிற்றின் முனையில் விரைந்து செல்லும் இயல்பை உடைய ஈட்டியைக் கொண்டவர். பரதவர் திண்ணிய படகில் செல்வர். பரதவர் ஒளிப் பொருந்திய விளக்குகளைக் கொளுத்திக் கொண்டு நடு சாமத்தில் மீன் வேட்டைக்குச் செல்வர். வேட்டையில் கிடைத்த மீன்களை கடற்கரைச் சோலையின் நிழலில் குவித்து வைத்துப் பின்பு தென் மணம் வீசும் தெளிந்த கள்ளை உண்பர் என்பதை விளக்குகிறது இப்பாடல் வரிகள்.

### 1.15.1.7 நயன்இல் பரதவர்

பரதவர்கள் மீன் பிடிக்கப் படகுகளை பயன்படுத்துவர் அப்படகுகள் அம்பு, தோணி போன்ற கருவிகளால் அமைக்கப்பட்டிருந்தது. இத்தகைய கருவிகளை பயன்படுத்தி மீன் பிடிப்போர் நயன்இல் பரதவர் என அழைக்கப்பட்டனர். இதனை,

**“வாள்வாய்ச் சுறவின் பனித்துறை நீந்தி**

**நாள்வேட்டு எழுந்த நயன்இல் பரதவர்**

**வைகுகடல் அம்பியின் தோன்றும்**

**மைபடு மாமலை விளங்கிய கரனே”[120]**

வாள்போல் கூரிய பற்கள் கொண்ட வாயை உடைய சுறாமீன் திரிய கடலில் நீண்ட தொலைவு மீன்வேட்டைக்குப் புறப்படும். பரதவர்கள் ஏறும் தோணியைப் போலத் தோன்றும் என விளக்கம் தருகிறது இப்பாடல் வரிகள்.

### 1.15.1.8 உப்புஒய் உமணர்

பரதவ மக்கள் மீன் வேட்டத்திற்குச் சென்று கடலிலுள்ள மீன்களை எல்லாம் கடல் ஒருஙகே முகர்ந்து வரும்படி வலைவீசிப் பிடிப்பர். அவ்வாறு பிடித்த மீன்களை நெற்காலத்தில் அறுவடை செய்த உழவர்களைப் போன்று இரந்தோர்களின் வருங்கலன்கள் நிறைந்து வழியுறுமாறு வழங்குவர் என்பதை அகநானூறு,

**“நெடுங்கயிறு வலந்த குறுங்கண் அவ்வலை**

**கடல்படு அரிய இனமீன் முகந்து**

**துளைபுணர் உவகையர் பரத மாக்கள்**

**இளையரும் மதியரும் கிளையுடன் துவன்றி**

**உப்புஒய் உமணர் அருதுறை போக்கும்**

**ஒழுகை நோன்பகடு ஒப்ப குழீஇ**

**அயிர்திணி அடைகரை ஒலிப்ப வாங்கி**

**பெருங்களம் தொகுத்த உழவர் போல**

**இரந்தோர் வறுங்கலம் மல்க வீசி**

**பாடுபல அமைத்துக் கொள்ளை சாற்றி**

**கோடுஉயர் திணிமணல்"**[121]

என்று அகநானூற்றுப் பாடல் பரதவரின் பண்பையும் தொழில் சிறப்பையும் எடுத்தியம்புகிறது.

### 1.15.1.9 கதர்கோல் உமணர்

உப்புவணிகர் வெண்கல் உப்பினை விலைகூறி விற்றுக் கொண்டே கதிரவனின் வெம்மையால் வெடித்த குன்றுகளையும் கடந்து சென்று எருதுகள் பூட்டிய வண்டியில் எடுத்துச் சென்று விற்பர் என்று அகநானூறு கூறுவதை,

**"பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடிப்பரதவர்**

**இருங்கழிச் செறுவின் உழாஅது செய்த**

**வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி**

**என்றூழ் விடர குன்றம் போகும்**

**கதழ்கோல் உமணர்"**[122]

சிறுகுடியில் வாழ்ந்த பரதவா் பெருங்கடலில் மீன் வேட்டையாடும் உப்பங்கழியை ஒட்டிய உவா் நிலத்தில் உழாமலே விளைவித்த வெண்ணிற உப்பை வண்டியில் ஏற்றிஈ ஏனைய நிலங்களுக்குக் கொண்டு சென்று விற்பா் என்று கூறுகின்றது இப்பாடல் வரிகள்.

### 1.15.1.10 உமணரின் வெண்கல் உப்பு

உமணா் வெள்ளிய கல்லுப்பைச் சகடத்தில் ஏற்றி எருதுகளைப் பூட்டி நெடுமணல் வா்யைக் கடந்து செல்லுகையில் ஆழ்மணலில் சக்கரங்கள் அடிக்கடிப் புதைந்து விடும். புதைந்த சக்கரத்தை மீண்டும் தூக்கிப் பெயா்ந்து முன்னோக்கிச் செலுத்துங்கால் பேரொலி எழுப்புவா். இதனைக் கண்ட நாரைகள் அஞ்சுவதாக,

**“ உமணா்**

**வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி**

**கணநீரை கிளா்க்கும் நெடுநெறிச் சகடம்**

**மணல் மடுத்து உரறும் ஓசை கழனிக்**

**கருங்கால் வெண்குருகு வெரூஉம”**[123]

உமணா் வெண்மையான நிறமுடைய கல்லுப்பை எடுத்துக் கொண்டு விற்பனை செய்ய செல்வா். அந்த உமணா்களின் வண்டியின் ஓசையைக் கேட்டு அருகில் உள்ள நாரைகள் அஞ்சுகின்ற நெய்தல் நிலம் என்று நெய்தல் நிலத்தைப் பற்றி விளக்குகிறாா் ஆசிரியா்.

### 1.15.2 நெய்தல் நில குடியிருப்புகளும் தொழில்முறைகளும்

நெய்தல் நில குடியிருப்புகள் இந்நிலம் சாா்ந்த தொழில் முறையை ஒட்டியே அமைந்துள்ளது. நெய்தல் நிலத்தை பொறுத்தவரை பொதுவான குடியிருப்புகள் என்பது கடற்கரையை அண் மித்தெ அமைந்துள்ளன. அவரவா்

விருப்பிற் ஏற்றவாறே அமைத்து வசித்து வாழ்ந்துள்ளனா். இவ்வாறு அமைந்த ஊா்களைப் பாக்கம், பட்டினம் என்பா். இதனை சங்கப் பாடல்கள் உறுதிப்படுத்துகின்றன.

### 1.15.2.1 வலைஞர் குடிவயிற் சேப்பின்

மீனவரின் வாழ்விடமானது அதன் இயற்கையோடு காட்சிப்படுத்தப்படுகிறது. அந்தப் பகுதியில் கிடைக்கக்கூடிய வேர்க்கோல் வெண்கோடு. தாழைநாா் தருப்பைப்புல் ஆகிய இயற்கையான ஆதாரங்களை கொண்டு அமைக்கப்பட்டிருந்தன. வலைஞரின் குழலின் முற்றத்தில் மீன்பிடிக்கப்பயன்படும் பறி என்ற கருவியும், புன்னை மரத்தின் கொம்புகளால் கட்டப்பட்ட பந்தலும், குடியிருப்பை ஒட்டி இருக்கும் குளத்தில் மீனவர்கள், தம்மக்களோடும் மகளீரோடும் மீன், இறால் ஆகியவற்றைப் பிடிக்கும் காட்சியையும் விளக்கும் விதமாக பெரும்பாணாற்றுப் பாடல் வரிகள்

**“வேழம் நிரைத்து, வெண்கோடு விரைஇ**

**தாழை முடித்துப் தருப்பை வேய்ந்த**

**குயிறிறைக் குரம்பைப் பறியுடைமுன்றில்**

**கொடுங்காற் புன்னைக் கொடுதுமித்து இயற்றிய**

**பைங்காய் தூங்கும் பாய்மணற் பந்தா்**

**இணையரும் முதியரும் கிளையுடன் துவன்றி**

**புலவு துணைப் பகழியும் சிலையும மான**

**செவ்வரிக் கயலொடு பச்சிறாப் பிறரும்**

**மைஇரு குட்டத்து மகவொரு வாங்கி**

**கொடை நீடினும் குறைபடல் அறியாத்**

**தோள்தாா் குளத்த கோடு காத்திருக்கும்**

**கொடுமுடி வலைஞர் குடிவயிற் சேப்பின”[124]**

கடற்கரைய அடுத்து மீன்பிடிப் போராகிய வலைஞர் குடியிருப்புகள் உள்ளன. பேய்கருப்பந்தட்டை அல்லது கொறுக்கைச்சி என்று கூறப்படுகின்ற சோளத்தட்டை போன்ற பொருளைச் கூரையுமாக அமைத்து இடையிடையே வஞ்சி, காஞ்சி மரங்களால் ஆன வெண்மையான மரத்தடியையும் வைத்து, தாழை நாராலே கட்டி அதற்கு மேல் தருப்பை புல்லால் வேய்ந்து தம் குடியிருப்பை அமைத்துள்ளனர். நெய்தல் நில மரமாகிய புன்னையின் வளைந்த காலையுடைய மரத்தை வெட்டி அதைப் பந்தல் போன்று அமைத்திருந்தனர். அதில் சுரை, பாகல் போன்ற கொடிகள் படர்ந்திருந்தன. அதன் பசுமையான காய்கள் தொங்கிக் கொண்டு இருந்தன. மணலைப் பரப்பி அப்பந்தலை அமைந்திருந்தனர். அப்பந்தலின் அடியில் இளையர்கள், முதியவர்களும் தங்கள் சுற்றத்தாருடன் கூடியிருந்து மகிழ்வர். அருகிலுள்ள கரிய ஆழமான குளத்தில் புலால் நாற்றமுடைய அம்பு போன்று இருக்கும் இறால் மீனையும் பிடித்துக் கொணர்வர். இத்தகைய குடியிருப்பை உடையது பரதவர்களின் இடம் என்று தெளிவுப்படுத்துகிறது.

### 1.15.2.2 முட்டாச் சிறப்பின் பட்டினம்

மனித வாழ்வாதாரமாக திகழும் உணவு, உடை, உறையுள் குறித்து **“மனித வாழ்விற் உணவுக்கு அடுத்து முதன்மை பெறுவது உடையும் உறையுளும் வரலாற்றுக்கு முற்பட்ட கால மனித வாழ்வினை மானிடவியலாளர் கர்டாண்டி விலங்காண்டி எனக் குறிப்பிடுவர். ஏனெனில் அக்காலத்தில் மக்களின் வாழ்வுக்கு காட்டில் அலைந்து திரியும் விலங்குகளைப் போன்றே காணப்பட்டது.”125** இதன் பின்பு பண்பாட்டு வளர்ச்சியின் காரணமாக மக்கள் செயல்பாடுகள் மாற்றத்திற்கு உட்பட்டன. இதனையே நெய்தல் நில மக்களின் உணவு, உடை, உறையுளும் வெளிக்காட்டுகிறது. பட்டினப்பாலை நெய்தல் மக்களின் உறைவிடத்தினைப் பட்டினம் என்ற பொருளால் விளக்குவதை,

**“மொழிபல பெருகிய பழீநீர் தேயத்துப்**

**புலம்பெயர் மாக்கள் கலந்து இனிது உறையும்**

**முட்டாச் சிறப்பின் பட்டினம்"[125]**

பலமொழிகள் பேசும் மக்கள் நிரம்பிய குற்றமற்ற தேயத்தில் பல நாட்டினரும் கலந்து உளமகிழ்வோடு வாழும் குறைவுபடாத சிறப்பினை உடையது. பட்டினத்தின் சிறப்பினை விளக்குவதாக அமைந்துள்ளது இப்பாடல் வரிகள்.

### 1.15.2.3 வான்திமிற் பரதவர்

கடற்கரை பகுதிகளில் வாழ்ந்த பரதவர்கள், மீன் பிடிதொழில் மட்டுமின்றி முத்துக்குளித்தல், சங்கறுத்தல், உப்பு விளைவித்தல், மீன் உலர்த்தல் போன்ற பல்வேறு தொழில்களை மேற்கொண்டு வாழ்வாதாரங்களை கொண்டிருந்தனர் பரதவர்,

**"இலங்குஇரும் பரப்பின் எறிகரா நீக்கி**

**வலம்புரி மூழ்கிய வான்திமிற் பரதவர்**

**ஒலிதலைப் பணிலம் ஆர்ப்ப கல்லெனக்**

**கலிகெழு கொற்கை"[126]**

கடற்கரைப் பரப்பில் கொல்லும் தன்மையுடைய சுறாமீன்களைப் பிடிப்பதை விட்டு வலம்புரி முத்தினை மூழ்கி எடுப்பர் பரதவர். அவர்களை ஒலிச் சங்குகள் என ஓசை இடும்படி ஆரவாரம் மிக்க கொற்கைப்பட்டினத்தார் என்று பரதவர்களின் தொழில் முறைகளை விளக்கிக் கூறுகிறது இப்பாடல் வரிகள்.

## 1.16 பாலைத்திணையின் சமூகப் பொருளாதாரப் பதிவுகள்

பாலை என்னும் தனி நிலத்தைப் பற்றி தொல்காப்பியர் குறிப்பிடப்படவில்லை என்றாலும் இளங்கோவடிகள் பாலைக்கு நிலம் உண்டு என்பதனை சிலப்பதிகாரப் படலடிகளின் மூலம் விளக்கம் தருகிறார்.

**"முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து**

**நல்லியல்பு இழந்து நடுங்கு துயருத்தப்**

பாலை என்பதோர் படிவம் கொள்ளும்”[127]

முல்லை நிலமும் குறிஞ்சி நிலமும் தத்தமது இயல்பு நிலையிலிருந்து மாறி பாலையாகின்றது. பாலைத்திணையின் பொருளாதார நடவடிக்கை என்பது நிலையானதாக இல்லை. பாலை நில மக்கள் தங்கள் வாழ்க்கைத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ள வழிப்பறித் தொழிலில் ஈடுபட்டனர்.

“சங்க இலக்கியத்தில் பிற திணைப்பாடல்களைக் காட்டிலும் பாலைத் திணைப் பாடல்களே மிகுதியாக உள்ளன. பாலைத் திணைக்குரியனவாக அகநானூற்றில் இருநூறு பாடல்களும், நற்றியிணையில் நூற்றி இரண்டு பாடல்களும், குறுந்தொகையில் தொண்ணூறு பாடல்களும், ஐங்குறுநூற்றில் நூறு பாடல்களும் பாலைக்கலியில் முப்பத்தி ஐந்து பாடல்களும் என 527 பாடல்கள் உள்ளன”[128] என்று குறிப்பிடுகிறார்.

### 1.16.1 பாலைத்திணை சார்ந்த மக்களின் தொழில் முறைகள்

பாலைத் திணை மக்களான ஆறலைக்கள்வர்கள் வழிப்போக்கர்களை தவறான வழிப்படுத்தி அவர்களை வழிப்பறி செய்தலை தொழிலாகக் கொண்டனர்.

### 1.16.2 ஆறலைக் களவர்

“இளம்பூரணர் பாலைக்குரிய தொழிலாக ஆறலைக் கள்வர்கலைக் குறிப்பிட்டுள்ளார். நம்பியகப்பொருள் பகற்றேயாடல் எனப் பாலைக்குரிய தொழிலைக் குறிப்பிட்டுள்ளது.”[129]

ஆறலைக் கள்வர் குறித்து “ஆறு என்றால் வழி அலை என்றால் அலைக்கழித்தல் அதாவது பாலை வழியில் அலைக்கழிப்போரே ஆறலைக் கள்வர் எனப்பட்டுள்ளனர். சங்க இலக்கியப் பாலைப் பாடல்களில் நாற்பது பாடல்கள் ஆறலைக் கள்வர் பற்றிப் பேசியுள்ளன இப்பாடல்களே புரிதலுக்குத் துணைபுரிகின்றன”[130]

### 1.16.3 வன்கண் ஆடவர்

ஆறலைக் கள்வர் என அழைக்கப்பெறும் வேட்டுவர்களை அகநானூறு வன்கண் ஆடவர் என்று கூறுகிறது. கடைகுழன்ற சுருளுடைய வாரிச் சேர்த்துக் கட்டாத குடுமியை உடையவர்கள், வன்கண் உடையவர்கள் கொடுமை செய்யும் அம்பைக் கைக் கொண்டவர்கள் என்று குறிப்பிட்டுள்ளது.

**“ வணர்கிரி**

**வழையாப் பித்தைவன்கண் ஆடவர்**

**அடிஅமை பகழி ஆர வாங்கி**

**வம்பலர்ச் செருத்த அஞ்சுவரு கவலைப்**

**படுமுடை நசைஇய வாழ்கைச் செஞ்செவி**

**எருவைச் சேவல் ஈண்டுகிளை பயிரும்**

**வெருவரு கானம் நீற்தி பொருள் புரிந்து”**[131]

ஐயுறும் நிலையில் வளர்ந்த மார்பகம் நனைய நீலமலர் போன்ற கண்கள் கண்ணீரைச் சிந்தின. நீ செல்லவிருக்கும் பாலைநில வழியில் வேட்டுவர் வாழ்கின்றனர். வளைந்த சுருண்ட பரட்டை தலையினர் . அவர்கள் வில்லில் அம்பை அதன் கூரை நன்கு படியுமாறு வைத்து காதுவரை நாணை இழுத்து எய்து வழிப்பயணிகளைக் கொன்று அவர்பொருளைக் கொள்ளையடிப்பர் என்று வேட்டுவர்களின் தொழில் குறித்து கூறப்பட்டுள்ளது.

### 1.16.4 கடுங்கண் மறவர்

கள்வர்கள் வலிமை மிகுந்த உடலையும், கருத்து கொண்டிருக்கும் முழயினையும் புலி போன்ற கடுமையான பார்வையையும், கையில் வில்லையும் கொண்டிருந்தனர் மறவர்கள் என்று பாலைக்கலி பாடல்வரிகள்

**“வலிமுன் வல்லென்ற யாக்கைப் புலிநோக்கின்**

**சுற்றமை வில்லர் கழிவளர் பித்தயர்**

**அற்றம் பார்த்து அல்கும் - கடுங்கண் மறவா”[132]**

பொருள் தருகிறது.

### 1.16.5 கொடுங்கிலை மறவர்

வழியில் போகும் பயணிகளை வளைந்த வில்லையுடைய மலைச் சாதியினர் அம்புவிட்டுக் கொன்று பொருள்களை வழிப்பறி செய்வர் கொங்கிலை மறவர்,

**“நெடுங்கழை திரங்கிய நீர்இல் ஆர்இடை**

**ஆறுசெல் வம்பலர் தொலைய, மாறுநின்று,**

**கொடுஞ்சிலை மறவர் கடறுகட் குண்ணும்**

**கடுங்கண் யானைக்கானம்”[133]**

நீண்ட மூங்கில்கள் உலர்ந்து வாடிய நீரில்லாத காட்டு வழியில் செல்லும் மக்களை அழியுமாறு எதிர்த்து நின்று வளைந்த வில்லை உடைய மறவர்களாகிய வழிப்பறி செய்வோர் காட்டில் கோளையிட்டு கூடியுண்ணும் கடுங்கண்களையுடையவர். அக்காடு யானைகள் திரியும் காடு என்று பாடல்வரிகள் விளக்குகின்றன.

### 1.16.6 கல்லா இளையர்

கள்வர்கள் தம் அம்பு விடும் திறமையை அறிந்து கொள்வதற்காக வழியில் வரும் புதியவர்களிடம் அணிகலன்கள் இல்லை என்றாலும் அவர்களைக் கொன்று பறவைகளுக்கு இறையாக இட்டுள்ளனர். இதனை,

**“சென்று நீடுநர் அல்லர் அவர்வயி**

**னினைத லானாய் என்றிசனி இருளை**

**அம்பு தொகை அமைதி காண்மார் வம்பவர்**

**கலனில ராயினுங் கொன்று புள்ளுட்டும்**

**கல்லா விளையர் கலித்த கவலை"**[134]

அம்பு எய்தலின் திறமையைக் காணும் பொருட்டு வழியில் புதியவர் வந்தாலும் அணிகலன் இன்றி வந்தாலும் அவர்களைக் கொன்று பறவைகளுக்கு உண்ணக் கொடுக்கும் வழிப்பறியைத் தவிர பிற தொழிலை அறியாத இளைஞர் செருக்குடன் திரிவர் என்பதைத் தெளிவாக எடுத்துக்காட்டுகின்றது.

நெய்தல் நில மக்களாகிய உப்பு வணிகர்கள் வணிகத்திற்காக பாலை வழியைக் கடந்து சென்றுள்ளனர். இவர்கள் செல்லும் ஊர்களுக்கு மலைப்பகுதிகளைக் கடந்து செல்ல வேண்டிய நிலை இருந்துள்ளது. அப்போது அவர்களிடம் மறவர்கள் வழிப்பறியில் ஈடுபட்டுள்ளனர். இதனை விளக்கும் விதமாக பாலைப் பாடல்கள் அமைந்துள்ளன இதற்கு சான்றுகளாக அகப்பாடல்கள் மிகுந்து காணப்படுகின்றன.

உப்ப வணிகர் சென்ற வழி அவர்களது வண்டிகளில் கட்டப்பட்ட எருதுகளின் கழுத்து மணிபோலச் சிற்வீடு என்ற வண்டு ஒலியெழுப்பும் பாலைவழி என்று அகநானூற்றுப் பாடலில் சுட்டப்பெற்றுள்ளது. இதனை,

**"வறன்மரம் பொருந்திய சிளவீடு, உமணர்**

**கணநிரை மணியின், ஆர்க்கும் சுரன் இறந்து,**

**அரிநீர் மீன்பெயர்ந் தாங்கு"**[135]

பட்ட மரங்களில் சிள்வீடு என்னும் வண்டுகள் பலவும் ஒருங்கு சூழ ஓசையிடும். உப்பு வணிகர் வண்டிகளில் பூட்டிய எருதுகளின் மணியொசை சூழ ஓசையிடும். அத்தகைய பாலைநிலத்தைக் கடந்த நீர் வற்றிய குளத்திலுள்ள மீன் நீரிருக்கும் இடத்தை தொடுவது போல என்று கூறுவதிலிருந்து அறியலாம்.

மேற்குறிப்பிட்டது தவிர அகம் 173, 295, 343, 329, 191, 207, 17, 119, 159, 257பாடல்களும், உப்பு வணிகர்களைப் பற்றி எடுத்தியம்புகிறது. புறப்பாடல்களில் புறம் 386, 84, 116, 307 பாடல்களும் உப்பு உமணர்கள் பற்றி விளக்குகிறது.

### 1.17 முடிவுரை

மக்களின் வாழ்க்கை ஆதாரமே பொருள் ஆதாரமாக உருப்பெற்றுக் காணப்படுகின்றன. சமூக மாற்றமும், மனித உழைப்பும் பொருளாதாரத்தை மாற்றியமைக்கும் சக்தியாக செயல்படுகின்றன.

- சங்ககால மக்கள் தங்களிடையே தலை சிறந்த அம்சங்களைக் கொண்டிருந்தனர் என்பதற்கு திணைப் பாகுபாடு தக்க சான்றாகும்.
- மனித குடியேற்றங்கள் நிரந்தரமாக அமைவதற்கு முன்பு உணவு சேகரித்தலையும், வேட்டையாடுதலையும் , புன்புல வேளாண்மையையும் ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்தனர் குறிஞ்சி நில மக்கள் என்பதை அறிய முடிகின்றன.
- குறிஞ்சியில் உணவு உற்பத்தியைவிட உணவு சேகரித்தலே முக்கிய ஆதாரமாக அமைந்தது என்பது தெளிவுற விளக்கப்பட்டுள்ளன.
- ஆநிரை மேய்த்தலையும், ஆநிரைகள் மூலம் கிடைக்கக் கூடிய தயிர், மோர் (பால்-பால்படு பொருள்கள்) ஆகியவை முல்லைத் திணையின் பொருளாதாரச் செயற்பாடுகளை அறிவதற்கு உதவுகின்றன என்பது இந்த ஆய்வின் மூலம் புலப்படுகின்றன.
- வேளாண்மையின் தொடக்கத்திற்கு குறிஞ்சி நிலமே அடிப்படை. ஏனெனில் மக்கள் வேட்டையாடி வாழும் சமூக வாழ்விலிருந்து விலகி வேளாண்மையை மேற்கொள்ளத் தொடங்கியமையை சங்க இலக்கியங்கள் எடுத்துக்காட்டுகின்றன.
- இனக்குழுச் சமூகமாக வாழ்ந்த மக்கள் கூட்டம் அந்நிலையிலிருந்து பின்பு தனித்தனியாக வாழத் தொடங்கினர். இதற்கு மருதத் திணை தக்க சான்றாகும்.
- நிலம் என்பது பொதுச் சொத்தாக இருந்து உடைப்பொருளாக மாறிய பின்பு பொருளாதாரத்திலும் ஏற்றத்தாழ்வுகள் உருவாகியமையை புலப்படுத்துகின்றது இந்த இயல்.

- சங்ககாலத்தின் பொருளாதாரச் செயற்பாடுகளுக்கு பண்டமாற்று , வாணிபம் ஆகியவை முதன்மை ஆதாரமாக விளங்கியமை உறுதிப்படுத்தப்படுகின்றன.
- மருதம் , நெய்தல் நிலங்கள் பொருளாதார வளமையில் கோலொச்சியதனை அறிய முடிகின்றது.
- திணைசார்ந்த மக்கள் உணவுப் பொருட்களின் தேவை அறிந்தும் சேமிக்காமல் பகுத்துண்டு வாழ்ந்தனர். இப்போக்கிலிருந்து மாறி தங்களுக்கென தனியொரு உடைமையை கொண்டு வாழக் கற்றுக் கொண்ட தன்மையை சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

## இயல் 1

## திணைசார் குடிகளின் வாழ்வாதாரம் மற்றும் பொருளாதாரப் பதிவுகள்

### குறிப்புகள்

1. ந.சீனிவாசன், பொதுப் பொருளாதாரம், ப.2.
2. மேலது, ப.2.
3. மேலது, ப.2.
4. மேலது, பக்.8,9.
5. மேலது, ப.13.
6. மேலது, பக். 16-17.
7. ஜார்ஜ் தாம்ஸன், முதலாளியமும் அதன் பிறகும், ப.104.
8. ஜெய சேகர், வாழ்வியற் களஞ்சியம், தொகுதி–13, ப.62.
9. மேலது, ப.63.
10. ஆ.சிவசுப்பிரமணியன் வரலாற்றுப் பொருள் முதல் வாதம், பக். 84,85.

11. மேலது, பக்.81,82.
12. மேலது, ப.82.
13. தர்மராசன். நா, வரலாற்றுப் பொருள் முதல்வாதம் என்றால் என்ன?, ப.69.
14. இளம்பூரணம் , தொல்காப்பியம் - பொருளாதிகாரம், ப.5.
15. கணேசையர் (பதி.) தொல்காப்பியம் - பொருளாதிகாரம் ப.5.
16. பெ.மாதையன், சங்க இலக்கியத்தில் குடும்பம், பக் - 61,62.
17. மேலது ப.62
18. மேலது ப.62
19. R.Caldwell , Comparative Grammer of Dravidanlanuages, ப.172
20. ச.வெ.சுப்பிரமணியன் , தொல்காப்பியம் தெளிவுரை, ப.356
21. தமிழண்ணல், சங்க மரபு, பக்- 319,320.
22. ச.வெ.சுப்பிரமணியன் தொல்காப்பியம் தெளிவுரை, ப.356.
23. சோமசுந்தரனார், புறப்பொருள் வெண்பாமாலை நூ.14, ப.39.
24. மு.காமாட்சி, சங்ககாலம் தொல˙ பொருளாய்வுகள், ப.129.
25. பெ.மாதையன் ,சங்க இலக்கியத்தில் குடும்பம், ப.58.
26. தி.சுப்பிரமணியன், தமிழகத் தொல்லியலும் வரலாறும் தகடூர்ப்பகுதி,ப.216.
27. ச.வெ.சுப்பிரமணியன், தொல்காப்பியம் தெளிவுரை, ப.360.
28. தமிழண்ணல் , சங்கமரபு, ப.320.
29. மயிலை. சீனி .வேங்கடசாமி, பழங்காலத் தமிழர் வாணிகம், ப.47.
30. மேலது, ப.48.
31. மேலது, ப.50.
32. சு.சண்முகம்பிள்ளை, சங்கத்தமிழர் வாழ்வியல், ப.43.
33. மேலது, ப.49.
34. மேலது,ப.5.
35. மேலது, ப.61.
36. மேலது, ப.66.
37. ஏ.சுவாமிநாதன், சங்க கால வரலாறு, ப.46.
38. மேலது, ப.2.

39. மேலது, ப.28.

40. மேலது, ப.29.

41. மேலது, ப.30.

42. K. Zvllabil , Tamil Culture , p,14

43. ஆ.சிவசுப்பிரமணியன், வரலாற்றுப் பொருள் முதல் வாதம், ப.87.

44. மேலது, பக்.87-88.

45. கா. சிவத்தம்பி பண்டைத் தமிழ்ச்சமூகம், பக்.16-17.

46. சு.துரை, தமிழிலக்கிய ஆய்வுகளில் மார்க்சிய நோக்கு, ப.44.

47. மெ.து.ராசுகுமார், சோழர் காலத்து வாழ்க்கை, ப.34.

48. ஆ.சிவசுபப்பிரமணியன், பொற்காலங்கள், ப.14.

49. சு.துரை, தமிழிலக்கிய ஆய்வுகளில் மார்க்சிய நோக்கு, ப.44.

50. நா.வானமாமலை, கலைகளின் தோற்றம், ப.197-1.

51. கா.சுப்பிரமணியன், சங்ககால சமுதாயம், ப.10.

52. த.வசந்தா, பண்டைத் தமிழ்நாட்டில் ஏற்பட்ட சமூகப் பொருளாதார மாற்றத்தின் சில தன்மைகள், ப.10.

53. சு.துரை, தமிழிலக்கிய ஆய்வுகளில் மார்க்சிய நோக்கு, ப.44.

54. ஆ.சிவசுபப்பிரமணியன், வரலாற்று பொருள்முதல் வாதம், ப.22.

55. புறநானூறு, பக்.817-818

56. பெரும்பாணாற்றுப்படை, ப.180

57. திருமுருகாற்றுப்படை, ப. 67.

58. நற்றினை, ப.263.

59. மலைபடுகடாம், ப.508.

60. அகநானூறு, ப.219, 220.

61. மலைபடுகடாம். ப.482.

62. மலைபடுகடாம்.ப.485

63. மதுரைக்காஞ்சி,ப.288

64. புறநானூறு, ப.626

65. அகநானூறு, ப.320

66. குறுநதொகை, ப.524.
67. புறநானூறு ,ப.680.
68. அகநானூறு, ப.227.
69. நற்றிணை, ப.348.
70. நற்றிணை, ப.130.
71. ஐங்குறுநூறு, ப.750.
72. மலைபடுகடாம், ப.535,536.
73. வி.சி. சசிவல்லி பண்டைத் தமிழர் தொழில்கள், ப.68
74. குறுந்தொகை, ப.422.
75. ஐங்குறுநூறு, ப.759.
76. மலைபடுகடாம், ப.511.
77. C.Daryil Forde Habiat Economy and Society , p g.403
78. George Thomson , Studies in Ancient Greet Societys, ப.33
79. ஆ.சிவசுபப்பிரமணியன்,வரலாற்று பொருள்முதல் வாதம்-ஓர் அரிச்சுவடி ப.34
80. எங்கல்ஸ்! The Peasent war in German,p,54
81. முல்லைப்பாட்டு, ப.243.
82. நற்றிணை, ப.247.
83. நற்றிணை, ப.266.
84. ஆ.சிவசுபப்பிரமணியன், வரலாற்று பொருள்முதல் வாதம், ப.30
85. அகநானூறு, ப.365.
86. நற்றிணை, ப.149.
87. பெரும்பாணாற்றுப்படை, பக்.203,204.
88. அகநானூறு, ப.378.
89. புறநானூறு, பக்.571, 572
90. ஆ.சிவசுப்பிரமணியன், வரலாற்று பொருள்முதல் வாதம், ப.3.
91. புறத்திணையில், தொல்காப்பியம் - நூற்- 1004,ப.376.
92. நெடுநல்வாடை, ப.360.
93. நற்றிணை, ப.99.

94. சசிவல்லி,பண்டைத் தமிழர் தொழில்கள், ப.119
95. ஐங்குறுநூறு, ப.768.
96. அகநானூறு, ப.416.
97. அகநானூறு, ப.80,81.
98. குறுந்தொகை, ப.534.
99. புறநானூறு,பக். 630, 631.
100. அகநானூறு, ப.462, 63.
101. பெரும்பாணாற்றுபபடை, ப.206,207.
102. கா.சிவதம்பி பண்டைத் தமிழ்ச் சமூகம் ப.2.
103. வி.சி.சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப.40.
104. ச.வே.சுப்பிரமணியன் தொல்காப்பியம், நூற்பா -1581, ப.606.
105. கந்தசாமி, தமிழர் வேளாண்மை மரபுகள் - சங்க காலம், ப.28.
106. வெ.பெருமாள்சாமி, சங்ககால தமிழகத்தின் சமூகநிலை, ப.73.
107. மேலது, ப.73.
108. மேலது, ப.87.
109. புறநானூறு, ப.517, 518.
110. புறநானூறு, ப.741,742.
111. பெரும்பாணாற்றுப்படை, பக். 232, 242.
112. பெரும்பாணாற்றுப்படை, பக்.207,211.
113. பொருநராற்றுப்படை, பக்.242,248.
114. பதிற்றுப்பத்து, ப.3.
115. ஐங்குறுநூறு, ப- 27.
116. குறுந்தொகை,ப. 262.
117. பதிற்றுப்பத்து,பக். 54,55.
118. மதுரைக்காஞ்சி, பக் 305, 306.
119. பெரும்பாணாற்றுப்படை, ப.212, 213.
120. புறநானூறு, பக். 534, 536.
121. புறநானூறு , பக்.548.

122. நற்றிணை, ப.344.

123. அகநானூறு, ப.226.

124. அகநானூறு, ப.54.

125. அகநானூறு, பக்.173, 174

126. நற்றிணை, ப.36

127. பெரும்பாணாற்றுப்படை, பக் 212, 213.

128. பக்தவச்சல பாரதி, மானிடவியல் கோட்பாடுகள், ப.4.

129. பட்டினப்பாலை, ப.452.

130. அகநானூறு, பக் 411,412.

131. சிலம்பு , காடு காண் காதை, பக்- 64-66.

132. அ.செல்வராசு, சங்க இலக்கியத்தில் பால் நிலப்பயணம், ப.12

133. மேலது,ப.26.

134. மேலது, ப.27.

135. அகநானூறு , பக்.196, 197.

136. கலித்தொகை, பக். 332, 333.

137. குறுந்தொகை, ப.565.

138. அகநானூறு பக்.439,440.

139. அகநானூறு பக் .53,59.

140. குறுந்தொகை, ப.498.

141. ஐங்குறுநூறு. ப.648

142. குறுந்தொகை, ப.526.

143. அகநானூறு, ப.173,174.

144. பெரும்பாணாற்றுப்படை, ப.203,204.

145. மேலது, ப.203,204.

146. பொருநராற்றுப்படை, ப.129,130.

147. சசிவல்லி,பண்டைத் தமிழர் தொழில்கள் ப.209.

148. பட்டினப்பாலை, பக்.451,452.

149. ந.சுப்ரமணியன், சங்க கால வாழ்வியல், ப.306.

150. பெரும்பாணாற்றுப்படை, பக்.196,197.

151. புறநானூறு, பக். 545,546.

152. சசிவல்லி,பண்டைய தமிழர் தொழில்கள், ப.216.

153. வித்யானந்தன், தமிழர் சால்பு, ப.235.

154. மதுரைக்காஞ்சி, ப. 31.

155. பதிற்றுப்பத்து, ப.92,93.

156. சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள் ப.226.

157. நெடுநெல்வாடை, ப. 369.

158. அகநானூறு, பக்.189, 190.

# இயல்-2

## சங்ககாலப் பண்டமாற்றும் நாணயமாற்றும்

பொருளடக்கம்

2.7. சங்க கால நாணயமுறை

    2.7.1. வள்உகிர்ப் பொலங்கலம்

    2.7.2. கோடுஏந்து அலகுல்

    2.7.3. காசு நிரை அலகுல்

2.8. சங்ககால எடைமுறைகள்

2.9. சங்க கால அளவை முறைகள்

    2.9.1. முகத்தல் அளவைகள்

    2.9.2. நீட்டல் அளவைகள்

3.0. முடிவுரை

இயல்-2

## சங்ககாலப் பண்டமாற்றும் நாணயமாற்றும்

### 2.1.முன்னுரை

பழந்தமிழரின் செம்மைச் சிறப்பு வாழ்க்கை வடித்தெடுக்கப் பெற்ற வளமான இலக்கியங்கள் சங்க இலக்கியங்களாகும். சங்க இலக்கியங்களின் சிறப்பிற்கு வாணிபமும், பண்டமாற்றும் சிறந்த உதாரணங்களாக அமைகின்றன. சங்ககால மக்களின் மூலப்பொருள் ஆதாரமாக பண்டமாற்றும், வாணிகமும் விளங்கியது. ஓர் இடத்தில் விளைந்த விளை பொருள்கள் மற்றொரு இடத்தில் விலைபொருளாக மாற்றம் செய்யப்பட்டன. நிலம் சார்ந்த பொருள்களையும் ஆதாரமாக வைத்த பண்டமாற்றும் வாணிகம் நடைபெற்றது. இத்தகு செயல்களினால் தமிழருக்கு பல நாட்டவரோடும் வணிக நாகரீகத் தொடர்பு ஏற்பட்டது. இத்தொடர்பினால் நாணய மாற்று முறை உருவாகின. தமிழ்நாட்டு முத்து, யானைத் தந்தம், ஆடை, மிளகு முதலிய பொருட்களை விலை கொடுத்து வாங்கி ஒன்றுக்கு நூறு விலை வைத்து தங்கள் நாடுகளில் விற்றனர் என்பதற்கு சங்க இலக்கியங்கள் சான்று. அந்த வகையில் நிலம் சார்ந்த பண்டமாற்று முறையில் உள்நாட்டு வாணிபம் குறித்தும் வெளிநாட்டு வாணிபம் குறித்தும், நாணயங்கள், எடைகள், அளவைகள் குறித்தும், நீர் சார்ந்த பண்டமாற்று குறித்தும், விரிவாக விளக்குகிறது இந்த இயல்.

### 2.2.நிலம் சார்ந்த பண்டமாற்று முறை

தன்னிடம் உள்ள ஒரு பண்டத்தை தனது தேவை கருதி பிறரிடம் கொடுத்து மற்றொரு பண்டத்தை பெறுவது பண்டமாற்று எனப்பட்டது. ஒரு பொருளின் அளவு அதிகமாக இருந்ததுபோது பிற பொருள்களுக்கு பற்றாக்குறை ஏற்படும்போது இத்தகைய பண்டமாற்று முறை நடைபெற்றது. இடையர்கள் பாலைக் கொடுத்துத் தானியத்தைப் பெற்றதும், மான் இறைச்சியை உழவனிடத்தில் கொடுத்து நெல்லைப் பெற்றதும், உப்பினை விற்று நெல்லினைக் கொடுத்தும் எனப் பண்டமாற்று முறை பல்வேறு வகைகளில் நடைபெற்றுள்ளது. இதனை ‘சங்க காலத் தமிழகத்தில் வேளாண்மை வளர்ச்சியடைந்து, நில உடைமைச் சமூகம்,

உருவாகத் தொடங்கிய நிலையிலும் பண்டமாற்று முறை மறையவில்லை. இதற்கு முக்கிய காரணம் பரந்துபட்ட தமிழகம் முழுவதிலும் ஒன்றுபோல் நிலவுடைமைச் சமூகம் உருவாகவில்லை. சிவதம்பியின், அச்சமத்துவப் பொருளாதார வளர்ச்சி நிலவியமையால், புன்புல வேளாண்மை(குறிஞ்சி), மேய்ச்சல் நில வாழ்க்கை (முல்லை)- நன்செய் நில வேளாண்மை (மருதம்), மீன் பிடித்தல், உப்பு உற்பத்தி, கடல் வாணிபம் (நெய்தல்) எனப் பல்வேறு பொருளாதார நடவடிக்கைகள் நிலவும் நிலப்பகுதிகள் ஒரே காலகட்டத்தில் இருந்தன"[1] என்று பண்டமாற்று முறை நடைபெற்றமைக்கு பல்வேறு காரணிகள் ஆதாரமாக அமைகின்றன.

### 2.2.1.ஆடுடை இடைமகன்

இடையன் பாலைக் கொடுத்து அதற்கு ஈடாகத் தானியத்தை மாற்றிக் கொண்டமையைக் புலவர் முதுகூர்த்தனார் பின்வருமாறு பாடியுள்ளார்.

**'பாலொடு வந்து கூழொடு பெயரும்**

**ஆடுடை இடைமகள்"**[2]

கால்நடைகளை மேய்க்கின்ற இடையர்கள் தம் கைகளில் இளங்குட்டிகளை ஏந்தியவாறு மதிய உணவான கூழையும் எடுத்து மேய்ச்சல் நிலத்திற்குச் சென்று திரும்பிப் பாலுடன் ஊர் திரும்புவார்கள் என்று பொருள் தருகிறது.

### 2.2.2.முள் எயிற்றுப் பாண்மகள்

பாணர் உள்நாட்டு நீர் நிலைகளில் வலை வீசியும் தூண்டில் இருட்டும் மீன் பிடித்தார்கள். அவர்கள் பிடித்த மீன்களைப் பாண் மகளிர் ஊரில் கொண்டு போய்ப் பயிற்றுக்கும் தானியத்துக்கும் மாற்றினார்கள் என்று ஓரம் போகியார்,

**'முள்எயிற்றுப் பாண்மகள் இன்கெடிறு சொரிந்த**

**அகன்பெரு வட்டி நிறைய, மனையோள்**

**அரிகால் பெரும்பயறு நிறைக்கும்"**[3]

கூர்மையான பற்களை உடைய பாணர்குடிப் பெண், இன்சுவையுடைய கெளிற்றுமீனைப் பெரிய அகன்ற வட்டியில் கொண்டு வந்தாள். அந்த வட்டி நிறையத் தலைவி பெரும் பயற்றைக் கொடுத்தாள் என்று என்று கூறுகிறார்.

### 2.2.3.உப்பு விளைக் கழனி

கடற்கரையைச் சார்ந்த உப்பளங்களில் நெய்தல் நிலத்து மக்கள் உப்பு விளைவித்தார்கள். உப்பு வணிகர்கள் உப்பினைக் கொடுத்து நெல்லை மாற்றினார்கள் என்பதை

**'உப்பை மாறி வெண்ணெல் தாஇய**

**உப்புவிளைக் கழனிச் சென்றனள்"[4]**

உப்பு விளைநிலத்திற்குச் சென்று உப்பை விற்று நல் நெல்லைப் பெறுவதற்காகச் சென்றுள்ளாள் என்று கூறுகிறது.

### 2.2.4.நெல்லின் நேரே வெண்கல் உப்பு

ஊர் தெருக்களில் உப்பு விற்ற உமணப்பெண் உப்பை நெல்லுக்கு மாற்றியதை அம்மூவனார்

**' உழாஅது டிசய்த**

**வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி,**

**சில்கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி**

**செல்லின் நேரே வெண்கல் உப்பு எனச்"[5]**

மீன் வேட்டையாடும் பரதவர் உப்பங்கழியை ஒட்டிய உவர் நிலத்தில் உழாமலே விளைவித்த வெண்ணிற உப்பை வண்டியில் ஏற்றி, ஏனைய நிலங்களுக்கு கொண்டு விற்பர். உமணப் பெண்டிர், ஒரு படி உப்புக்கு ஒரு படி நெல்லினைக் கொடுப்பர் என்று விளக்குகிறார்.

### 2.2.5.கட்டிப் பசும்பொன் கொள்ளாள்

இடைச்சியர் நெய்யைப் பண்டமாற்று செய்யாமல் காசுக்கு விற்று அதற்குப் பதிலாக பசுக்களை வாங்கினார்கள் என்பதை,

**'நெல்விலைக் கட்டி பசும்பொன் கொள்ளாள்**

**எருமை நல்லான் கருநாகு பெறூஉம்**

**மடிவாய்க் கோவலர்"[6]**

தயிர்கடைந்த வெண்ணெயில் இருந்து பெற்ற நெய்யை விற்றுப் பசும்பொன்னை வாங்க மாட்டாள். எருமை, நல்ல பசு, கன்றுகள் இவற்றை வாங்குவாள் என்று கூறவரும் கடியலூர் உருத்திரங்கண்ணார், இதற்கு மாறாக பண்டமாற்றும் செய்தனர் என்பதை,

**'நள்இருள் விடியல் புள்ளெழப போகி,**

**புலிக்குரல் மத்தம் ஒலிப்ப வாங்கி,**

**ஆம்பிவான் முகை அன்ன கூம்புமுகிழ்**

**ஊறையமை தீம்தயிர் கலக்கி, நுரைதெரிந்து**

**புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட்டு இரீஇ**

**நூாள்மோர் மாறும் ல்மா மேனி**

**சிறுகுழை துயல்வரும் காதின் பணைத்தோள்**

**குறுநெறிக் கொண்ட கூந்தல் ஆய்மகள்**

**ஆளைவிலை உணவில் கிளையுடன் அருத்தி"[7]**

ஆயர் மகளிர் தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுத்து நெய்யைக் காய்ச்சி எடுத்து, தயிரையும், மோரையும் சேர்த்தார்கள். அதனை பண்டமாற்றாக மாற்றி தானியத்தைப் பெற்று உணவு சமைத்து உண்டதைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் விளக்குகிறார்.

தேனையும் கிழங்கையும் கொடுத்து அதற்கு மாற்றாக, மீன் நெய்யையும், மதுவையும் பெற்றுச் சென்றதையும் கரும்பு அவல் ஆகியவற்றைக் கொடுத்து மான் இறைச்சியையும் கள்ளையும் வாங்கிச் சென்றதையும்,

**'தேன் நெய்யோடு கிழங்கு மாறியோர்**

**மீன் நெய்யோடு நறவு மறுகவும்**

**தீங் கரும்போடு அவல் வகுத்தோர்**

**மான் குறையொடு மது மறுகவும்"[8]**

குறிஞ்சிநில மக்கள் தேனையும் கிழங்கையும் கொடுத்து நெய்தல் மக்களிடம் இருந்து மீனையும் கள்ளையும் கொண்டனர். மருதநில மக்கள் சுவையான கரும்பையும் அவலையும் கொடுத்து மான் இறைச்சியையும் மதுவையும் பெற்றனர் என்பதை இப்பாடல் வரிகளின் மூலம் அறியலாம்.

சங்க இலக்கியங்களில் அந்தந்த நிலங்களில் விளைந்த விளைப்பொருட்கள் மக்களின் தேவை கருதி பண்டமாற்று செய்யப்பட்டமையை தெளிவாக விளக்குகிறது. பொருளுக்கு பொருள் பண்டமாற்று செய்தமையை நிலம் சார்ந்த பண்டமாற்று எடுத்துக்காட்டுகிறது.

### 2.2.6 களக் கொள் வெண்ணெல்

பல்வேறு குடிகளை உடையவன் கிள்ளிவளவன். அத்தகைய ஊரிலே பண்டமாற்று முறை நடைபெற்றமையை

**'காண் உறை வாழ்க்கை, கத நாய், வேட்டுவன்**

**மான் தசை சொரிந்த வட்டியும், ஆய்மகள்**

**தயிர் கொடு வந்த தசும்பும், நிறைய**

**ஏரின் வாழ்நர் பேர் இல் அரிவையர்**

**குளக்கீழ் விளைந்த களக் கொள் வெண்ணெல்**

**முகந்தனர் கொடுப்ப, உகந்தனர் பெயரும்**

**தென்னம் பொருப்பன் நல் நாட்டுள்ளும்,**

**ஏழ் எயிற் கதவம் எறிந்து, கைக்கொண்டு, நின்"**[9]

வேட்டை நாயையுடைய வேட்டுவன், காட்டில் வாழும் வாழ்க்கையின் அவன் மான் தசையைக் கொண்ட கடகப் பெட்டியையும், ஆய்மகள் தயிர் கொண்டு வந்து தந்த பானையும் உடையவன் அவனுக்கு ஏரினால் உழுது வாழும் உழவர்தம் பெரிய வீட்டிலுள்ள மகளிர், குளத்திற்குக் கீழாக விளைந்த களத்திலிருந்து பெற்ற வெண்ணெல்லை முகந்து தருவர். அதனைப் பெற்றவனாய் மகிழ்ந்து தன்னிடத்திற்கு மீள்வான் என்று ஆய்மகள் தயிர் விற்றமையையும் உழவர் மகள் வெண்ணெல் தந்தமையையும் இப்பாடல் வரிகளின் மூலம் அறிய முடிகின்றது.

**2.2.7.கானயானை வெண்கோடு சுட்டி**

யானைத் தந்தத்தைக் கொடுத்து கள் வாங்கி குடித்த செய்தியை,

**"வரிகினர் பணைத்தோள், வயிறுஅணி திதலை,**

**அரிய லாட்டியர் அல்குமனை வரைப்பில்,**

**மகிழ் நொடை பெறாஅராகி,னைகவுள்**

**கான யானை வெண்கோடு சுட்டி,**

**மன்றுஓடு புதல்வன் புன்தலைகவும்,**

**அருமுனைப் பாக்கத்து அல்கி,"**[10]

பருத்த தோளும், தேமல் படர்ந்த வயிறும், உடைய பெண்ணொருத்தியாள் கள் விற்கும் கடைக்குச் சென்று, வாங்கப் பொருள் இன்மையால் கையைப் பிசைவர். அப்போது மன்றத்தில் விளையாடும் தன் மகளை அழைத்துத் தலையைத் தடவிக் கொடுத்து வீட்டில் அழகுக்காக வைத்திருக்கும் யானைக் கொம்பு ஒன்றை எடுத்து வருமாறு கூறுவார். இக்கருத்திலிருந்து யானைத்தந்தமும் கள்ளும் பண்டமாற்று செய்யப்பட்டமை புலப்படுகிறது.

**2.2.8.உப்புகொடை நெல்லின் மூரல்**

நெய்தல் நிலப் பெண்டிர், உப்பை விற்று நெல் வாங்கி, அரிசியாக்கி சோறு சமைத்தமையை,

**'நெடுந்திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு,**

**உப்புநொடை நெல்லின் மூரல் வெண்சோறு**

**அயிலை துழந்த அம்புளிச் சொரித்து,**

**கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்**

**திண்தேர்ப் பொறையன் தொண்டி"[11]**

கடலில் இறால் மீன் பிடித்து வரும் தந்தைக்கு, உப்பை விற்று வாங்கிய நெல்லை, அரிசியாக்கி, வெண்மையாகச் சமைத்த சோற்றில், அயிரை மீன் புளிக்குழம்புடன் உணவு கொடுக்கும் இடமாகிய சேரானது தொண்டி என்னும் பட்டினம் என்று இப்பாடல் வரிகள் விளக்குகிறது.

**2.2.9 கடுங்கண் வேழத்துக் கோடுநெடுத்து**

வல்வில் ஓரியின் மலையில் ஆண்யானையின் தந்தம் கிடைக்கப்பெற்றமையையும் அதனை விற்றுக் கிடைக்கும் உணவுப் பொருள்களை உண்டு மகிழ்ந்தமையையும் என்பதை

**'அருவிப் பரப்பின் ஐவனம் வித்திப்**

**பருஇலைக் குளவியொடு பசுமரல் கட்டும்**

**காந்தள்அம் சிலம்பில் சிறுகுடி பசித்தென**

**கடுங்கண் வேழத்துக் கோடுநொடுத்து**

**வல்வில் ஓரி கொல்லி"[12]**

அருவி பாய்கின்ற நிலப்பரப்பில் மலைநெல்லை விதைத்து அகன்ற இலையை உடைய காட்டு மல்லிகையையும் பசுமையான மரல் செடியையும் களைஎடுத்துப் பயிர்செய்யும் செங்காந்தளையும் வேலியாக உடைய சிற்றூரிலுள்ளவர்கள் பசித்தால் ஆண்யானையின் தந்தத்தை விற்று அதனால் கிடைக்கும் பொருளைக் கொண்டு உண்பர். அத்தகைய மக்கள் வாழும் வல்வில் ஓரியின் மலைநாடு என்று குறிப்பிடுகின்றன இப்பாடல் வரிகள்.

### 2.3 நீர் சார்ந்த பண்டமாற்று முறை

தொடக்க காலத்தில் பண்டமாற்று முறையிலேயே வாணிபம் நடைபெற்றது. நிலவுடைமைச் சமூகத்தின் தோற்ற காலத்தில் இருந்த தமிழ்ச் சமூகத்தில் வணிகர்கள் உருவாகிவிட்டதையும் அவர்களின் செயல்பாடுகளையும் சங்க இலக்கியங்களின் வாயிலாக அறியலாம். வாணிபம் குறித்து கூறும் போது,

**'உழவு தொழிலே வரைவு வாணிபம்**

**வித்தை சிற்பம் அன்றித்திறத் தறு தொழில்**

**கற்கும் நடையது கரும பூமி"[13]**

புண்ணிய பூமி என்று போற்றப்படும் இந்தியாவுக்குப் பாரதகண்டம் பாரதவர்ஷம் என்ற பெயர்கள் முன்னாள் முதல் வழங்குவது போலவே அதற்குக் கர்மபூமி என்னும் பெயரும் வழங்கப்பட்டது. கர்மபூமி என்பதற்குப் பல்வேறு பொருள்கள் கூறப்பட்டாலும் 'உயர்ந்த தொழில்களையே செய்தற்குரிய பூமி எனப் பொருள் காணுதலே முன்னோர் கருத்துடன் பொருந்துவதாகும். இது திவாகர நூற்பாவில் விளங்கும்.

தொழில்களிலே உழவும் வாணிபமுமே தலைசிறந்தன என்பது அறிஞர்களின் ஒருமித்த கருத்தாகும். இத்தொழில்களை சங்க காலத்து மக்கள் சிறப்புற செயல்படுத்தினர் என்பதும் சங்க காலம் பொற்காலம் என்பதற்கு வணிகமும் சான்றாக அமைகிறது.

**2.3.1.வணிகர் வாழ்க்கை**

தமிழகத்தில் நடைபெற்ற வியாபார வணிகச் செயற்பாடுகளை சங்க இலக்கியங்களில் விரிவாகக் கூறப்படுகின்றன. வணிகச் செயற்பாடுகளை அறிய வெளிநாட்டுக் குறிப்புகளும் துணைபுரிகின்றன. அத்தகைய வணிகரின் வாழ்க்கை முறையைப் பட்டினப்பாலை

**‘நெடுநுகத்துப் பகல்போல**

**நடுவுநின்ற நல்நெஞ்சினோர்**

**வடு அஞ்சி வாய்மொலிந்து**

**தமவும் பிறவும் ஒப்ப நாடிக்**

**கொள்வதூஉம் மிகைகொளாது**

**கொடுப்பதூஉம் குறைகொடாது**

**தொல் கொண்டித் துவன்று இருக்கை”**[14]

வணிகர், நீண்ட கத்தடியில் நடுமத்தியில் அடிக்கப்பெற்ற பகல் ஆணி போன்று நடுவுநிலை என்னும் குணம் அமைந்த நல்ல உள்ளத்தார் கடிக்குப் பழி என்று அஞ்சி உண்மையே பேசுவர். தம்முடைய பொருள்களையும் ஒன்றாகவே கருதுவர். தாம் பொருள்களை புறநானூறுபோது மிகுதியாகக் கொள்ளாமல் கொடுக்கும் போது குறைவாகக் கொடாமல் வாழ்வர். பல பொருள்களையும் தம் ஊதியத்தை வெளிப்படையாகக் கூறி விற்பர். இவ்வாறு தொன்றுதொட்டு ஈட்டிய பொருளுடைய வணிகர் இருந்த இருப்பிடங்கள் என்று வணிகரின் தன்மையை எடுத்துக் கூறுகிறது.

**2.4.உள்நாட்டு வாணிகம்**

உள்நாட்டு வாணிகம் பொரும்பாலும் பண்டமாற்று முறையிலேயே நடைபெற்றது. ‘சிறுபான்மை நகர்ப்புறங்களிலும் பெரும்பாலும் கிராமப்புறங்களிலும் இன்றும் உணவுப் பண்டங்களை, முக்கியமாக தெருவில் வந்து விற்கும் கூடைக்காரர்களிடமிருந்து, காய்கறிகளையோ, அரிசியோ, நெல்லோ கொடுத்துப் பெறுவது மரபாய் உள்ளது. அளவு குறித்து வாங்கி அவ்வாங்கியவாறே எதிர் கொடுப்பது முறை மிக எதிர்ப்பை என்னும் பெயர்த்து” பண்டமாற்று முறை மிக அதிகமாகப் பழக்கத்தில் இருந்தமையால் வெளிநாட்டு வியாபாரத்திற்கு காசுகள் பயன்படுத்தப்பட்டன என்று கருதலாம்”[15] என்று ந.சுப்ரமணியன் குறிப்பிடுகிறார்.

உள்நாட்டு வாணிகத்தைப் பற்றி அறியும்பொழுது மக்கள் நிலத்திற்கு நிலம் மாறுபட்டதால் போக்குவரத்திற்குச் சாதனங்கள் தேவை எனக் கருதிப் பயன்படுத்தப்பட்டன. பொருள்களை ஏற்றிச் செல்ல வண்டில், எருதுகள், கழுதைகள் நிலத்தில் செல்லும் பொழுது பயன்பட்டன.

**2.4.1.அணர்ச்செவிக் கழுதைச் சாத்து,**

மிளகு மூட்டைகளைக் கழுதையின் மீது ஏற்றிச் செல்லும் பொழுது அவை சுவைகளை உடைய பலாப்பழ அளவிற்கு இருந்ததாகவும், கழுதைகள் ரோனகாதினையும், குறிப்பிடுகின்றது. உரமான முதுகையும் உடையவாக இருந்தன என்றும் பெரும்பாணாற்றுப்படை,

**‘விரவுவரிக் கச்சின்,வெண்கை ஒள்வாள்,**

**வரைஊர் பாம்பின், பூண்டு புடைதூங்க**

**கரிகை நுழைந்தசுற்று வீங்கு செறிவுஉடை**

**கரவில் எச்சிய கண்அகன் எறுழ்த்தோள்**

**கடம்புஅமர் நெடுவேள் அன்ன,மீளி,**

**உடம்பிடித் தடக்கை ஓடா வம்பலர்**

**தடவுநிலைப் பெரும்பழம் கடுப்ப, மிரியல்**

**புணர்பொறை தாங்கிய வடுஆழ் நோன்புற**

**அணர்ச்செவிக் கழுதைச் சாத்தொடு, வழங்கும்**

**உல்குடை பெருவழிக் கவலை காக்கும்"[16]**

புண்கள் இல்லாத மார்பினை உடையவர் அம்மார்பில் கச்சை என்ற ஒருவகை ஆடையில் யானைத் தந்தத்தால் செய்த பிடியை வாளைத் தொங்கவிட்டு இருந்தனர். அது மலையில் பாம்பு ஊர்வது போல் இருந்தது. இடையில் உடைவாள் செருகி இருந்தனர். அதனுடன் காதை உயர்த்திச் செல்லுகின்ற கழுதைகளின் மேல் மிளகுப் பொதியைக் ஏற்றிக் கொண்டு சென்றனர் வணிகர்கள் என்று கூறுகிறது.

மான் தசைக்கும் தயிர்க்கும் பதிலாக வெண்ணெல் மாற்றம் செய்யப்பட்டன. இதனைப் புறநானூறு பின் வருமாறு விளக்குகிறது.

**'மான்தசை சொரிந்த வட்டியும், ஆய்மகள்**

**தயிர்கொடு வந்த தசும்பும் நிறைய,**

**ஏரின் வாழ்நர் பேர்இல் அரிவையர்**

**குளக்கீழ் விளைத்த களக்கொள் வெண்ணெல்**

**முகந்தனர் கொடுப்ப, உகந்தனர் பெயரும்"[17]**

வேடர் மானின் தசையை இட்ட ஓலைப் பெட்டியும், ஆய்மகள் தயிர் கொண்டு வந்த பெரிய வீட்டில் உள்ள மகளிர், குளத்தின் அருகே வளைந்த கலித்தடி நெல்லை, அள்ளிக் கொடுக்க மகிழ்ந்து திரும்பும் தெற்குத் திசையில் உள்ள பொதிய மலை அமைந்த பாண்டியனின் நாடு. இவ்வாறு சங்க இலக்கியங்களில் உள்நாட்டு வாணிபம் நடைபெற்றமையை அறியமுடிகிறது.

## 2.5.வெளிநாட்டு வாணிகம்

ஒரு நாட்டின் பொருளாதார வளத்திற்கு முக்கிய காரணியாக அமைவது வாணிபமாகும். சங்ககாலம் தொட்டு இக்காலம் வரை வாணிபத்திற்கு என்று தனி இடம் உண்டு. தற்காலப் பொருளாதார அறிஞர்கள் பொருளாதாரத்திற்கும் வாணிகத்திற்கும் உள்ள தொடர்பை 'வாணிகம் நாட்டின் சாதன வளங்களின் பெருக்கத்திற்குத் துணைபுரிகிறது. அதன் வாயிலாகச் சிறப்பு தொழில் தேர்ச்சியை ஊக்குவித்து, ஏற்றுமதிப் பயிர்கள் உள்நாட்டுத் தேவைக்கான விளைவு இரண்டின் உற்பத்தியையும் அதிகரிக்கச் செய்கின்றது. வாணிகம் உற்பத்திக்கும், உற்பத்தி ஆற்றல் பெருக்கத்திற்கும் ஊக்கமளிப்பதாகும். அவை சிறப்பாக வியாபாரப் பயிர்களை விளைத்தற்குரிய நிலப்பரப்பு தன்மையானது அவ்வாறே மூலதனக் குவிப்பிற்கும் தூண்டுதலளிக்கின்றது"[18]. வாணிபம் இயங்கு நிலைத் தன்மையோடு சமூகத்தின் பொருளாதாரக் கூறுகளில் இருந்து பிரித்துப் பார்க்க இயலாதது.

தமிழ் இனமக்கள் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே பல்வேறு நாடுகளுடன் கடல்கடந்து வாணிபம் செய்தனர் என்பதற்கு சங்க இலக்கியங்கள் பல்வேறு சான்றாதாரங்களைக் காட்டுகின்றன. சங்க காலத்தில் தமிழகத்தோடு வாணிகம் செய்து வந்த ஐரோப்பியர் யவனர் எனப்பட்டனர்.'ஓனிஸ் என்னும் கிரேக்கச் சொல்லிருந்து திரிந்து வந்தது வடமொழிக் கவிதையில் பெரும்பாலும் கிரேக்கரை உணர்த்தவே இச்சொல் வழங்குகிறது"[19] என்று சு.வித்தியானந்தன் குறிப்பிடுகிறார்.

வாணிகப் பொருள்களைப் பிறநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்கள், அங்கிருந்து இறக்குமதி செய்யப்பட்ட பொருள்கள் என இரண்டாகப்பிரிப்பர். சங்க இலக்கியத்தில் வணிகம் என்பது நீண்ட விரிவானதொரு அடையாளங்களை எடுத்துக்காட்டுகிறது. கடலில் கிடைக்கும் ஒலியுடைய முத்துக்களும், வாளரத்தால் கீறியறுத்துச் செய்யப்பட்டு அழகிய சங்குவளைகளும், பரதவர் தந்த பல்வேறு பண்டங்களும், கரிய கழியிடத்துப் பாத்தியில் விற்கும் தித்திப்புக் கட்டிப் பொறித்த புளியோடே ஆண்டு விளையும் வெள்ளிய உப்பும்,

மீனின் உணங்கலாற்றுணிகளும் ஆகியவைகளை ஏற்றுமதி செய்வதாக சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

**'முழங்குகடல் தந்த விளங்குகதிர் முத்தம்**

**அரம்போழ்ந்து அறுத்த கண்தேர் இலங்குவளை**

**பரதர் தந்த பல்வேறு கூலம்**

**இருங்கழிச் செறுவின் தீம்புளி வெள்உப்புப்**

**பரந்தோங்கு வரைப்பின் வன்கைத் திமிலர்**

**கொழுமீன் குறைஇய துடிக்கண் துணில்**

**விழுமிய நாவாய் பெருநீர் ஒச்சுநர்**

**நனந்தலைத் தேஎத்து ன்கலன் உய்ம்மார்**

**புணர்ந்துடன் கொணர்ந்த புரவியொடு அனைத்தும்"[20]**

இவ்வாறு நாளுக்கு நாள் கடல் வாணிபம் சிறந்து விளங்கியமையை மதுரைக்காஞ்சி காட்சிப்படுத்துகிறது. அடுத்தப்படியாக அருங்கலன்கள் ஏற்றுமதி செய்யப்பட்டமையை

**'அருங்கலம் தரிஇயர் நீர்மிசை நிவக்கும்**

**பெருங்கலி வங்கம் திசைதிரிந் தாங்கு"[21]**

கடல் கடந்த நாடுகளிலிருந்து அரும்பொருள்களை கொணர்வதற்குக் கடல் மேல் மிதந்து செல்லும் மரக்கலன்கள் திசைதோறும் பரவிச் செல்லும் என்பதலிருந்து வெளி நாடுகளோடு கொண்ட தொடர்பு கடல் கடந்து அமையப் பெற்றமையை அறிய முடிகின்றது.

தமிழகத்தில் நிரந்தரமாகத் தங்கிவிட்ட யவனர்கள் அரச சேவையை மேற்கொண்டு மெய்க்காப்பாளர்களாகவும் அரண்மனைக் காவற்பகாரர்களாகவும் இராணுவப் பாசறைக் காவலர்களாகவும் அமர்ந்தனர். இதனை,

சங்ககாலத்து தமிழகத்தின் ஏற்றுமதிக்கும் இறக்குமதிக்கும் கப்பல்கள், துறைமுகங்கள், கலங்கரை விளக்கங்கள் முதலிவை துணை கோலின் பல்வகைப் பண்டங்கள் வெளிநாடுகளினின்றும் இறக்குமதி செய்யப்பட்டமையை,

**‘வெறுபல் நாட்டிற் கால்தரவ வந்த**

**பலவுறு பண்ணியம் இழிதரு நிலவுமணல்”**[22]

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. யவனர்கள் அன்ன விளக்கினையும் பாவை விளக்கினையும் தமிழகத்திற்குத் தந்தனர் என்பதை,

**‘யவனர் இயற்றி வினைமாண் பாவை**

**கைஏந்தும் ஐ அகல் நிறைய நெற்சொரிந்து”**[23]

நெடுநெல்வாடை, சோனர்களால் செய்யப்பெற்ற தொழில் சிறப்புடைய பாவை விளக்கில் கைஏந்திய வியப்புடைய தகளி என்று வெளிநாட்டில் இருந்து வந்தமையை அறிய இப்பாடல் வரிகள் உதவுகிறது. முசிறி துறைமுகத்தில் இருந்து வந்த யவனர்கள் வந்து பொன் பொருளைத் தந்து மிளகுப் பெற்றுச் சென்றமையை,

**‘யவனர் தந்த விளைமான் நன்கலம்**

**பொன்னோடு வந்து கறியோடு பெயரும்”**[24]

யவனரின் தரக்கலம் அங்கு வந்து பொன்னை இறக்குமதி செய்து மிளகை வாங்கிச் செல்லும் நிலையை அகநானூறு எடுத்துக் காட்டுகிறது. இவ்வாறு வாணிபக் குறிப்புகளை சங்க இலக்கியத்தின் பல்வேறு பாடல்கள் சான்றுகளாக அமைந்துள்ளன.

### 2.6 நாணய மாற்றுமுறை

சங்க இலக்கியங்களில் நாணய மாற்று முறை மிகுதியாக பயன்படுத்தப்படவில்லை. வெளிநாட்டு வாணிபத்திற்கு மட்டுமே நாணயங்கள் பயன்படுத்தப்பட்டன என்றாலும் சங்க காலத்து மக்கள் நாணயங்கள் குறித்து அறியாமல் இல்லை. நாணயங்களை உலோகங்களாகவும், காசுகளாகவும், பொற்காசுகளாகவும் மக்கள் அறிந்திருந்தனர். சங்ககாலத்து மக்கள் நாணயங்களை வாணிபத்திற்கு பயன்படுத்தினர் என்பதை 'அகஸ்டஸ் மற்றும் அவரையடுத்த பேரரசர்கள் காலத்து ரோமானிய நாணங்களைத் தமிழர் அறிந்தும் பயன்படுத்தியும் வந்தனர். தமிழர் தமது சரக்குகளை ரோமாபுரிக்கு ஏற்றுமதி செய்து அவர்களது சரக்குகளையோ காசையோ பெற்றுக் கொண்டனர். தமிழகத்திற்கும் ரோமாபுரிக்குமிடையே வாணிபம் சங்க காலத்தில் மிகவும் ஓங்கியிருந்ததது. யவனர் இந்நாட்டிலேயே ஒரு நாணயச்சாலை நிறுவி தங்கள் நாணயங்கள் அடித்து உள்ளூர் வாணிபத்திற்குப் பயன்படுத்தி வந்தனர்"[25] என்பதை அறிய முடிகின்றது.

### 2.7 சங்க கால நாணயமுறை

சங்க காலத்து நாணயங்கள் நமக்கு மிகுதியும் கிடைக்கப்பெறவில்லை. அவற்றின் உருவம், அளவு, எடை உலோகம் என்பனவற்றைப் பற்றி அதிகம் கூற முடியாது. ஆனால் சங்க கால மக்கள் காசுகள் அறியாமலில்லை. 'நாமறியும் சங்க கால காசுகள் அரசுடைமையான, நிரந்த நிறுவனமான நாணயச் சாலைகளில் அடிக்கப்பட்டவையல்ல. அதற்கென்று நியமிக்கப்பட்ட பொற்கொல்லர்கள் இக்காசுகளை அடித்தனர். காசுகள் ஒரே எடையாக இருந்தல் வேண்டும். அவற்றின் மீது எழுத்து, உருவம் போன்ற கோலங்கள் பொறிக்கப்பட்டனவா என்பதும் தெரியாது. பொதுச் சொத்துக்கள் மீது அரசின் சின்னங்கள் (வில், மீன், புலி) பொறிக்கப்பெற்றமை அறிவோமாதலின், அக்காசுகள் மீது அரசுப்பொறிகள் அடிப்பட்டிருக்க கூடும் என்று கருதுதல் பொருந்தும் சில ஆதிகாலச் சங்கக் காசுகளை அறிவோம். ஆனால் இவற்றில் பாண்டியர் மீன்ப் பொறிகளே காணப்படுகின்றன"[26]

சங்ககால காசுகள் பொன்னார் செய்யப்பட்ட காசுகள். இவை அரசவை புலவருக்கு பாடிப்பெற்ற பரிசிலாக வழங்கப்படுகிறது. ‘தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை அரிசில் கிழாருக்கு நூறாயிரம் பொற்காணங்களும் சேரநாட்டு அரசுரிமையும் அளித்தான்”[37] காக்கைப் பாடினியர் என்னும் பெண்பாற்புலவர் பாடிப்பெற்ற பரிசிலாக ‘புரவலன் ஆகுகோட்பாட்டுச் சேரலாதனிடமிருந்து ஆறு ஆயிரம் பொற்காணங்களைப் பெருமளவுக் கட்டித் தங்கமும்”[28] பெற்றார். தங்க நாணயங்கள் வெளிநாட்டு வாணிபத்திற்கும் பயன்பட்டமையை ‘கிரேக்க நாட்டுக் கப்பல்கள் தங்க நாணயங்களை கொடுத்து அவற்றிற்குப் பதிலாக கறுப்புத் தங்கம் என்று கருதப்பட்ட மிளகைப் பெற்றுச் செல்லுமாம்”[29] என்று குறிப்பிடுகிறார்.

### 2.7.1.வள்உகிர்ப் பொலங்கலம்

தங்க நாணயங்கள் வேப்பம் பூவைப் போல் காட்சி தருவதை,

**‘வளைவாய்க் கொண்ட வேப்ப ஒண்பழம்**

**புதுநாண் நுழைப்பான் லுதிமாண் வள்உகிர்ப்**

**பொலங்கல ஒரு காசு”[30]**

என்ற பாடல் வரிகள் ஒளி மிக்க சேப்பம் பழம் புதிய பொற்கம்பியினுள் காசு நுழைத்துக் காசுமாலை என்னும் பொன் அணிகலனைச் செய்ய பொற் கொல்லனின் ஊசி முனையுடன் கூரிய நகத்தில் கொண்ட ஒரு பொற்காசு போல் காட்சி தரும் என்று பொருள் தருகின்றன.

### 2.7.2. கோடுஏந்து அலகுல்

சங்க காலத்தில் பெண்டிர் தங்க நாணயங்களைக் மாலையாகக் கோர்த்து அணிகலன்களாக அணிந்திருந்தனர். இதனை,

**‘பொலங்காசு நிரைத்த கோடுஏந்து அலகுல்”[31]**

என்ற பாடல் வரி வாணன் என்னும் சிறுகுடியில் வாழும் கன்னிப் பெண்கள் பொற்காசுகளைத் தொடுத்த மேகலையைத் தம் இடையில் அணிந்திருப்பா் என்று உணா்த்துகிறது.

### 2.7.3. காசு நிரை அலகுல்

தங்க நாணயங்களை கோர்த்து அரைஞானாக இருப்பதும் சங்க காலப் பெண்கள் அணிந்திருந்தனா். இதனை,

**'கொலம்பசும் பாண்டில் காசுநிரை அலகுல்**

**இலங்குவளை மேன்தோள் இழைநிலை"[32]**

என்ற பாடல் வரிகள் பொன்னாலான பசுமையான வட்டவடிவக் காசுகளைக் கோத்து அணியாக அணிந்துள்ள அடிவயிற்றை உடைய ஒளி பொருந்திய வளையல்களும் மென்மையான தோளில் அணிந்துள்ள ஆபரணங்களும் என்று விளக்கம் தருகிறது.

காசு என்னும் நாணயங்கள் சங்க காலத்தில் இருந்ததாகவும் அவை உலோக நாணயம் செய்வதற்கு பயன்பட்டமையையும் 'காசு என்னும் சொல்லாட்சி குறிப்பிடத்தக்கது. பிற்காலத்தில் இது உலோக நாணயம் செய்வதற்கும், முக்கியமாக மிகச் சிறிய தாமரை நாணயத்திற்கும் பெயராயிற்று"[33] என்று குறிப்பிடப்படுகிறது.

தமிழகத்தில் அண்மைகாலத்தில் நாணயங்களில் புதிய கண்டுபிடிப்புகள் நிகழ்ந்துள்ளன. 'சங்க காலத்தைச் சார்ந்த நாணயங்கள் பல கண்டுபிடிக்கப்பட்டிருப்பதன் மூலம் வலுவான அரசுருவாக்கம், அரசுகள், சிற்றரசுகள், சங்க காலத்தில் இருந்தன என்பது உறுதியாகின்றது. பாண்டியா்கள் வெளியிட்ட வெள்ளி முத்திரை நாணயங்கள் 5-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை"[34] இவ்வாறு நாணயங்கள் பல்வேறு காலகட்டங்களில் பல்வேறு முறைகளில் சங்க இலக்கியங்களில் பயின்று வந்துள்ளது.

### .8. சங்ககால எடைமுறைகள்

ஒரு வாணிக சமூகத்தினருக்கு முறையான எடை முறைகள் தேவை, பேரெண்களாகப் பெருக்கி எண்ணவும், பின்னங்களாக வகுத்துக் காணவும், அவர்கள் வல்லவராதல் வேண்டும். எண்களை எண்ணுதற்கு எடை அளவுகள் தேவைப்பட்டன. 'எண் என்னும் சொல்லைத் தமிழர் பெயர்ச் சொல்லாகவும் வினைச் சொல்லாகவும் ஆண்டனர். எண்ணுவதற்கு மணிகள் வைத்திருந்தனர். கிழங்கு (கழற்சிக்காய்) கொண்டு அவர்கள் எண்ணினர்"[35] என்று கூறுகிறார்.

பழந்தமிழர்கள் ஒன்றிலிருந்து ஆயிரம் வரை எண்ணத் தெரிந்திருந்தனர். ஆணிரத்திற்கு மேற்பட்ட எண்களை ஆயிரம் ஆயிரமாக எண்ணினர். 899 வரை எண்ணைத் தெரிந்த தமிழர்க்கு 900 தெரிந்திருக்கும். 900 என்னும் எண்ணைத் தொள்ளாயிரம் என்றே அறிந்தனர். தொல்காப்பியர் தொள்ளாயிரம் என்னும் சொல்லை

**'ஒன்பான் முதனிலை முந்து கிலிந்தற்றே**

**முந்தை ஒற்றே லாகாரம் இரட்டும்**

**நூறு என் கிளவி நகாரமெய்கெட**

**ஊஆ ஆகநானூறு இயற்கைத்து என்ப**

**ஆயிடை வருதல் இகர ரகாரம்**

**ஈறு மெய்கெடுத்து மகரம் ஒற்றும்"**[36]

என்னும் நூற்பாவால் விளக்குகிறார்.

சங்க இலக்கியத்தில் மிகப் பெரிய எண்களைக் குறிக்க பல சொற்களை கையாண்டன். அவற்றின் மதிப்பை வெள்ளம், ஆம்பல், தாமரை என்கிற சொற்களால் அறிய முடிகின்றது. இதற்கு

**'ஆயிரம் வெள்ளம், வாழிய பலவே"**[37]

அரசமாதேவியோடு பல ஆயிரம் வெள்ளகாலம் வாழ்வாயாக என்று கூறுவதும்

**‘பல்வெள்ளம்மீக்உற**

**உலகம் ஆண்ட உயர்ந்தோர் மருக”[38]**

பல ஆண்டுகள் அரசன் ஆண்ட தன்மையை மேன்மையாகச் சொல்ல, உலகம் ஆண்டு உயர்ச்சி பெற்றோர் என்று கூறுவதும்,

**‘அடைஅடுப்பு அறியா அருவி ஆம்பல்**

**ஆயிர வெள்ள ஊழி**

**வாழி, ஆத! வாழிய, பலவே!”[39]**

அகன்ற இவ்வுலகில் சான்றோர் செய்த நல்வினைகள் உண்டானால் நீ ஆம்பல் என்னும் ஆயிரம், வெள்ளம், என்னும் எண்ணும் ஆகிய பல ஊழிக்காலம் வாழ்வாயாக என்று கூறுவதும், உறுதியான சான்றுகளாக அமைகின்றன.

**2.9. சங்க கால அளவை முறைகள்**

சங்ககாலத் தமிழர்கள் நிலத்தை அளப்பதற்கும் தானியங்களை அளப்பதற்கும் அளவைகள் பயன்பட்டன. ‘பண்டைத் தமிழர் அறிந்த நில அளவுகள்

100 குழி : 1 மா

20 மா : 1 வேலி

1 குழி : 10 சதுர அடி 2 ½ அடி ஓ 1”[40]

என்று குறிப்பிடுகிறார். தமிழர் பூஜ்யத்தை ‘பாழ்’ என்ற சொல்லில் குறிப்பிட்டனர் என்பதை

**‘பாழ் என, கால்என, பாகுஎன, ஒன்றுஎன**

**இரண்டுஎனக, மூன்றுஎன, நான்குஎன, ஐந்துஎன,**

**ஆறுஎன, ஏழுஎன, எட்டுஎன, தொண்டுஎன,**

**நால்வகை ஊழி எண் நவிற்றும் சிறப்பினை"[41]**

பரமான்மாவாகிய புருடன், நிலம், நீர், தீ , காற்று, ஆகாயம் என ஐம்பூதங்களும் சொல்லல், இயங்கல், கொடுத்துலர், விடுவித்தல், இன்புறல் ஆகிய ஐந்து தொழில் கருவிகளும் ஆகாயம் என்று காற்று இரண்டு, தீ மூன்று, நீர் நான்கு, நிலம் ஐந்து மனம் ஆறு, ஏழு அகங்காரம், ஆவணம் எட்டு, புத்தி ஒன்பது மூலப்பகுதி இவ்வாறு எல்லா வகை ஊழிகளிலும் ஆராய்ந்து கூறப்படும் சிறப்பினை உடைய என்று விளக்குகிறது. மா என்னும் அளவையைக் குறிப்பிட முடத்தாமக் கண்ணியார்

**'மா மாவின் வயின் வயின் நெல்"[42]**

கடற்கரையை ஒட்டிய மருத நிலத்தில் ஒவ்வொரு மா அளவு நிலத்திலும் மிகுதியாக விளைச்சல் இருந்தமையை சுட்டிக் காட்டுகிறார். நிலத்தை குறிப்பிடுவதற்கு வேலி என்னும் சொல்லை பயன்படுத்தியமையை,

**'சாலி நெல்லின், சிறைபொள் வேலி,**

**ஆயிரம் விளை யுட்டு ஆகக்**

**காவிரி புரக்கும் நாடுகிழ வோனே"[43]**

ஒரு வேலி நிலம் ஆயிரம் கலம் நெல்லைத் தந்தது. அத்தகைய விளக்கத்தை தருகின்ற காவிரி ஆற்றை பாதுகாக்கின்ற சோழநாட்டை உடைய தலைவன் என்று அறிய முடிகின்றது.**2.9.1. முகத்தல் அளவைகள்**

நிலத்திலிருந்து வந்த தானியத்தை அளப்பதற்கு முகத்தல் அளவை என்று பெயர். தூணி, பதக்கு, மரக்கால் என்பவை முகத்தல் அளவையாகும். இவை கொள்ளு முதலிய தானியங்களை அளப்பதற்கு பயன்பட்டன.

"1 தூணி : 4 மரக்கால்

1 பதக்கு : 2 மரக்கால்

(1 மரக்கால் : 4 பட்டணம் படி அல்லது, அம்பணம்)

1 மரக்கால் : 1 அம்பணம்

1 மரக்கால் அல்லது, அம்பணம் : 32 ஆழாக்கு

தானியத்தை அளக்கப் பயன்படுத்திய முகத்தில் அளவைகள் மேலும் கீழம் குறுகி இடைபருத்த ஒரு பாத்திரம்"[44]என்று குறிப்பிடுகிறார் இதற்கு சங்க இலக்கியத்தில் பதிற்றுப்பத்து பத்து சான்று தருகின்றது.

**' நெல்லின்**

**அம்பண அளவை விரிது உறைபோகிய**

**ஆர்பதம் ல்கும்"[45]**

என்ற வரிகள் அம்பண அளவைப் பற்றி தெளிவுப்படுத்துகிறது.

**2.9.2. நீட்டல் அளவைகள்**

சங்ககாலத் தமிழர் நீட்டல் அளவு முறையையும் அறிந்திருந்தனர். அவர்கள் அறிந்திருந்த மிகச்சிறிய நீட்டல் அளவை ஒரு அணு அகநானூறு. இதனை

| ' | 8 | அணு | : | 1 தேர்த்து |
|---|---|---|---|---|
| | 8 | தேர்த்து | : | 1 இம்மி |
| | 8 | இம்மி | : | 1 எள் |
| | 8 | எள் | : | 1 நெல் |
| | 8 | நெல் | : | ஒரு பெருவிரல் |
| | 28 | பெருவிரல் | : | ஒரு முழம் |

தேர்த்து ஒரு மயிரிழை, இம்மி ஒரு மிகச்சிறு தானியம், என், நெல் என்பவை சில தானியங்கள், முழம், இரண்டு சாண், அணு யாவற்றிலும் மிகச்சிறு பொருள்"[46]

என்று குறிப்பிடுகிறார். கால அளவில் எவ்வளவு தூரத்தை எந்த வேகத்தில் கடக்கிறது என்னும் கணக்கை,

**‘செஞ்ஞாயிற்றுச் செலவும், அஞ்ஞாயிற்றுப்**

**பரிப்பும், பரிப்புச் சூழ்ந்தமண் டிலமும்**

**வளிதிரிதரு திசையும்**

**வறிதுநிலைஇய காயமும் என்றுஇவை**

**சென்று அளந்து அறிந்தோம்”[47]**

கதிரவன் செல்லும் வழியும், அதன் இயக்கமும், இயக்கம் சூழ்ந்த விட்டமும், காற்றும் இயங்கும் திசையும் எத்தாங்குதலும் இல்லாமல் அமைந்த வானமும் என்று சொல்லப்படுபவனவற்றை அங்குப் போய் அளந்து அறிந்தவர்களைப் போன்று இவ்வளவு அளவினை உடையன என்று சொல்லும் அறிஞரும் உண்டு என்பர், என்ற செய்தியினை இப்பாடல் வரிகளின் மூலம் அறிய முடிகின்றது. தூரத்தை குறிப்பிட ‘கூப்பிடு’ என்ற சொல் பயன்பட்டது. ஒருவனை இயல்பாக விளிக்குங்கால் அவ்விளி எத்துணைத் தூரம் கேட்குமோ அது ஒரு கூப்பிடு ஆகும். இதனை,

**‘கூப்பிடு கடக்கும் கூர்ல் அம்பின்**

**கொடுவில் கூளியர் கூவை காணின்”[48]**

கூப்பிடு தூரத்தைக் கடக்கும் ஆற்றுலுடைய கூர்மையான நல்ல அம்பினையும் வளைந்த வில்லையுமுடைய வேடர் கூட்டத்தைக் கண்டால் என்று குறிப்பிடுவதிலிருந்து அறிய முடிகின்றது.

## 3.0 முடிவுரை

- ❖ பண்டைத் தமிழரின் பொருளாதாரச் செயற்பாடுகளை அறிந்து கொள்ள பண்டமாற்றும் வாணிபமும் முதன்மைத்துவம் பெருகின்றது என்பதை இந்த ஆய்வின் மூலம் அறிய முடிகின்றது.

- ❖ பண்டமாற்று முறையையும், நிலம் சார்ந்த மக்களின் உற்பத்தி முறைகளையும், அம்மக்களின் தொழில்களையும் அடிப்படையாக வைத்தே நடைபெற்றன என்பது புலப்படுகிறது.
- ❖ உப்பு, நெல், அரிசி, மீன், யானைத் தந்தம் முதலிய பல்வேறு பொருட்கள் சங்ககால மக்களிடையே பண்டமாற்று செய்யப்பட்டமையை அறிய முடிகின்றது.
- ❖ பண்டமாற்றை அடியொற்றியே உருவான நாணயமாற்று முறை, வெளிநாட்டினரின் வருகையால் உருவாயின என்பதும், அதற்கு நெய்தல், குறிஞ்சி, நிலத்தில் உற்பத்தி செய்யப்பட்ட பொருட்கள் முழுமுதற்காரணமாக அமைந்தன என்பதம் தெளிவாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.
- ❖ சங்க கால நாணய முறை என்பது காசு, பொன், அரசின் சின்னங்கள், உலோகத்தால் செய்யப்பட்டிருந்தன.
- ❖ சங்ககால எடைகள், பேரெண்களாகவும், பின்னங்களாகவும் காணப்பட்டன. சங்ககாலத்தில் வெள்ளம், ஆம்பல், தாமரை ஆகியன எடையின் மதிப்பு அளவைக் குறிக்கப் பயன்படுத்தப் பட்டன என்பது தெரிகிறது.
- ❖ அரசு உருவாக்கத்திற்கு பின்பு நாணயங்களின் புலக்கம் அதிகமாகக் காணப்பட்டன என்பதும், பெண்கள் முதற் தொட்டே தங்க நாணயங்களை அரைஞானாக அணிந்திருந்தனர் என்பதும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.
- ❖ அளவைகள் என்பது சங்ககாலத்தில் முகத்தல் அளவைகளாகவும், நீட்டல் அளவைகளாகவும் பயன்படுத்தப்பட்டன. அவை, துணி, மரக்கால், அம்பணம் பதக்கு என்ற முகத்தல் அளவைகளாளும், ‘அணு,தேர்த்து, இம்மி,எள்,பெருவிரல் என்ற நீட்டல் அளவைகளாகவும் அளக்கப்பட்டன.
- ❖ இத்தகைய பல்வேறு செயற்பாடுகளினால் பண்டமாற்று முறை, வாணிகம் ஆகியன சங்ககாலத்தில் நடைபெற்றமைத் தெளிவாகப் புலப்படுகிறது.

## இயல்-2

## சங்காலப் பண்டமாற்றும் நாணயமாற்றும்

### குறிப்புகள்:

1. சிவசுப்பிரமணியன், வரலாற்றுப்பொருள்முதல்வாதம், ப-49.
2. மேலது,ப-498.
3. ஐங்குறுநூறு,ப-648.
4. மேலது, ப-526.
5. அகநானூறு,பக்-173-174.
6. பெரும்பாணாற்றுப்படை,பக்-203-204.
7. மேலது,ப-203-204.
8. பொருராற்றுப்படை,பக்-129-130.
9. புறநானூறு,பக்-92-93.
10. அகநானூறு,ப-292.
11. அகநானூறு,ப-87.
12. மேலது,ப-432.
13. சசிவல்லி,பண்டைத் தமிழர் தொழில்கள், ப-209.
14. பட்டினப்பாலை,பக்-451-452.
15. ந.சுப்பிரமணியன், சங்க கால வாழ்வியல்,ப-306.
16. பெரும்பாணாற்றுப்படை,பக்-196-197.
17. புறநானூறு, பக்-545-546.
18. சசிவல்லி,பண்டைத் தமிழர் தொழில்கள், ப-216.
19. வித்யானந்தன், தமிழர் சால்பு,ப-235.
20. மதுரைக்காஞ்சி, ப-310.
21. பதிற்றுப்பத்து, பக்-92-93.
22. நற்றிணை.ப-58.
23. நெடுநல்வாடைப-369.
24. அகநானூறு,பக்183-184.

25. ந.சுப்பிரமணியன், சங்ககால வாழ்வியல்,ப-283.

26. மேலது, ப-282.

27. மேலது, ப-283.

28. மேலது,ப-283.

29. நா.பாலுச்சாமி, பொருலாயிற்சிந்தனைகள்,பக்-130-131.

30. மேலது,ப-413.

31. அகநானூறு,பக்-319-320.

32. ஐங்குறுநூறு,ப-771.

33. நா.சுப்பிரமணியன்,சங்ககால வாழ்வியல்,ப-283.

34. ராசகுமார்,மணற்கேணி,ப-89.

35. ந.சுப்பிரமணியன், சங்ககால வாழ்வியல்,ப-284.

36. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம் தெளிவுரை. ப.175.

37. பதிற்றுப்பத்து,பக்-40.

38. மதுரைக்காஞ்சி, பக்-289.

39. பதிற்றுப்பத்து, பக்-109-110.

40. ந.சுப்பிரமணியன், சங்க கால வாழ்வியல் ,ப.285.

41. பரிபாடல், ப-189.

42. பொருநராபற்றுப்படை, பக்-127-128.

43. மேலது,ப-132.

44. தேவநேயப்பாவாணர், பழந்தமிழர் ஆட்சி .ப-10.

45. பதிற்றுப்பத்து,பக்-113-114.

46. ந.சுப்பிரமணியன், சங்க கால வாழ்வியல்,பக்-286-287.

47. புறநானூறு,பக்-542-543.

48. மலைபடுகடாம்,ப-528.

## இயல் - 3

## சங்ககாலக் கலைஞர்களின் சமூகப் பொருளாதாரப் பதிவுகள்

### பொருளடக்கம்

3.8.1.2. நிகண்டும் திவாகரமும் கூறும் பாணர்

3.8.1.3. பாணர் பிரிவுகள்

3.8.1.3.1. பொருநர்

3.8.1.3.2. கூத்தர்

3.8.1.2.3. விறலி

3.8.1.2.3.1. தமிழ் லெக்சிகன் பேரகராதி:

3.8.1.2.3.2. நிகண்டு தரும் பொருள்:

3.8.1.2.3.3. அபிதான சிந்தாமணி தரும் பொருள்:

3.8.1.2.3.4. அபிதான மணிமாலை தரும் பொருள்:

3.8.1.2.3.5. கலைக்களஞ்சியம் தரும் பொருள்

3.9. கலைஞரும் வறுமையும்

3.9.1. புரவலர் இன்மையின் பசியே

3.9.2. கடும்பசி இரவல்

3.9.3. ஓல்குபசி உழந்த ஒடுங்கு நண்

3.10. புரவலரை நாடிச் செல்லல்

3.10.1. பழுமரம் தெரும் பறவை

3.10.2. நீடுபசி ஓரா அல் வேண்டின்

3.10.3. முதா அரிப் பாண

3.10.4. பெடைமயில் உருவின், பெருந்தழு பாடினி

3.10.5. மரம் மறையாக் கழிமின்

3.10.6. மைபடு மாமலை

3.12. அரசு உருவாக்கத்தில் கலைஞர்களின் பங்கு

3.12.1 சீறூர் மன்னனும் கலைஞரும்

3.12.1.1 சீறூர் மன்னனின் பகிர்ந்துண்ணும் பண்பு

3.12.1.2 நளி மலை நாடன் நள்ளி

3.12.1.3 நீசில மொழியா அளவை

3.12.1.4 பொற் கலத்தில் விரும்புவன பேணி

3.12.1.5 பரிபுலம்பு அலைத்தறும் வருத்தம் வீட

3.12.1.6 கேள் அவன் நிலையே, கெடுகநின் அவலம்

3.12.1.7 சீறூர் மன்னனைப் பாடினை செலினே

3.12.1.8 தொன்மை சுட்டிய வண்மையோனே

3.13. கலைஞனும் மன்னனும்

3.13.1. இரவலர்க்கு ஈயும் வள்ளியோன்

3.13.2. நீடுபசி ஒரா அல் வேண்டின்

3.13.3. அன்றெ விடுக்கும் அவன் பரிசில்

3.13.4.2. பல்வேல் பொறையன் வல்லனால்

3.12.4.5. வாழ்க, அவன் தானே!

3.13.4.6. மனம்கவல்பு இன்றி மாழாந்து எழுந்து

3.13.4.7. கலைஞரும் மன்னனின் நாள் மகிழிருக்கையும்

3.13.4.7.1. இன்இயம் இயக்கினிர் வழிமின்

3.13.4.7.2. பாணர் புரவல, பரிசிலர் வெறுக்கை

3.13.4.7.3. பாண் முற்றுக, நின்நாள் மகிழ்இருக்கை

3.14 கலைஞர்கள் ஊடகமாகச் செயல்பட்டமை

3.14.1. செவ்வழி நல்யாழ் இசையிணன்

3.14.2. பூசல் கேட்டும் அருளா தோயே

3.14.3. ஒருங்கு அமர் ஆயமொடு

3.15. முடிவுரை

## இயல் - 3

## சங்ககாலக் கலைஞர்களின் சமூகப் பொருளாதாரப் பதிவுகள்

### 3.1 முன்னுரை

மனிதன் தோன்றிய நாள் முதலே கலைகளும் அவனுள் பிறப்பெடுத்தன. இயற்கையாகவே, மனிதன் தன் உள்ளத்தில் தோன்றும் எண்ணங்களை வெளிப்படுத்த வேண்டுமென்ற விருப்பம் மிகுந்தவனாகவே காணப்பட்டான். அவ்வெண்ணங்களின் வெளிப்பாடே கலைகளாகவும் உருவெடுத்தன. சமூக வாழ்வியலின் அடிப்படையில் சமூகப் பிரிவுகள் தோன்றின. அச்சமூகத்தில் அகப்புற சூழலுக்கு ஏற்றவாறு கலைகளும் பரிணமித்தன. அவ்வாறு உருவான கலைகள் சமூகத்தின் பண்பாட்டினையும், அரசியலையும், பொருளாதாரத்தையும் பிற்செயற்பாடுகளையும் விளக்குவதாக அமைந்துள்ளன. தமிழ்க் கலையின் பழைமையையும் பெருமையையும், உள்ளது உள்ளவாறு உணர்த்தும் பெட்டகமாக சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன. சங்க காலத்து மக்கள் தங்களது வாழ்க்கையைக் கலையோடு இணைத்திருந்தனர் என்பதற்கு சங்க இலக்கியங்கள் சான்று ஆகும். சங்ககால கலைஞர்கள் தங்களின் அன்றாட வாழ்க்கைக்குத் தேவைப்படும் மூலப்பொருட்களைப் பெறுவதற்காகப் புரவலரை நாடிச் சென்று தங்களது கலைத்திறனை வெளிப்படுத்தினர். அந்த வகையில் கலைகளையும், கலைஞர்களையும், சமூக அமைப்பில் கலைஞர்களுக்கான பங்கினையும், கலைஞர்களின் வறுமையையும், புரவலரை நாடிச் சென்றமை குறித்தும், கலைஞனும் மன்னனும், கலைஞனும் நாள்மகிழிருக்கையும், கலைஞர்கள் ஊடகமாகச் செயல்பட்டமையையும் விரிவாக விளக்குகிறது இந்த இயல்.

### 3.2 கலை - சொல் விளக்கம்

கலை என்னும் சொல் நீண்டதொரு வரலாற்றை எடுத்துரைப்பது. இச்சொல்லுக்கு பல்வேறு விளக்கங்கள் வழங்கப்பட்டுள்ளன. “கலை என்பதற்கு இணையான ஆங்கிலச் சொல் Art. Art என்றால் திறன் என்று பொருள். கலையினை மனத்திறத்தின் வெளிப்பாடு என்னும் பொருளில் சிலம்பு குறிக்கின்றது.

மனதில் இருந்து புறப்படும் கலைகள் கண்ணால் கண்டும், காதால் கேட்டும், இன்பம் துய்க்க வல்லனவாக உள்ளன. கற்பனை, அழகு, இன்பம் தரல் ஆகியன கலைகளின் அடிப்படைத் தன்மைகள்"[1] என்கிறார் திலகவதி.

"கலை என்பது பல்பொருள்களைக் குறிக்கும் ஒரு சொல். கலை என்பது பெயர்ச் சொல்லாக இருக்கும் போது இசைக்கலை, நாடகக்கலை, சிற்பக்கலை கட்டிடக்கலை எனப் பலவகைக் கலைகளைக் குறிக்கும். கலை என்னும் சொல் வினையைக் குறிக்கும் போது கலைத்துப் போடுதல் என்னும் பொருளில் வரும்."[2] என்று கலை குறித்து விளக்கம் தருகிறது.

"கலை மெய்ப்பொருளின் முற்றத்திலிருந்து துய்ப்போரைக் கருவறைக்கு இட்டுச் சென்று உலகியலைக் கடந்து நிற்குங் காட்சியினைப் புலப்படுத்தி நிற்கும்" என்று கோல்ரிட்சு செல்லிங்கு குறிப்பிடுகின்றார். 'கலை மனிதனுக்குக் கட்டுப்பட்டதன்று, கலை ஒரு கருவி. மனிதனுக்கு மகிழ்வுதரும் கருவி. நேர்மையான மகிழ்வு. அம்மகிழ்வு மனிதனின் உள்ளத்தைப் பொறுத்தது" என்று கமலையா கூறுகிறார்.

"கலை என்னும் பெயர்ச்சொல் கல் என்னும் வேர்ச் சொல்லில் இருந்து தோன்றியது எனலாம். கல்லுதல் என்றால் தொண்டுதல் என்று பொருள். இதனை மலையைச் கெல்லி எலியைப் பிடித்தாற் போல் என்னும் பழமொழியாலும் உணரலாம். மண்ணுக்குள் புதைந்து கிடக்கும் தங்கம், வைரம் முதலான இயற்கை வளங்களை கெல்லி (தொண்டி) எடுத்து வெளிக் கொண்டு வருவர். அதைப்போல் மனதிற்குள் மறைந்து இருக்கும் ஆடல், பாடல், ஓவியம், சிற்பக்கலை நுணுக்கங்களை வெளிக்கொணர்வது கலை எனப்படும்"[3]

"உள்ளத்திற்கு உவகையளித்து, மனிதனின் துன்பமெலாம் துடைத்து நின்று இன்பத்தை அளிக்க வல்லது கலை. அது கண்ணைக் கவரும் கட்டிடங்களாக அமையலாம். சிந்தையைக் கவரும் சிலையாக இருக்கலாம். உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் ஓவியமாகத் தோன்றலாம். மனத்தை உருக வைக்கும் இசையாக இருக்கலாம்."[4] என்று கலைக்கு பல்வேறு விளக்கங்கள் தரப்பட்டுள்ளன.

### 3.3 கலைகளின் தோற்றம்

கலைகளின் தோற்றம் குறித்து கூறுகையில், உலகில் மக்கள் தோன்றியது முதல் தங்கள் வாழ்க்கையில் இயல்பாகக் கண்டு தெளிந்த அனுபவங்களை-யொட்டித் தக்க இடங்களில் இல்லங்களை அமைத்து, நிலையாயிருந்து வாழ்க்கைக்கு வேண்டிய உணவு, உடை முதலிய பொருள்களும், பிற வசதிகளும் அமைத்துக் கொண்டு நாகரீக வாழ்க்கையில் தலைப்படும் நிலைமை எய்துவதற்குப் பால்லாயிர ஆண்டுகள் கழித்திருத்தல் வேண்டும். அவ்விடம் அவர்கள் தங்களைத் தாக்க வரும் விலங்கு முதலிய பகைகளை வென்று, உயிர் வாழ்வதற்கு வேண்டிய தொழில்களையே பெரும்பாலும் பயன் கருதி வளர்த்து வந்திருத்தல் வேண்டும். நாளடைவில் பொருள்களைப் பற்றிய அறிவு மிக மிக வாய்த்த தெளிவிலிருந்து அத்தகைய அறிவு பாகுபாடு செய்யப்பட்டு வந்திருத்தல் வெண்டும். இங்ஙகனமே உடம்பபைப் பற்றிய அறிவும், அதன்பின் மனத்தைப் பற்றிய அறிவும் வளர்ந்து பாகுபாடு செய்யப்பட்டுக் கலைகளாக உருவாகியிருத்தல் வேண்டும். இடையே இசைத்தல், ஆடுதல் உருவங்களை வரைதல், வில் முதலிய கருவிகளின் வடிவங்களை அழகுபடத் திருத்தல், உடம்பை அழகு செய்து கொள்ளுதல் முதலிய அழகுணர்ச்சி காரணமாக எழும் செயல்களுந் தோன்றி, நாளடைவில் பல மாறுபாடுகளுடன் சிறிது சிறிதாகத் திருத்திக் கலைகளாக உருவெய்தியிருத்தல் வேண்டும்.” [5] என்று கூறுகிறார்.

“கலையியல் செயல் பயன், திறமை, அழகு , சுவை என்ற அம்சங்கள் உள்ளன. பயன் அம்சம் அதிகப்படுமானால் அது ‘சம்மியம்’ என்ற பிரிவில் அடங்கும் .” [6] என்று கலையியல் செயல் குறித்து விளக்குகிறது.

கலையில் வளர்ச்சி பெற்ற நாடே நாகரிக வளர்ச்சி பெற்ற நாடாக விளங்குகிறது. “நாட்டின் இயற்கையமைப்பு வளம் பருவ இயல்புகள் ஆகியவற்றிற்-கேற்ப அமையும் நாட்டு மக்களின் நோக்கம், அறிவு, செயல்திறம் ஆகியவற்றையொட்டியே ஒவ்வொரு நாட்டிலும் கலைகள் தோன்றி வளரும். அறிவு நூல் கிளைகளிற் பல மேல்நாடுகளிலேயே தோன்றிற் தழைத்துள்ளன. அவை, அவற்றைக் கருவிகளாகக் கொள்வோரின் கருத்தையொட்டி, நலத்தைப் பெருக்கவும்

கேட்டை விளைவிக்கவும் பெரிதும் பயன்படுகின்றன. அவை உழவு, மருத்துவம் முதலிய கலைகளின் வளத்தைப் பலவகைகளிற் பெருக்கியுள்ளன."[7] என்று கலையின் நாகரீகப் போக்கு குறித்து விளக்குகிறது.

### 3.4 கலைஞன் என்பவன்

மனித நாகரீகத்தின் வளர்ச்சியில் கலையின் பங்கு மகத்தானது. அத்தகைய கலையை வளர்ப்பதிலே கலைஞன் முதலிடம் பெறுகிறான். "கலை வாழ்க்கையினின்றே தோன்றி, அதற்கு உருவமும், உயிரும், வேகமும், தெளிவும், விளக்கமும் தந்து விடுகிறது. வாழ்க்கையாதாயினும் அது காலத்தில் இடைவிடாமல் பல வண்ணங்களுடன் இயங்கிக் கொண்டெ இருக்கிறது என்பது மட்டும் தெளிவு. அனுபவம் அனுபவிப்பவர்களைப் பொறுத்து சிக்கலானதாகவோ சாமானியமானதாகவோ இருக்கலாம். அது யாதொரு கட்டிலும் அமையாமலும் யாதொரு ஒழுங்கும் தெளிவும் இல்லாமலும் குழம்பிக் கிடக்கலாம். அதற்கு உயிரோ, உருவோ, உணர்ச்சியோ இல்லாமல் இருக்கலாம். அத்தகைய அனுபவத்திற்கு உருவமும், உயிரும், தெளிவும், ஒழுங்கும் அளிப்பது கலையாகும். அனுபவத்திற்கு சுவை அளித்து அது ஒரு கலையாக பரிணமிக்கச் செய்பவன் கலைஞன்."[8] என்று கூறுகிறார். உணர்ச்சி, கற்பனை, வடிவம், ஆகிய மூன்றும் ஒவ்வொரு கலைக்கும் இன்றியமையாத உறுப்புகள், கருத்து என்ற ஒன்றும் கலைக்கும், கலைஞனுக்கும் மிகுமுக்கியமானதாகக் கொள்ளப்படுகிறது. இதனையே கலை தோன்றுவதற்குக் காரணமாக உள்ளவைகள் நான்கு எனக் கொள்ளப்படுகிறது என்று மு.வரதராசன் குறிப்பிடுகிறார். அவை,

1. 'தன்னுணர்ச்சியை வெளியிடும் விருப்பம்
2. பிறருடைய வாழ்விலும் செயலிலும் நமக்கு உள்ள அக்கறை
3. உண்மையுலகில் உள்ள ஆர்வமும், அதை ஒட்டிக் கற்பனை யுலகினைப் படைப்பதில் உள்ள ஆர்வமும்,
4. ஒலி, கோடு, வண்ணம், சொல் முதலியவற்றிற்கு அழகிய வடிவம் தந்து அமைப்பதில் உள்ள ஆசை.

இவற்றுள் முதலிரண்டுமே உணர்ச்சி, கருத்து, என்னும் உறுப்புகளாக இலக்கியத்தில் அமைவன. மூன்றாவது, கற்பனை என்னும் உறுப்பாக அமைவது. நான்காவது, இலக்கியத்திற்கு வடிவம் என்னும் உறுப்பாக அமைவது" என்று குறிப்பிடுகின்றார்.

### 3.5 கலைஞனின் தன்மை

கலைஞனின் செயல்பாட்டினை எடுத்துக்கூறும் விதமான "கவிஞன் பெறும் ஆவேசமும், கலைஞன் கானும் காட்சியும் , உயரிய உணர்வும் நிலையினின்று வருவன. கலைஞன் தான் ஒரே நேர்க்காட்சியால் காண்பதையெல்லாம் காலம், இடம் என்னும் வரம்பிற்குள் விவரமாக வடிவில் அமைகிறான். தான் காண்பதைச் சிறிதும் நம்பி விடாமல் நன்கு கிரகித்து, அதை அப்படியே உருவில் அமைப்பதில் தான் அவனது மேதை உள்ளது. உண்மையான கலைஞன் புறத்தேத் தோன்றுவதைக் கோவைப்படுத்தி அமைப்பவன் அல்லன். ஒருமைப்பட்ட மனத்தின்கண் காண்பன வடிவில் அப்படியே அமைப்பதே அவனது வேலையாகும்."[9] என்று கலைஞனின் தன்மையை எடுத்துக்காட்டுகிறது.

"கலைஞர்கள் பற்றிக் கூற வரும் மா.நவநீதகிருட்டினன் "கலைஞர்கள் கலையையே நம்பியிருப்பவர்கள், குழுவாகப் பயணம் செய்து மன்னனைக் காண வருவர். வறுமையின் பிடியில் சிக்கி உணவும், உடையுமன்றி நலிந்து தோன்றுவர். மன்னன் புகழ்பாடிக் கலைத்திறம் காட்டி மகிழ்வூட்டுவர். பூசலின்றி மன்னன் தந்ததைக் கொண்டு நிறைவு பெறுவர். கொடா மன்னரை வசைமொழியார். கொடுக்கும் மன்னரை அண்டிப்பிழைப்பர். மன்னன் தரும் உணவிலும், உடையிலும் மிக்க மகிழ்ச்சியுற்ற கலைஞர்கள் மன்னனுக்கு அணுக்க உறவினராய் அரண்மனையில் பன்னாள் தங்குவர். இவற்றால் காலம் பொழுதின்றி மன்னனைச் சந்திக்கும் உரிமையும் பெற்றிருந்தனர்."[10] என்று கலைஞரின் தன்மையை தெளிவுற விளக்கிக் கூறுகிறார்.

## 3.6 இலக்கண நூல்கள் கூறும் கலைஞர்

வாய்மொழி மரபாக இருந்த இலக்கிய மரபே பின்பு எழுத்து வடிவப்படுத்தப்பட்டது. இதற்கு கலைஞர்களின் இசை பெரும்பங்கு வகிக்கிறது. "நாகரீகம் வளர்ச்சியுறத் தொடங்கிய காலத்தில் பல்வேறு நாடுகளிலும் முதன் முதல் பாணரும் பாடினியரும், இலக்கிய வளர்ச்சிக்கு மூலகாரணமாக இருந்துள்ளனர். இலக்கியம் தொடங்கிய காலத்தைப் பாணர் - பாடினியர் காலம் என்பர். விறலியரும் பாடினியரும் பாணரைச் சார்ந்து வாழ்த்த தொடங்கியபோது இசையும், பாட்டும், கூத்தும் கலந்தன. இசையும் கூத்தும் கலந்த இலக்கியப் பாட்டாகத் தோன்றியதை உலக மொழிகள் சிலவற்றில் காணலாம். வடமொழியிலும் கவிஞர்களுக்கு முன்னோடியாகச் சூதர் இருந்துள்ளனர். கிரேக்க மொழியில் உள்ள மெல்பே என்பது ஆடலொடு கூடிய பழமையான பாடலாகும். அதைப்பாடிக் காட்டியவர்கள் 'யோட்ஸ்' எனப்பட்டனர். இச்சொல்லே பின்னர்க் கவிஞரைச் குறிப்பதாயிற்று. எழுத்து வடிவமின்றிப் பாணர் வாயையும்,மக்கள் செவியையும் நிலைக்களனாகக் கொண்டு வளர்ந்த இவ்வகை, இலக்கியத்தை மிதவை இலக்கியம் என்பர். பின்னர் இதன் ஒரு பகுதி கவிஞர்களின் கற்பனையால் கவிதையாயின."[11] இதனை இலக்கிய வளர்ச்சிக்குச் சிறந்த ஆதாரமாகக் கொள்ளலாம்.

### 3.6.1 வேதகாலம்

வேதகாலத்தில் 'ஸ்ருதிகள்' என்ற மறைகள் எழுதி வைத்துப் படிக்கப்படவில்லை. 'ஸ்ருதி' என்றால் 'கேட்டல்' என்று பொருள். அவை வாய்மொழியாக ஒப்புவிக்கப்பட்டும் பல்லோரால் கேட்கப்பட்டும் வந்ததை திரு எம்.வின்டர்சு விளக்குகிறார்."[12] வாய்மொழி மரபாக கலை அமைந்தமையை உணர்த்துகிறது.

### 3.6.2 வள்ளல் பாட்டு

"வாய்மொழியாக இருந்த பாட்டே பிற்காலத்தில் இலக்கிய வடிவமாயிற்று என்பதற்கு மலையாளத்தில் உள்ள குஞ்சன் நம்பியாரின் வள்ளல் பாட்டு

சான்றாகும்.”[13] வாய்மொழிப் பாடல்கள் இலக்கிய வளர்ச்சிக்குப் பெரும் துணை புரிகின்றன. “சங்க இலக்கியம் வாய்மொழிப் பாடல்களின் வளர்ச்சியே ஆதலால் வாய்மொழிப்பாடலின் செல்வாக்கு, அகவல், யாப்பு, மரபு தொடர்பு ஆகியவை சங்கப் பாடல்களில் காணப்படுகின்றன என்று குறிப்பிடுகிறார்.”[14] இதனுடைய சாரங்களை அடிப்படையாக வைத்துப் பார்க்கும் போது இலக்கிய வளர்ச்சிக்கு வாய்மொழிப் பாடல்களே சான்றுகளாக அமைகின்றன. இப்பாடல்களின் வளர்ச்சி முழுமைக்கும் கலைஞர்களே முழு முதற் காரணமாக இருந்துள்ளனர்.

### 3.6.3 தொல்காப்பியம் கூறும் கலைஞர்கள்

கலைஞர்கள் சமூகத்தில் எந்த நிலையில் இருந்தனர் என்பதை தொல்காப்பிய இலக்கண நூல், அரசனிடம் கலைஞன் தாம் பெற்று வந்த பெருவளத்தை , பெறாத கலைஞனுக்கு அறிவுறுத்துவதாக,

**“கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**

**ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்**

**பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்**

**சென்றுப் பயனெதிரச் சொன்ன பக்கமும்”[15]**

கூறுகிறது.

### 3.6.4 பன்னிரு பாட்டியல்

புரலவருடைய நாடு, கொடை, ஊர் முதலியவற்றைப் புகழ்ந்து பொருள் பெற்ற கலைஞன் வறுமையுள்ள கலைஞர்களுக்கு எடுத்துக்கூறி ஆற்றுப்படுத்துவதாகப் பன்னிருபாட்டியல்,

**“புரவலன் பரிசில் கொண்டு மீண்ட**

**இரவலன் வெயில்தெறும் இருங்கா னத்திடை**

**வறுமையுடன் வூஉம் புலவர் பாணர்**

**பொருநர் விறலியர் கூத்தர்க் கண்டு அப்**

**புரவலர் நாடுஊர் பெயர்க்கொடை பராஅய்**

**ஆங்குநீர் செல்களன விடுப்பது ஆற்றுப்படை”**[16]

கலைஞர்களுக்குள் புலவர் முதன்மைப்படுத்தப்பட்டமை இந்நூற்பாவால் விளக்குகிறது.

### 3.6.5 வெண்பாப் பாட்டியல்

கலைஞர்களை அடைமொழி கொடுத்து அழைத்தமையை வெண்பாப் பாட்டியல் புலவரை ஓணபுலவர் என்றும், பாணரை யாழ்ப்பாணர் என்றும், பொருநரை ஒன்றாத சீர்பொருநர் என்றும் குறிப்பிடுகிறது. விறலியைக் குறிப்பிடவில்லை. இதனை

**“ஒன்றாம் அகவலர் ஒண்புலவர் பாழ்ப்பாணர்**

**குன்றாத சீர்பொருநர் கூத்தரை என்றிவரை**

**ஆங்கொருவன் ஆற்றுப்படுத்த பரிசறைந்தால்**

**பாய்காய ஆற்றுப்படை”**[17]

இந்நூற்பாவால் அறியலாம். ஆற்றுப்படுத்துவானைக் கலைஞன் எனச் சுட்டாது, ஆங்கொருவன் எனச் சுட்டுகிறது. கலைஞர்களுக்குள் புலவரையும் சேர்த்துக் குறிப்பிடுவதை அறிய முடிகின்றது.

### 3.6.6 தொன்னூல் விளக்கம்

தொல்காப்பியர் குறிப்பிட்ட கலைஞர்களுள் விறலியை நீக்கிப் புலவரை இணைத்துள்ளார். தொடக்க காலத்தில் கலைஞர்களுக்குள் சேராத புலவர்,

பிற்பகுதியில் கலைஞர்களுக்குள் புலவர் சேர்க்கப்பட்டமையையும், விறலி நீக்கப்பட்டமையையும், நூற்பாவால் விளங்குகிறது.

**"புலவர் பாணர் பொருநர் கூத்தர்**

**பலபுக ழுகவற் பாவொரு பாடலே"[18]**

தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ள விறலி 18 - ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட தொன்னூல் விளக்கத்தில் நீக்கப்பட்டதற்கான காரணத்தை அறிய வேண்டியது அவசியமாகிறது.

### 3.6.7 பிரபந்த தீபிகை

தொல்காப்பியத்தை அடியோற்றியே கலைஞர்களை பற்றிய கருத்து உருவை முன் வைக்கிறது பின்பு வந்த இலக்கண நூல்கள். அதில் பிரபந்த தீபிகை

**" அகவலா**

**லூயர் விறலி பாணர் வுத்தர்**

**பல டிபாருநரிந் நால்வரில் ஒருவர் பரிகதவஜ**

**பரிசிலுக்கு ஏகுவாரைப்**

**பரிசுற்று வரவொர்கள் ஆற்றினிடையே கண்டு"[19]**

விறலி, பாணர், கூத்தர், பொருநர் ஆகியவற்றுள் விறலியை முதன்மைப்படுத்திக் கூறுகிறது.

### 3.7 இலக்கியம் கூறும் கலைஞர்

கலையைத் தம் குடும்பத் தொழிலாகக் கொண்ட மாந்தரையும், அவர்கள் படைக்கும் கலையையும், இலக்கியங்கள் மிகுதியாக எடுத்துக் காட்டுகின்றன. சங்க காலத்தில் வாழ்ந்த கலைஞர்களாகிய "பாணர் , பொருநர், கூத்தர், வயிரியர்,

கோடியர், விறலியர் எனப் பல இசைவாணர்கள் சங்க காலத்தில் இருந்தனர்"[20] என்று சுவாமிநாதன் குறிப்பிடுகிறார்.

சங்க இலக்கியங்களிற் கலைஞர்கள் "கூத்தர், பொருநர், கிணைவன், கிணைமகள், ஆடுமகள், விறலி, பாடினி, கண்ணுளர், வயிரியர், கோடியர் எனப் பல பெயர்களாற் குறிப்பிடப்பட்டுள்ளனர்" இதற்கு சான்றுகளாக சங்க இலக்கியத்தில் கூத்தர் என்னும் சொல்லை,

**"பூம்போது சிதைய வீழ்ந்தென, கூத்தர்**

**ஆடுகளம் கடுக்கும்"**[21]

பூம்பொடி சிதறச் செய்யும். அதனால் அக்குளம் கூத்தாடுபவரின் ஆடுகளம் போலத் தோன்றும் என்ற பாடல் வரிகளால் அறியலாம்.

கூத்தரை மலைபடுகடாம் கண்ணுளர் என்னும் சொல்லால் குறிப்பிடுகிறது. இதனை

**"கலம்பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ"**[22]

அணிகலன்களைப் பெறும் தகுதி வாய்ந்த கலையைக் கண்ணுள் நிறுத்துவோராகியக் கூத்தர். விடியற் காலத்தில் வழக்கமாக வந்து உன்னைப்பாடும் பொருநனைக் கிணைவன் என்ற சொல்லால் உணர்த்துகிறது. இதனை

**"கொன்வரல் வாழ்க்கை நின் கிணைவன் கூறக"**[23]

என்ற வரியில் அறியலாம். வாகை மரத்தின் முற்றிய காய் நெற்றுகள் கூத்தரின் பறைபோல விட்டு விட்டு ஒலிக்கிறது என்று கூறுவதை,

**"புன்னை குறைத்த ஞான்றை வயிரியர்**

**இன்இசை ஆர்ப்பினும் பெரிதே"**[24]

என்ற வரிகளால் உணர முடிகிறது.

### 3.8 சமூக அமைப்பில் கலைஞர்களுக்கான இடம்

சங்க காலத்தில் வாழ்ந்த கலை மக்களை பாணர், பொருநர், கூத்தர், விறலி என்று அழைப்பர் இது குறித்த கருத்தினை பல்வேறு இலக்கண நூல்கள் எடுத்தியம்புகின்றன. “ இலக்கியங்கள் கலை மாந்தர்கள் என்ற வரிசை முறையில் கூத்தரையும், பாணரையும், பொருநரையும் விறலியையும் முதன்மைப்படுத்துகிறது. ஆதலால் இவ்விடத்தில் இந்த நான்கு கலைஞர்களை ஆய்வுக்கு எடுத்துக் கொண்டு சமூக அமைப்பில் அவர்களுக்கான இடத்தை ஆராய்வதன் மூலம் கலைஞர்களின் சமூகப் பொருளாதாரத்தை அறிய உறுதுணை புரியும் என்பதனை மனதிற் கொண்டு ஆராய முற்படுகிறது.

#### 3.8.1 பண்டைத் தமிழ்மக்களுள் பாணர்கள்

நாகரீகம் வளர்ச்சியுறத் தொடங்கிய காலத்திலே பல்வேறு நாடுகளில் முதன் முதலில் பாணரும் - பாடினியரும் இலக்கிய வளர்ச்சிக்கு துணை புரிந்தனர். இக்கால கட்டத்தையே பாணர் - பாடினியர் காலம் என்று குறிப்பிடுகின்றனர். பாணர்கள் கலையுலகப் பறவைகள், பண் இசைத்து, தமிழ் உலகம் முழுவதும் சுற்றித் திரிந்தனர். இத்தகைய பாணர்கள் குறித்து விரிவாக காண்பது ஆய்வுக்கு தேவையான ஒன்று.

##### 3.8.1.1 பாணர் என்னும் சொல் விளக்கம்

“ ‘பண்’ என்னும் சொல்லின் அடியாகப் பிறந்து முதல் நீண்டது தான் ‘பாண’ என்பதாகும். பாண் என்பது பாண்குடி, பாண்சேரி, பாண் கடன் எனப் பல சொற்களின் வேர்ச்சொல்லாகும். பண் இசைப்போர் ‘பாணர்’ எனத் தொழிலாகு பெயராகவோ, பண்பாகு பெயராகவோ அமைந்துள்ளது.”[25]

##### 3.8.1.2 நிகண்டும் திவாகரமும் கூறும் பாணர்

“பாணர்களில் ஆடவரைச் சென்னியர், வயிரியர், சேயிரியர், மதங்கன், இன்னிசைகாரர், பாணரென்ப”[26] என்று பிங்கல நிகண்டு குறிப்பிடுகிறது.

“பாணர்களில் பெண்டிரை பாடினி, விறலி, பாட்டிமதங்கி, பாடல் மகடூஉ, பாண் மகளாகும்”[27] எனத் திவாகரம் கூறுகின்றது.

### 3.8.1.3. பாணர் பிரிவுகள்

பாணனை, யாழ்ப்பாணர், இசைப்பாணர், மண்டைப்பாணர் எனப் பிற்காலத்தில் பிரிக்கப்பட்டனர்”[28] என்று டாக்டர். இராசமாணிக்கனார் கூறுகிறார். “இசைப்பாணர் என்பார் இசைபாடுவோர். அதாவது வாய்ப்பாட்டுக்காரர். யாழ்ப்பாணர் என்பார் யாழ் வாசிப்போர் ஆவர். மண்டைப்பாணர் ‘மண்டை’ என்னும் உண்கலம் உடையோர் என்பார் நச்சினார்க்கினியர்.”[29] மண்டைப்பாணர் குறித்து இருவேறு கருத்து நிலவுகின்றது.

#### 3.8.1.3.1.பொருநர்

பொருநரை என்று வகையாகப் பிரிப்பர். “ஏர்களம் பாடுநர், போர்களம் பாடுநர், பரணி பாடுநர் என அவர்கள் பலராம்”[30] என்று கா.சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார்.

“பொருநரில் ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோர் எனப் பலர் இருந்தனர்”[31] என்று சுவாமிநாதன் குறிப்பிடுகிறார். இவ்விருவரும் பொருநர் குறித்த ஒருமித்தக் கருத்தை வெளிப்படுத்தியுள்ளனர்.

#### 3.8.1.3.2.கூத்தர்

“முழவும் பலவகை வாத்தியங்களையும் இசைத்து ஆடிப்பாடினர். இவர்களுக்குச் சாதிவரையரை இல்லை என்பார் நச்சினார்க்கினியர்” என்று தா.சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார்.

#### 3.8.1.2.3.விறலி

ஆடல் பாடல்களில் சிறந்த கலைஞர்கள் இவர்கள். கூத்தர் ,பொருநர் போல் திறமை பெற்ற கலைஞர். போர்ப் பாடல்கள் பாடினர். **அகராதி தரும் பொருள்**

‘விறலி’ என்ற சொல் தமிழறிந்த சான்றோருக்கு பழைமை உடையது. விறலியர் யார் என்ற வினாவுக்குத் தெளிவான விடையை அகராதிகளும் , நிகண்டுகளும், கலைக்களஞ்சியங்களும், விளக்கம் தருகின்றன. மேலை நாட்டு முறைப்படி அகராதிக் கலையை முதன் முதலாகத் தமிழுக்கு அறிமுகம் செய்த வீரமனிமுனிவரின் சதுரகராதி, விறலி என்ற சொல்லுக்கு பொருள் தருகின்றது.

**“விறலி பதினாறு வயதுப் பெண்”**

**“விறலி-பாடன் மகடூஉ, பதினாறு வயதுப்பெண்”**

இதனை, அடியொற்றி சற்று விரித்துக் கழகத் தமிழகராதி,

**“விறலி-பாணப்பெண், உள்ளக்குறிப்புப் புறத்து வெளிப்பட**

**ஆடுபவள், பதினாறு வயதுப்பெண்”**

என்று பொருள் தருகின்றது. இதனையே தமிழ் மொழியகராதியும்,

**“விறலி-பதினாறு வயதுப்பெண், பாடன் மகடூஉ”**

என்று குறிப்பிடுகிறது. இதனையே செந்தமிழ் அகராதி,

**“விறலி - உள்ளக் குறிப்புப் புறத்துப் புலப்பட ஆடுபவள் பாணப்பெண்”**

என்று பொருள் கூறுகின்றது.

**3.8.1.2.3.1.தமிழ் லெக்சிகன் பேரகராதி**:

1. “விறலி - Female dancer who exhibits the various emotions and Sentiments in her dace. உள்ளக்குறிப்புப் புறத்து வெளிப்பட ஆடுபவள்.
2. Women of the ‘pan’Caste -பாண் சாதிப்பெண்.
3. Girl who is 16 years old- பதினாறு வயதுப் பெண்”[16]

என்று பொருள் தருகிறது. 'ஆடல்கலையில் வல்லவர்" என்ற ஒரே பொருளை மட்டுமே குறிப்பிடுகின்றன.

**3.8.1.2.3.2.நிகண்டு தரும் பொருள்:**

எளிதில் பொருள் அறிய முடியாத அறிய சொற்களை மட்டும் தேர்ந்தெடுத்து அவற்றிற்கான பொருளை உரைநடையிலோ அல்லது கவிதை நடையிலோ பொருள் கூறுவது நிகணடுகள் ஆகும். நிகண்டுகள் விறலி என்பதற்கு,

பிங்கல முனிவர் அருளிய பிங்கலந்தை என்னும் பிங்கல நிகண்டு, "விறலி - வெற்றி, வலிமை, வெற்றியும் வலிமையும் விறலியாகும்" என்று பொருள் தருகின்றது. இப்பொருளினைக் கருத்தில் கொண்டால், அரசரின் வெற்றியையும், வலிமையையும் பாடி ஆடுபவள் விறலி என்றுக் கருத இடம் உண்டு.

சிவசுப்பிரமணியக் கவிராயர் இயற்றிய நாமதீப நிகண்டு, விறலியை ஒரு வெண்பாவில் விளக்கமாகப் பொருளுரைக்கின்றது. இதனை,

**"வண்ணமகள் கோலஞ் செய்வாள் மதங்கி**

**பாடினியே பண்விறலி பாடகியும் பாடுவிச்சிகண்ணாம்**

**பதலி ரதையேசதி கற்பாட்டியாட் கொண்ட**

**வதி பெண்ணாச்சி நாயன்"**

என்ற சூத்திரம்,

**"கோலஞ்செய்வாள்பெயர்-வண்ணமகள்**
**பாடுவிச்சி-மதங்கி, பாடினி, விறலி, பாடகி,பாடுவிச்சி**

**பதிவிரதைபெயர்-பதிவிரதை, சதி, கற்பாட்டி**

**ஆட்கொண்ட பெண்பெயர்-நாச்சி**

**ஆட்கொண்ட ஆண்பெயர் – நாயன"**

என்னும் பொருளின் அடிப்படையில் விறலி என்பவள் வண்ணம் கொண்டு அழகுக் கோலம் புனையும் கலையிலும் வல்லவள் எனக் கருதலாம். விறலியை மதங்கி ஆடல் வல்ல நாட்டியக்காரி, பாடுவிச்சி, பாடினி என்ற பல்வேறு பொருளிலேயே குறிப்பிடுகின்றனர்.

**3.8.1.2.3.3. அபிதான சிந்தாமணி தரும் பொருள்:**

அபிதான சிந்தாமணி "எண்வகைச் சுவையும், மனத்தின் கண்பட்ட குறிப்புகளும் புறத்துப் போந்து புலப்பட ஆடுதல் விறலாதலின் அதனையாடுபவன் விறலி எனப்பட்டாள்" என்று பொருள் தருகின்றது.

**3.8.1.2.3.4. அபிதான மணிமாலை தரும் பொருள்:**

விறலி என்னும் சொல்லுக்கு,

**"பாடுவாள் விறலி பாண்மகள் மதங்கி**

**பாட்டி பாடினி பாடன் மகடூஉ**

**இரட்டைப் பாடுவிச்சி என்றிசைப் பரே"**

விளக்கம் தருகிறது. அபிதான மணிமாலை விறலியரைப் பாடவல்ல கலைஞராக மட்டும் கருதியது எனத் தெரிகிறது. இரட்டைப் பாடுவிச்சி எனக் கூறப்பெறும் விறலியர் இருவராக இணைந்து பாடும் கலையில் வல்லவர் என்பது அபிதான மணிமாலை குறிப்பிடுகின்றது.

**3.8.1.2.3.5.கலைக்களஞ்சியம் தரும் பொருள்**

" விறலி என்பவள் எண்வகைச் சுவையும் மனத்தின் கண்பட்ட குறிப்புகளில் புறத்துப் போந்து புலம்பட ஆடுகின்றவள். இவ்வாறு ஆடுவது விறலாகலின் விறல்பட ஆடுவாள் விறலி எனப்பட்டாள். விறலிக்குச் சாதி வரையரையில்லை என்பவர் நச்சினார்க்கினியர் (தொல் பொருள்-91) பாண் சாதிப் பெண்ணை விறலியென்று பிங்கலந்தை என்னும் நிகண்டு கூறும். மதுரைக்

காஞ்சியில் பாணர் வருக பாட்டியர் வருக என்னுமிடத்துப் பாட்டியர் என்னுஞ் சொற்குப் பாணிச்சியர் என நச்சினார்க்கினியர் கூறுவர். பாணர் பாடுவோரும், விறலியர் ஆடுவோருமாக இருத்தலின் பாட்டியர் என்பவரே பாணரிற் பெண்பாலராயிருத்தல் வேண்டும். எனினும் பாணரும் கூத்தரும், பொருநரும், விறலியரும், பாடுவோரும், ஆடுவோருமாக அக்கலைகளிலே வல்லவராகத் தமிழகத்திலிருந்தனரென்றும், அவர்கள் தமிழக முடியுடைவேந்தர் மூவேந்தரையும் குறுநிலமன்னரையும் செல்வரையும் கண்டு ஆடிப்பாடிப் பரிசில் பெற்று வாழ்ந்தனரென்றும் தமிழ் நூல்களிலிருந்து தெரிகிறது.” புரவலரை நாடிப் பரிசில் பெறும் இரவலராகவும் விளங்கினர் என்று அறியமுடிகிறது.

### 3.9 கலைஞரும் வறுமையும்

கலைஞர்களாக கருதப்படும் கூத்தர், பொருநர், பாணர், விறலி ஆகியோர் இலக்கியத் தோற்றத்திற்கு முன்பே வாய்மொழி மரபாக தோன்றிய பாடல்களில் சிறப்புப் பெற்றிருந்தனர். இவர்கள் தனித்தனியாகக் குறிப்பிடப்பட்டாலும் பொதுத் தன்மையோடு காணப்படுகிறார்கள். ஆகையால் இவர்களது சமூகப் பொருளாதாரப் பின்னணியை வைத்துப் பார்ப்பதற்கு பொதுவானக் கூறுகளே துணைபுரிகின்றன. குழுவாக வாழ்ந்தமையால் பிரித்துப் பார்த்து ஆராய்தல் அவசியம் இல்லாத ஒன்றாகக் கருதலாம். கலைஞர்கள் செல்வ செழிப்போடு இல்லாமல் வறுமையோடு வாழ்ந்தனர் என்பதற்கான காரணங்களைக் குறிப்பிடும் நவநீதக் கிருட்டிணன்,

“கலைஞர்கட்டுக் கலை மட்டுமே தொழிலாக இருந்தது. பொருளைப் பேணி வைத்துக் கொள்ளும் தன்மை கலைஞர்களிடம் இல்லை. கிடைக்கும் பொருளைத் தாம் மட்டும் நுகர விரும்பும், சுயநலமும் அவர்களிடம் இல்லை. துளைக் கருவி இயக்குவோர், பல்லியம் இயக்குவோர் முதலாகிய சுற்றம் அனைத்தையும் தாமே தாங்க வேண்டிய பொறுப்புடையோர் கலைஞர்கள். கலைஞர்கள் எங்கும் எவரிடமும் இரந்ததாகக் குறிப்பில்லை. இதனால் அவர்கள் தன்மானத்தோடு வாழ முனைந்தவர்கள் என்பது புலனாகும்.”[32] என்று குறிப்பிடுகிறார். கலைஞர்கள் வறுமை மிகுதியொடு வாழ்ந்தனர் என்பதை சங்க இலக்கியங்கள் சான்று பகர்கின்றன.

### 3.9.1 புரவலா் இன்மையின் பசியே

பாணன் யாழோடும், பசியோடும், வறுமையொடும் இருந்தமையை,

**“கையது, கடன்நிறை யாழே மெய்யது**

**புரவலா் இன்மையின் பசியெ, அரையது**

**வேற்று இழை நுழைந்த வெந்தனை சிதாஅர்**

**ஓம்பி உடுத்த டயவல் பாண”**[33]

பாணன் உதவ யாரும் இல்லாமல் பசியால் இருந்ததை கையில் இசைக் கடமையைச் செய்யும் யாழ். உடலில் உதவுவாா் இல்லாமையால், பசி இடுப்பில் தைத்ததால் வெறு நூல் புகுந்த வோ்வையால் நனைந்த கிழிந்த ஆடை. அதனைப் பாதுகாத்து உடுத்த வறுமையுடைய பாணனே! என்று பாணனின் பசி வறுமையையும், ஆடை வறுமையையும் எடுத்துக் காட்டுகிறது இப்பாடல் வரிகள்.

### 3.9.2 கடும்பசி இரவல்

மன்னனை காண்பதற்கு முன்னே பாணன் தன் சுற்றமொடு பசியொடு திரிந்தமையை,

**“காரென் ஒக்கல், கடும்பசி இரவல**

**வெண்வெல் அண்ணற் காணா ஊங்கே”**[34]

வறுமையான சுற்றத்தையும், கடுமையான பசியையும் உடைய இரவலனே வெயிலிலும் வேலையுடைய வேந்தனைக் காணும் முன்பு இருந்த வறுமையை இப்பாடல் வரிகள் எடுத்துக் காட்டுகின்றன.

### 3.9.3 ஓல்குபசி உழந்த ஒடுங்கு நண்

பாணன் தன் சுற்றத்தோடும், வறுமையோடும் இருந்த செய்தியை

“ **ஒல்குபசியுழந்த வொடுங்கு நுண் மருங்குல்**

**வளைக்கைக் கிணைமகள் வள்ளுகிர்க் குறைக்க**

**குப்பை வேளை யுப்பிலி வெந்ததை**

**மடவோர் காட்சி நாணிக் கடையடைத்**

**திரும்பே ரொக்கலொ டொருங்குடன் மிசையு**

**மழிபசி வருத்தம் வீடப் பொழிகவுட்**

**டறுகட் பூட்கைத் தயங்குமணி மருங்கிற்**

**சிறுகண் யானையோடு பெருந்தே ரெய்தி**

**யாமவ ணின்றும் வருது நீயிரு** ”[35]

பசியால் வருந்தும் குடும்பம். பசித்துன்பத்தால் துன்புற்ற மெலிந்த இடையுடையளானாள் இணைமகள். கையில் வளையல் அணிந்திருந்தாள். கூரிய நகத்தால் குப்பையில் முளைத்திருந்த வேளைக் கீரையை உப்பில்லாமல், வெந்ததைப் பிறர் பார்த்துவிடின் புறங்கூறி நகைப்பார்களே என்று முன்வாயில் கதவை அடைத்து, தம் கரிய பெரிய சுற்றத்துடன் உண்கிறாள். பசியின் துன்பம் நீங்க கன்னத்திலிருந்து மதம் பொழிகின்ற ஆற்றலுடைய அசைகின்ற மணியையுடைய சிறுகண் யானையும், பெரிய தேரும், எய்தும் அவனிடம் சென்றோம் என்று மன்னனைப் பார்க்க வறுமையோடு சென்றமையை எடுத்து இயம்புகிறார்.

### 3.10 புரவலரை நாடிச் செல்லல்

கலைஞர்கள் தங்களது வறுமையைப் போக்கிக் கொள்வதற்காக புரவலரைச் சென்றனர். உண்ண உணவின்றி, உடுத்த ஆடையின்றி இருந்த கலைஞர் புரவலரை என்பதை சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

### 3.10.1 பழுமரம் தெரும் பறவை

பழுத்த மரத்தைத் தேடி அலையும் பறவையைப் போல நாடோடிகளாக கலைஞர்கள் அலைந்து திரிந்து தமது வாழ்க்கைத் தளத்தை அமைத்துக் கொண்டனர். இதனை

**"பழுமரம் தேரும் பறவை போலக்**

**கல்லென் சுற்றமோடு கால்கிளர்ந்து திரிதரும்**

**புல்லென் யாக்கைப் புலவுவாய்ப் பாண**

**பெருவறங் கூர்ந்த கானங் கல்லெனக்**

**கருவி வானந் துளிபொரிந் தாங்குப்**

**பழம்பசி கூர்ந்தவெம் மிரும்பே ரொக்கலொடு**

**வழங்கத் தவாஅவ் பெருவள னெய்தி**

**வாலுளைப் புரவியொடு வாய்க்களிறு முகந்துகொண"** [36]

பழுத்த மரத்தைத் தேடி அலையும், பறவைகள் போல் அழுகை ஒலியுடைய சுற்றத்தோடு காலால் திரியும் பொலிவற்ற உடலுடன் கற்ற கல்வியை வெறுத்துக் கூறும் பாணனே, மிகுதியாக வறண்ட காட்டில் தீடீரென மழைப் பொழிந்ததைப் போன்ற எங்களின் வறுமைப்பசி நீங்க பெரிய சுற்றத்தோடு அரசனை நாடிச் சென்றோம், என்று இப்பாடல் வரிகளில் குறிப்படப்படுகிறது.

### 3.10.2 நீடுபசி ஓரா அல் வேண்டின்

பொருநனை வறுத்தும் நீண்டதொரு பசித்துன்பத்தைப் போக்கி இன்பமுற மற்றொரு பொருநன் அவனை வழிப்படுத்துவதாக அமைந்த பாடலை ,

**"வாடுபசி யுழந்தநின் னிரும்பே ரொக்கலொடு**

**நீடுபசி யொராஅல் வேண்டி னீடின்**

**றெழுமதி வாழி  யேழின் கிழவ**

**பழுமர முள்ளிய பறவையின் யானுமவ**

**னிழுமென் அம்மை யிடனுடை வரைப்பி"**[37]

மிகுதியாக வருத்துகின்ற, மிகுதியான  பசித்துன்பத்தைப் போக்குவதற்கு ,காலம் நீட்டிக்காமல், உடனே நான் சொல்லுகின்ற இடத்திற்குப் செல்வீராக! ஏழு நரம்புகளை இயக்குகின்ற இசையின் தலைவனே! பழுத்த பழங்களை உடைய மரத்தைத் தேடிச் செல்லும்  பறவைகள் போன்று நானும் கரிகால் பெருவளத்தான் நகரை நோக்கிச் சென்றேன் என்று பொருநன் மற்றொரு பொருநனை ஆற்றுப்படுத்தும் விதமான அமைந்துள்ளது.

### 3.10.3 முதா அரிப் பாண

முதுமையான பாணர் பசித்துன்பத்தைப் போக்கிக் கொள்ள மன்னனைத் தேடிச் செல்லும்  வழியில் பல்வேறு துன்பங்களை அடைந்தனர். மாடுகள் நிறைந்தப் பாதையையும் , மான் கூட்டம் மிக்க மலையையும், காடுகளையும், நீர்நிலைகளையும் கடந்து செல்ல வேண்டி இருந்தமையை,

**"ஆனினம் கலித்த அதர் பல கடந்து,**

**மானினம் கலித்த மலை பின் ஒழிய**

**மீனினம் கலித்த துறை பல நீத்தி**

**உள்ளி வந்த வள் உயிர்ச் சீறியாழ்**

**சிதா அர் உடுக்கை, முதாஅரிப் பாண**

**நீயே பேர் எண்ணலையே: நின் இறை,**

**மாறி வா என மொழியலன்மாதோ,**

**ஒலி இருங் கதுப்பின் ஆயிழை கணவன்**

**கிளிமரீஇய வியன் பனத்து**

**மரன் அணி பெருங் குரல் அனையன் ஆதலின்**

**நின்னை வருதல் அறிந்தனா் யாரொ”[38]**

பசுவின் நிரை மிக்க வழி பலவும் கடந்து வந்து, மான் கூட்டம் மிக்க மலை பின்னே, கரிய மீனினம் தழைத்த துறை பலவற்றையும் நீந்தி, நாஞ்சில் வள்ளுவனை நினைத்து வந்த வள்ளிய ஓசையையுடைய சிறிய பாழையும், கந்தை உடையையும் உடைய மூத்த பாணனே! நீ தான அவன்பால் பிரிவு பெறக் கருதிப் பொகின்றாயாதலின் பெரிய எண்ணத்தை உடையை, நின் தலைவன் இப்போது பொய் பின் ஒரு நாள் பரிசிலுக்கு வாவென்று சொல்லாதவன் , தழைத்த கருங்கூந்தலையுடைய ஆயிழைக்குத் தலைவன் , ஆதலின் நீ அவன்பால் பரிசில் பெற்று வரும் பொது நின்னைப் பாணன் என்று அறிபவா் யாா்? என்று பொருள் தருகிறது இப்பாடல்.

### 3.10.4 பெடைமயில் உருவின், பெருந்தழு பாடினி

காட்டு வழியைக் கடந்து செல்லும் போது பாடினியின் பாதங்களில் கற்றாழைப் பழுத்தாற்போலக் கொப்புளங்கள் உருவாக நடந்து சென்றனா் என்பதை,

**“வாடுந்து நாய் நாவிற் பெருந்தகு சீறடி**

**யரக்குருக் கன்ன செந்நில எனதுங்கலிந்**

**பரற்பகை யழந்த நோயொடு சவணி**

**மரற்பழுத்த டன்ன மறுகுநீா் மொக்கு**

**ணன்பக லந்தி நடையிடை விலங்கலிற்**

**பெடைமயி லுருவிற் பெருந்தகு பாடினி” [39]**

வெப்பத்தால் ஓடி வந்து இளைத்த நாயின் நாக்குப் போன்று இருந்தன கால்கள். சிவந்த நிலத்தில் பரல்கற்கள் அந்தப்பாதங்களை வருந்தியதால் கொப்புளங்கள் நீர் வைத்திருந்தன. அது மரம் பழுத்தது போன்று இருந்தது. நடுப்பகலிலும் மாலையிலும் அவள் பயணம் செய்யாத காரணத்தால், பெண்மயில் போன்ற உருவினை உடையவளாக இருந்தாள் பாடினி என்று விளக்கம் தருகிறது.

### 3.10.5 மரம் மறையாக் கழிமின்

யானை தினைப்புனத்திற்கு வராமலிருக்க குறவர்கள் கவணால் எறியும் கல்லைப் பயன்படுத்துவர். ஆகவே பார்த்து மரங்களில் மறைந்து செல்லுதல் வேண்டும் என்று கலைஞர்களை கலைஞரே ஆற்றுப்படுத்துவதை

**"புலந்துபுனிறு போகிய புனஞ்சூழ் குறவர்**

**உயர்நிலை இதணம் ஏறிக் கைபுடையூஉ**

**அகன்மலை இறும்பில் துவன்றிய யானைப்**

**பகல்நிலை தளர்க்கும் கவண்உமிழ் கடுங்கல்**

**இருவெதிர் ஈர்ங்கழை தத்திக் கல்லெனக்**

**கருவிரல் ஊகம் பார்ப்போடு இரிய**

**உயிர்செகு மரபின் கூற்றத் தன்ன**

**வரும்விசை தவிராது மரம் மறையாக கழிமின்"[40]**

யானைகள் தினைப்புனத்தை அழிப்பதற்காக வருந்தி ஈன்றணிடை தீர்த்த முற்றிய தினைப்புனத்தைக் காத்தற்குச் சூழ்ந்த குறவர், மரங்களின் மேல் நிர்மாணித்த பரண்களில் ஏறிக் கையைக் கொட்டி, அகன்ற மலையிலுள்ள குறுங்காட்டில் நிறைந்த யானைக்கூட்டத்தை, பகல் காலத்திலேயே நிலை தளரச் செய்யும் கவணால் கொடிய கற்கள் கொண்டு எறிவர், பெரிய மூங்கில்

கழைகளில் தத்தித்தி, கருவிரலையுடைய குரங்கள் தம் குட்டியுடன் அஞ்சி ஓடும், அக்கற்கள் உயிரைப் போக்கும் தன்மையான வரும் வேகம் தவிராது வரும், அதனால் மரங்களில் ஒதுங்கி நின்று பார்த்துச் செல்லுங்கள் என்று வழிப்படுத்துகிறது.

### 3.10.6 மைபடு மாமலை

மேகம் கையெட்டும் தூரத்திலுள்ள உயரமான மலையில் தூறல் இருந்து கொண்டே இருக்கும். அத்தகைய மலைச் சாரலில் செல்ல வெண்டுமென்று பாணனை ஆற்றுப்படுத்துவதாக

**“மைபடு மாமலைப் பனுவலிற் பொங்கிக்**

**கைதோய் வன்ன கார்மழைத் தொழுதி**

**தூஉய்ன்ன துவலை துவற்றலிற்**

**றோந் தேறக் கடும்பரிக் கடும்பொடு**

**காஅய்க் கொண்டறும் மியந்தொய் படாமற்**

**கூவலன்ன விடரகம் புகுமி**

**னிருங்க லிகுப்பத் திறுவரை சேராது”[41]**

கரிய நிறமுடைய பெரிய மலையில் பஞ்சு போன்ற மேகங்கள் பொங்கிச் செல்லும், கையால் திவலைகளைத் தூவும், திசைகள் தெரிய முடியாதபடி இருக்கும், கடுமையான செலவினையுடைய உம் சுற்றத்துடன் தோளில் சுமந்து செல்லும் உம் இசைக் கருவிகள் நனையாமல் இருக்க, கிணறு போன்ற மலைக்குகைகளில் புகுந்திருங்கள் என்று வழிப்படுத்துவதாக அமைந்துள்ளது. இவ்வாறு கலைஞர்கள் செல்லும் பாதையில் பல்வெறு இடர்பாடுகள் காணப்பட்டமையை அறிய முடிகின்றது.

### 3.10.7 மராஅத்த வரிநிர்லசைஇ

வெியிலால் வெம்மையுற்ற பரல்கள் வேல் காய்ந்ததைப் போலப் பாதத்தைக் கிழிக்கும் கொடிய காட்டில் செறியாத கடம்ப மர நிழலில் களைப்பாறிப் பரிசில் பெறச் சென்றனர், சிறுபாணன் குடும்பம் என்பதை அறிய

**"யிலுருப் பனைய வாகியை நடந்து**

**வெயிலுருப் பெற்ற வெம்பரல் கிழிப்ப**

**வேனி னன்ற வெம்பத வழிநாட்**

**காலைஞா யிற்றுக் கதிர்கடா வுறுப்பப்**

**பாலை நின்ற பாலை நெடுவழிச்**

**சுரன் முதன் மராஅத்த வரிநிழ லசைஇ"**[42]

வெயில் வெப்பம் ஏறியதால் வெம்மையான பரல்கற்கள் மேல் மெதுவாக நடந்து சென்றாலும் உள்ளங் கால்களைக் கிழிக்கின்றன. அத்தகைய வேனிற்காலம் வந்தது. அதனால் சூரியனின் வெப்பம் , இன்னும் மிகுதியாகி பாலைத்தன்மை நிலைபெற்ற , பாலை நிலத்தில் நீண்ட வழியிலுள்ள கடம்பமரத்தின் கோடு கோடுகளாயிருந்த நிழலில் , சிறுபாணன் குடும்பம் தங்கிய தன்மையை உணர்த்துகிறது.

கலைஞர்கள் பசித்துன்பத்தைப் போக்கிக் கொள்ள நாடோடிகளாக அலைந்து திரிந்தனர் என்பதும், அதன் காரணமாக இடம் விட்டு செல்ல வேண்டிய நிலை ஏற்பட்டது என்பதும், கலைஞர்கள் பல்வேறு இடர்பாடுகளுக்கு உள்ளாகினர் என்பதும், அவர்கள் செல்லும் பாதை கொடியதாக இருந்தமையையும் சங்க இலக்கியப் பாடல்கள் சான்று தருகின்றன.

### 3.11 கலைஞரும் திணைசார் மாந்தரும்

கலைஞர்கள் பசியைப் போக்கிக் கொள்ள இடம் விட்டு இடம் சென்று வாழ்க்கை ஆதாரத்தைத் தேடிக் கொண்டனர். இதற்குத் திணை சார்ந்த மக்கள் பெரும்துணை புரிந்தனர். கலைஞர்களின் பசியைப் போக்கி அவர்களுக்கு உணவு அளித்தமையை சங்க இலக்கியங்கள் மிகுதியாக எடுத்துக் காட்டுகின்றன. ஒவ்வொரு திணை மக்களும் கலைஞர்களை உபசரித்தமையை சங்க இலக்கியங்கள் எடுத்துக்காட்டுகின்றன.

#### 3.11.1 குறிஞ்சித் திணையும் கலைஞர்களும்

குறிஞ்சித் திணை மக்கள் வேட்டையாடச் சென்று கொண்டு வரும் விலங்கின் இறைச்சியை வீடுதோறும் சமைத்து உண்பர். அப்போது கலைஞர்கள் வீடுகளுக்கு சென்றால் அத்தகைய உணவை அவர்களும் பெறலாம். இதனைப் பத்துபாட்டு நூல்கள் பெருவாறாக விளக்குகின்றன.

##### 3.11.1.1 மணச்சூழ் உடும்பு

எயினர் அரணில் நெல்லால் சமைத்த உணவும், நாயால் கவ்விக் கொண்டு வரப்பட்ட உடும்பின் கறியும் கிடைக்கும் என்று கலைஞர்களை ஆற்றுப்படுத்தும் தன்மையை,

> **“கொடுவி லயினக் குறும்பிற் சேப்பிற்**
>
> **களவர் வள ரீந்தின் காழ்கண் டன்ன**
>
> **சுவல்விளை நெல்லின் செவ்விழ்ச் கொன்றி**
>
> **ஞமலி தந்த மனவுச்சூ ழுடும்பின்**
>
> **வரைகால் யாத்தது வயின் தொறும் பெருகுவீர்”[43]**

வாயிலில் இரட்டைக் கதவுகள் திரட்சியிடைய கணைய மரங்களால் இணைக்கப் பெற்றிருந்தன. நீண்ட திண்மையான உயரமான கருமரங்கள் இருந்தன. வளைந்த

வில்லையுடைய எயினர்களின் அரணில் சென்று தங்கினால் மேட்டுநிலத்தில் வளர்ந்த ஈந்தின் விதை போன்ற சிவந்த நெல்லால் சமைத்த சோற்றை, நாயால் கவ்விக் கொணரப்பட்ட உடும்பின் கறியொடு சமைத்துக் கொடுத்தனர் குறிஞ்சி நில மக்கள்.

### 3.11.1.2 பகல்மகிழ் தூங்கும் தூங்கா இருக்கை

வாள் தொழில் புரியும் மறவர், பகைவர் பசுக்களைக் கவர்ந்து அதனைக் கள்ளுக்கு விலையாகக் கொடுத்தனர். அவர்கள் பகலில் மன்றில் பெரிய காளையை அறுத்து தின்றனர். மத்தளம் முழங்க ஆடி மகிழும் அத்தகைய இடத்திற்குச் சென்றால் சிறப்பு மிக்க உணவு கிடைக்கும் என்று கலைஞரை மக்களிடம் ஆற்றுப்படுவதாக

**“விலக்கூட டுணவின் வாட்குடிப் பிறந்த**

**புலிப்போத் தன்ன புல்லணற் காளை**

**சென்னா யன்ன கருவிற் சுற்றமொடு**

**கேளா மன்னர் கடிபுலம் புக்கு**

**நாளா தந்து நறவுநொடை தொலைச்சீ**

**மல்லன் மன்றத்து மதவிடை கெண்டி**

**மடிவாய்த் தண்ணுமை நடுவட் சிலைப்பச்**

**சிலை நவி லெறுத்தோ ளோச்சி வலன்வளையூஉப்”**[44]

மறமுடைய ஆற்றல் வாழ்க்கையை வாழ்ந்த குறிஞ்சி நிலத்தில் அக்குடியில் பிறந்த ஆண், புல் போன்ற குறுந்தாடி உடைய , ஆண்மகன் தான் நினைத்ததை முடிக்கும், வேட்டை நாய் போன்று தன் சொற்கேளாத பகை மன்னரின் காவல் நிலத்தில் புகுந்து பசுக்கூட்டத்தைக் கவர்ந்து வந்து குடித்து, வீட்டில் கள்ளுக்கு விலை கொடுத்து, அக்கள்ளையும் குடித்து வீட்டில் அரிசியால் ஆக்கிய தோப்பிக்

கள்ளையும் பருகி மன்றத்தில் இருக்கும் வலிமை வாய்ந்த ஆட்டுக் கிடாயைக் கொன்று தின்பான். மாட்டுத் தோலால் செய்த மத்தளம் முழங்கத் தன் வலிமையுடைய தோல்களைத் தூக்கி வலப்பக்கமும் இடப்பக்கமும் வளைத்துப் பகற்காலத்தில் ஆடி கொண்டிருப்பான். அத்தகைய இடத்திற்கு செல்லுங்கள் என்று வழிப்படுத்துவதாக அமைந்துள்ளது இப்பாடல்.

### 3.11.1.3 இரும்பெர் ரொக்கலொடு பதம்

திருமண வீடு போல் பல்வேறு உணவைக் கொண்டு காட்சி அளிக்கும் குறிஞ்சி நிலத்தில் கிடைக்கக் கூடிய தேன், கிழங்கு, ஊன், பன்றியின் தசை ஆகியவற்றைக் கடகத்தில் போட்டுத் தந்தத்தில் கட்டித் தோளில் கொணர , அதனை உணவாகப் பெற்று சுற்றமொடு உண்டனர் கலை மக்கள் என்பதை,

**“மணவில் கமழு மாமலைச் சாரற்**

**றேனினர் கிழங்கின் ருனார் வட்டியர்**

**சிறுகட்ட பன்றிப் பழுதுளி போக்கிப்**

**பொருது தொலை யானைக் கோடு சீராத்**

**தூவொரு மலிந்த காய கானவர்**

**செழும்பல் யாணர்ச் சிறுகுடிப் படினே**

**யிரும்பே ரொக்கலொடு பதமிகப் பெறுகுவி**

**ரன்றவ னசைஇ யற்சேர்ந் தல்கிக்**

**கண்றெரி யொள்ளினர் கடும்பொடு மலைந்து**

**சேர்ந்த செயலைச் செப்பம் போகி”**[45]

வளமான புதிய மொட்டு, நெருப்பைப் போன்ற நிறத்துடன் மாமிசத்துண்டு போன்றிருந்தது. அதனை ஊண் என்று கருதியறியாது மென்மையான முதுகினையுடைய பருந்து எடுத்துச் சென்றது. ஊன் இல்லாமையைத் தெரிந்து

அதனை உண்ணாது போட்டு விட்டது. அவ்வாறு சிதரப்பட்ட காந்தள் மொட்டு வேலன் வெறியாடும் களம் போன்றிருந்தது. அதனுடன் மணம் செய்யப் பெற்ற வீடு போன்ற மலைச் சாரலில் தேன், கிழங்கு, தசை இவற்றைக் கொண்ட பெட்டிகளைக் கொண்டிருந்தனர். அக்காட்டிலுள்ள குறிஞ்சி நில மக்களான அக்கானவர் சிறுகண்ணையுடைய பன்றியின் பழுதுடைய தசைகளை நீக்கித் தாம் பொருது வென்ற யானைக் கொம்பைக் காவு மரமாகக் கொண்டு இரு பக்கமும் வட்டிலில் உணவுப் பொருட்களைக் கொண்டு செல்வர். அவ்வாறு உள்ள செழுமையான பல புதுவருவாயையுடைய சிறுகுடிப் பகுதிக்குச் சென்றால் உங்கள் பெரிய சுற்றத்திற்கு உணவை மிகுதியாகப் பெறுகுவீர் என்று கூறுகிறது.

### 3.11.1.4 குருஉக்கண் இறடிப் பொம்மல்

குறிஞ்சித் திணைதோறும் எங்கு சென்றாலும் பல்வேறு வகையாக உணவினைப் பெறலாம் என்பதை சங்க இலக்கியப் பாடல்கள் தெளிவாக எடுத்துக்காட்டுகின்றன. இதற்கு சான்றாக தினைச் சோறு கிடைத்தமையை மலைபடுகடாம் எடுத்துக் காட்டுகிறது.

**“அலங்குகழை நரலு மாரிப் படுகர்ச்**

**சிலம்படைந் திருந்த பாக்க மெய்தி**

**நோனாச் செருவின் வலம்படு நோன்றாண்**

**மான விறல்பொன வயிரிய மெனினே**

**நூம்மில் பொல நில்லாது புக்குக்**

**கிழவிர் போலக் கேளாது கேழீஇச்**

**சேட்புலம் பகல வினிய கூறிப்**

**பருஉக்குறை பொழிந்த நெய்க்கண் வேவையொடு**

**குருஉக்க ணிறடிப் பொம்மல் பெருகுவி”**[46]

சிறுகுடிப் பகுதியினுள் அன்று இளைப்பாறி, இரவிலும் அவர்களுடன் தங்குங்கள். கனலுகின்ற நெருப்புப் போன்ற அசோக மலர்களைக் குடும்பத்தோடு சூடிக் கொண்டு, சிவந்த அசோக மரங்கள் நிற்கும் வழியாகப் போய், அசைகின்ற மூங்கில்கள் ஒலிக்கும் அரிதாக இழியும் வழிகளையுடைய மலைப் பகுதியிலுள்ள சிறூர்களைச் சேருங்கள் அங்கு பகைவரைப் பெறாமல் போரும் போரினையும், வெற்றி பெரும் முயற்சியையும், மானத்தையும் வெற்றியையும் உடைய நன்னது கூத்தரேம் என்று சொல்லுங்கள். உம்முடைய வீடு போன்று வெளியில் நில்லாது உள்ளெ புகுந்து உறவினர்போல அவரைக் கேளாக உறவு கொள்ளுங்கள். தூரத்திலிருந்து வந்த உங்கள் வருத்தம் நீங்க இனிய சொற்களைச் சொல்லுவர். பெரிய திசையில் நெய்யைப் பொழிந்து செய்த பொரியலையும், நிறம் மிக்குத் தோன்றும் தினைச் சோற்றையும் பெருகுவீர் என்று ஆற்றுப்படுத்துகிறது.

### 3.11.1.5 மகமுறை தடுப்ப மனைதொறும் பெறுகுவீர்

மலை உச்சிக்குச் சென்று வேட்டையாடிக் கொண்டு வந்த உடும்பு, மான் இறைச்சியுடன் முள்ளம் பன்றிக்கறியும், மூங்கிலில் முற்றிய கள்ளையும் வழங்கி மகிழ்ந்த செய்தியையும், கலைஞர்கள் உணவு மட்டுமன்றி சந்தனம், அகில் பொன், மணி ஆகியவையையும் பரிசாகப் பெற்றனர் என்பதனை,

**”ஏறித் தருஉ மிலங்குமலைத் தாரமொடு**

**வேய்ப்பெயல் விளையுட் டேக்கட் டேறல்**

**குறைவின்று பருகி நறவு மகழ்ந்து வைகறைப்**

**பழஞ்செருக் குற்றதும் மனந்த நீர**

**வருவி தந்த பழஞ்சிதை வெண்காழ்**

**வருவிசை தவிர்த்த கடமான் கொழுங்குறை**

**முளவுமாத தொலைச்சிய பைந்நிணப் பிளவை**

**பிணவுநாய் முடுக்கிய தடியொடு விரைஇ**

**வெண்புடைக் கொண்ட துய்த்தலைப் பழனி**

**கழைவளர் நெல்லி னரியுலை யழ்த்து**

**வழையமை சாரல் கமழத் துழைஇ**

**நறுமல ரணிந்த நாறிரு முச்சிக்**

**குறமக ளாக்கிய வாலவிழ் வல்சி**

**யகமலி யுவகை யார்வமொ டளைஇ**

**மகமுறை தடுப்ப மனைதோறும் பெருகுவீர்"[47]**

என்று குறிஞ்சி நிலம் சென்றால் நீண்டதொரு பரிசிலையும் உணவினையும் பெறலாம்.

### 3.11.2 முல்லைத் திணையும் கலைஞர்களும்

கலைஞர்கள் நாடோடிகளாக அலைந்து திரிந்து, முல்லைத் திணை மக்களிடம் உணவு பகிர்ந்து உண்ட முறையை எடுத்துக் கூறுகின்றன இப்பகுதி.

#### 3.11.2.1 முரண்டலை கழிந்த பின்றை

முல்லை நில மக்களாகிய இடையர்வசிக்கும் இடத்தைப் பற்றி கூறி, அதன்பிறகு அவ்வூரில் கிடைக்கும் உணவு வகைகளை விளக்கி அங்கு சென்று பயனடைவீர் என்று ஆற்றுப்படுத்துவதாக

**"முரண்டலை கழிந்த பின்றை மறிய**

**குளகரை யாத்த குறுங்காற் குரம்பைச்**

**செற்றை வாயிற் செறிகழிக் கதவிற்**

**கற்றை வேய்ந்த கழீத்தலைச் சாம்பி**

**னதளோன் றுந்சுங் காப்பி னுதள**

**நெடுந்தாம்பு தொடுத்த குறுந்தறி முன்றிற்**

**கோடு முகத் துருவையோடு வெள்ளை சேக்கு**

**மிடுமுள் வேலி யெருப்படு வரைப்பி”**[48]

இப்பாடல் வரிகள் அமைந்துள்ளன.

### 3.11.2.2 பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகு

முல்லை நில மக்களாகிய இடையா் வசிக்கும் ஊா்களில் சிறு சிறுகுடிகள் காணப்பெற்றன. குடில்களின் வாயிலில் கட்டையான கால்களில் ஆட்டிற்குரிய குழைகள் கட்டி இருந்தன. அங்கு ஆட்டுக்குட்டிகள் அவற்றைத் தின்று கொண்டிருந்தன. குட்டியின் கழிவுகள் குப்பைகளாகக் கிடந்தன. குடில் கதவுகள் மூங்கில் கழிகளால் அமைக்கப் பெற்றிருந்தன. உட்பகுதியில் ஆட்டுத்தோல் படுக்கையாக ஆட்டக்காவல் காப்போன் படுத்திருந்தான். நீண்ட கயிறுகளால் கிடாய்கள் கட்டப்பெற்றிருந்தன. வளைந்த முகமுடைய செம்மறி ஆடுகளுடன் வெள்ளாடுகளும் அங்கு இருந்தன. அச்சிறு குடில்களைச் சுற்றி முள்வேலி அமைத்திருந்தன. குடிலைச்சுற்றி ஆடு மாடுகளின் கழிவுகளாகிய எரு மிகுதியாகக் காணப்பெற்றது. அத்தகைய ஊரில் இடையா்கள் வாழ்ந்தனா்.

**“நள் இருள் விடியற் புள்ளெழப் போகிப்**

**புலிக்குரன் மத்த மொலிப்ப வாங்கி**

**யாம்பி வான்முகை யன்ன கூம்பிமுகி**

**முறையை தீந்தயிா் கலக்கி நுரைடிதரிந்து**

**புகா்வாய்க் குழிச் பூஞ்சுமட் டிரீஇ**

**நாண்மோா் மாறு நன்மா மேனிச்**

**சிறுகுழை துயல்மருங் காதிற் பணைத் தோட்**

**குறுநெறிக் கொண்ட கூந்தலாய் மக**

**ளளைவிலை யுணவிற் கிளையுட னருதி**

**நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளா**

**ளெருமை நல்லான் கருநாகு பெறூஉ**

**மடிவாய்க் கோவலர் குடிவயிற் சேப்பி**

**னிருங்கிளை நெண்டின் சிறுபார்ப்பன்ன**

**பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவீர்"**[49]

முல்லைநில இடைக்குலப் பெண் இருள் புலரும் காலையில் பறவைகள் எழுகின்ற காலத்தில் எழுந்த புலிக்குரல் போன்று ஒலிக்கின்ற தயிர் மத்தினை எடுத்துத் தயிர் கடைவர். குடைக்காளான் போன்று தயிர் உறைந்திருக்கும். அதைக் கடைந்து அதிலிருந்து வந்த வெண்ணெயை எடுத்துத் தனியாக வைத்து விட்டு மொரை மட்டும் அதற்குரிய பானையில் எடுத்துக் கொண்டு புள்ளிகளையுடைய அம்மோர்ப்பானையைத் தலையில் மென்மையான கம்மாட்டின் மீது வைத்து விற்கச் செல்வர். காதிர் தாளருவி எனப்படும் சிறு காதணியை அணிந்திருப்பாள். வலிமையான மூங்கில் போன்றத் தோளை உடையவள். கூறிய நெறிப்புடைய கூந்தலையுடையவள். இத்தகைய ஆய்மகள் மோரை விற்றுத் தனக்கு வேண்டிய உணவுப் பொருள்களை வாங்கி வருவாள். அவற்றைத் தம் கிளைகளுடன் உண்பாள். தயிர் கடைந்த வெண்ணெயில் இருந்து பெற்ற நெய்யை விற்றுப் பசும்பொன்னை வாங்க மாட்டாள். எருமை, நல்ல பசு கன்றுகள் இவற்றை வாங்குவாள். சீழ்க்கை அடிக்கும் இடையர்கள் குடிசையில் நீங்கள் சென்று தங்கினால் உங்கள் சுற்றத்தோடு நண்டுகளின் சிறுபார்ப்பினைப் போன்ற சோற்றைப், பாலுடன் நீங்கள் பெறுகுவீர்கள் என்று கலைஞனை ஆற்றுப்படுத்தும் விதமாக நெடும்பாடல் அமைந்துள்ளது.

### 3.11.2.3 பாலும் மிதவையும் பண்ணாது பெறுகு

முல்லைத் திணை மக்களிடம் சென்றால், தமது பசியை நிறைத்து பருகு பாலுடன் சோறும் தருவர் என்பதை மலைபடுகடாம்,

**“வளையான் நீம்பான் மிளைசூழ் கோவலர்**

**வளையியோ ருவப்பத் தருவனர் சொரிதலிற்**

**பலம்பெறு நகையொடு பதிவயிற் நீரந்ததும்**

**புலம் சேணகலப் புதுவி ராகுவீர**

**பகர்விரவு நெல்லின் பலவரி யன்ன**

**தகர்விரவு துருவை வெள்ளையொடு விரைஇக்**

**கல்லென் கடத்திடைக் கடலி னிரைக்கும்**

**பல்யாட்டின் நிரை யெல்லினிர் புகினே**

**பாலு மிதவையும், பண்ணாது பெறுகுவீர”[50]**

விரைந்து ஓடும் நறுமணம் கமழும், முல்லைக் கொடிகளையுடைய முல்லைநிலம் மேய்ச்சலுக்காக வேறு இடங்களுக்குச் சென்ற காளைகளின் இனமாகிய வெண்மையான பசுக்களின் இனிய பாலைக் காவல் சூழ்ந்த இடையரின் வேண்டிர், உம் மனம் மகிழத் தருவர். பரிசில் பயன்பெறும் விருப்போடு உம்முடைய ஊரை விட்டு நீங்கிய உம்முடைய மனம் வருத்தம் நீங்கப் புதுவிருந்தினா் ஆவீா் என்று பசியை ஆற்றிக் கொள்ள விருந்து வழங்கப்பட்டமையை சிறப்புற எடுத்துக் காட்டியுள்ளது இப்பாடல் வரிகள்.

### 3.11.3 மருதத்திணையும் கலைஞர்களும்

மருத நிலமக்கள் செல்வச் செழிப்போடு வாழ்ந்தனர். அப்படிப்பட்ட உழவர் குழந்தைகள் சோற்றை வெறுப்பதாகவும் பசுங்கன்று நிறைந்த வீடாகவும் பழம் பசி அறியாத குடியிருப்பாகவும் கறிப் பொறியல் குறையாது, வீடுகள் தோறும் கிடைக்கப் பெறுவதும், கரும்பாலைச் சாறும் கட்டியும் பெறப்படுவதாக ஒரு கலைஞன் தம் சுற்றமோடு வந்த மற்றொரு கலைஞனை ஆற்றுப்படுத்துவதாக மருத நிலப்பாடல்கள் புலப்படுத்துகின்றன.

### 3.11.3.1 சுவைத்தாள் அலவன் கலவையொடு பெறுகு

எருதுகளையுடைய உழவர் தங்கைகள் உறவுமுறை சொல்லி உபசரித்தனர். உலக்கையால் குற்றிய அரிசிச் சோற்றை , நண்டும், பீர்க்கங்காயும் கலந்த உணவோடு பெற்று மகிழ்ந்தனர் என்பதை,

**" வலம்பட நடக்கும் வலிபுண ரெருத்தி**

**னுரன்கெழு நோன்பகட் குழுவர் தங்கை**

**பிடிக்கை யன்ன பின்னுவீழ் சிறுபுறத்துத்**

**தொடிக்கை மகடூஉ மகமுறை தடுப்ப**

**லிருங்கா முலக்கை யிரும்புமுகந் தேய்த்த**

**வவைப்புமா ணரிசி யமலைவெண் சோறு**

**கலவைத்த ளலவன் கலவைடியாடு பெருகுவீா்"**[51]

வெற்றிப் பெருமிதத்தோடு நடக்கும் வலிமை பொருந்திய எருதுகள் பல இருந்தன. அவ்வெருதுகளைக் கொண்ட ஆற்றலுடைய உழவர் பலர் இருந்தனர். அவ்வுழவரின் தங்கை, பிடிக்கை போன்ற தலைப்பின்னலை யுடையவள். அப்பின்னல் அவள் முதுகை மறைத்திருந்தது. அவள் கையில் வளையல் அணிந்திருந்தாள். அவள் தன் பிள்ளைகளைக் கொண்டு நுதம் போன்றோரைத் தடுத்து வீட்டிற்கு அழைத்து கரிய வயிரம் பாய்ந்த உலக்கைப் தேயக் குற்றிய அரிசியால் அமைந்த வெண் சோற்றை, பிளவுப்பட்ட நண்டு, கலவையுடன் தருவாள். அதை நீங்கள் பெறுவீர் என்று வழிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

### 3.11.3.2 தனைமாண் காடியின் வகைப்பட பெறுகு

அந்தணர் குறையாத பகுதியில் வீட்டில் கோழியும் நாயும் புகா. அங்குப் பார்ப்பனி, சிறந்த உணவை சமைத்தாள். மாதுளையை மிளகுப்பொடி கலந்து

கறவேப்பிலை தூவி, வெண்ணெயில் வேகவைத்த துண்டோடு அச்சோற்றைக் கொடுத்து மாங்காய் ஊறுகாயும் கொடுத்தமையை

**“செழுங்கன் றியாத்த சிறுதாட் பந்தர்ப்**

**பைஞ்செறு மெழுகிய படிவ நன்னகர்**

**மனையுறை கோழ வலம்பொடு ஞமலி துன்னாது**

**வளைக்கை மகடுஉ வயினறித் தட்ட**

**சுடர்க்கடைப் பறவைப் பெயப்படு வத்தஞ்**

**சேதா நறுமோர் வெண்ணையின் மாதுளத்**

**துறுப்புறு பசுங்காய்ப் போழொடு கறிகலந்து**

**கஞ்சக நறுமுறி யளைஇப் பைந்துணர்**

**நெடுமரக் கொக்கி னறுவடி விதிர்ந்த**

**தனைமாண் காடியின் வகைபடப் பெறுகுவீர்”**[52]

அந்தணர் வீட்டு வாயிலில் செழுமையான கன்றுகளைக் கட்டிய சிறு பந்தல் இருந்தது. சாணத்தால் மெழுகிய தெய்வத் தன்மையுடைய அழகான வீடாக இருந்தது. அங்கு ஏனைய சமுதாயத்தினரின் வீட்டில் இருக்கும் கோழி, நாய் போன்றவை இல்லை. வளைந்த வாயையுடைய கிளிகள், அந்தணர்கள் வேதம் ஓதுதலைக் கேட்டு கேட்டுத் தாமும் இவையும் அவற்றைக் கூறின. வேதங்களைப் பாதுகாப்போர் உறைகின்ற இடத்திற்குச் சென்றால் , அங்கு தங்கி வானத்தில் வட பகுதியில் இருக்கும் அருந்ததி மீன் போன்ற கற்புடைய பெண்டிர் இருப்பர். அழகான நெற்றியையும், வளையணிந்த கைகளையும் உடையவர் . அவர்கள் கருடச் சம்பா என்ற நெல்லால் ஆக்கிய சுவையான சோற்றை, சிவந்த பசுவினுடைய பாலில் இருந்து மோர் ஆக்கி அதிலிருந்து வெண்ணெய் எடுத்து, அதில் வதக்கி வெந்த கொம்பட்டி, மாதுளையினுடைய பசுமையான காயை மிளகுப்பொடி கலந்து

கருவேம்பினது இலையைச் சேர்த்து , நீண்ட மாமரத்தில் காய்ந்த பசுமையான காய்களுடனும், வடுக்களுடனும் கலந்து, அதை ஊறுகறியாகக் கொண்டு உண்பதற்குத் தகத் தருவர். அதைப் பெற்று உண்டு பசியை ஆற்றிக் கொள்ள ஆற்றுவதாகக் குறிப்பிடப்படுகிறது.

**3.11.4 நெய்தல் திணையும் கலைஞரும்**

கப்பல்கள் சூழ்ந்த கடற்பகுதியில் பரதவர் வாழ்ந்தனர். அப்பட்டினத்தில் கள் வடித்து சிந்திய நீர் சேறாகியுள்ளது. அதிலும் பலர குட்டிகளையுடைய பன்றியுடன் புணரவிடாமல் நெல்லை இடித்து மாவாகிய உணவைப்போட்டு பலநாளாகக் குழியில் தனியாக நிறுத்திப் பாதுகாத்த ஆண் பன்றியின் கொழுத்த இறைச்சியைக் கள்ளுடன் பெற்றனர். இதனை,

**“வாலுளைப் புரவியொடு வடவளத் தருஉ**

**நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை**

**மாட மொங்கிய மணன்மலி மறுகிற்**

**பரதவர் மலிந்த பல்வேறு தெருவிற்”**[53]

இப்பாடல் வரிகள் உணர்த்துகின்றன. மேலும்,

**“கள்ளடு மகளிர் வள்ள நுடக்கிய**

**வார்ந்துரு சின்னீர் வழிந்த குழம்பி**

**னீர்ஞ்செ றாடிய விரும்பல் குட்டிப்**

**பன்மயிர்ப் பிணடிவாடு பாயம் போகாது**

**நென்மா வல்சி தீற்றிப் பன்னாட்**

**குழிநிறுத் தோம்பிய குறுந்த லோற்றைக்**

**கொழுநிணத் தடியாடு கூர்நாறப் பெறுகுவீர்”**[54]

என்று வழிப்படுத்துவதாகப் பெரும்பாணாற்றுப் பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

### 3.11.4.2 வறல் சூட்டின் வயின் வயின் பெறுகு

உலர்ந்த கழல் மீன் சூட்டைத் தேறலொடு தன்னை நாடி வந்த கலைஞர்களுக்கு கொடுக்கப் பெற்றமையை,

**"பனீநீர்ப் படுவிற் பட்டினம் படரி**

**ணேங்குநிலை யொட்டிகந் துயின்மடிந் தன்ன**

**வீங்குதிரை கொணர்ந்த விரைமர விறகிற்**

**கரும்புகைச் செந்தீ மாட்டிப் பெருந்தோண்**

**மதியெக் கறுஉ மாசறு திருமுகத்து**

**நுதிவெ ணோக்கி னுளைமக ளரித்த**

**பளம்படு தேறல் பரதவர் மடுப்பக்**

**கிளைமல்ப் படப்பைக் கிடங்கிற் கோமான்**

**றளையவிழ் தெரியற் நகையோற் பாடி**

**யறற் குழற் பாணி தூங்கி யவரொடு**

**வறற் சூழ்ற் சூட்டின் வயின் வயிற் பெறுகுவீா"**[55]

எயிற் பட்டினத்திற்கு நீங்கள் சென்றால், உயர்ந்த ஒட்டகங்கள் உறக்கத்தில் கிடந்தலைப் போன்ற திரைகளால் அடித்துக் கொண்டு தள்ளப்பெற்ற அகில் விறகுக் குவியல், அவ்வகில் விறகால் தீ மூட்டிக் கரும்புகையோடு செந்தீ பரக்கக் காய்ச்சிய பழையதாகிய களிப்பைத் தருகின்ற தேறல். அக்கள் தெளிவைத் தயாரித்த நுளைமகள் பெரிய தோளினையும், மதியே ஏக்கங் கொள்ளும் முகத்தினையும், கூர்மையான வேல்முனையின் நோக்கையும், உடையவள் அத்தேறலைப் பரதவர் உங்களுக்குத் தருவர். கொத்தாக மலர்கின்ற

தோட்டங்களைக் கொண்ட கிடங்கில் என்ற, ஊரின் தலைவன் அரும்பு நெகிழ்ந்த மலர்களாலான மாலையை அணிந்துள்ள தகுதியுடையவனாகிய நல்லியக் கோடனைப் பாடி, தாள அறுதியை உடைய குழலோசையின் தாளத்திற் கேற்ப ஆடிய, மகளிருடன் நீங்கள் உலர்ந்த குழல் மீன் சூட்டினை, மனைதோறும் மனைதோறும் பெறுகுவீர் என்று வழிகாட்டும் பாணன் கூறினான். இவ்வாறு பரதவ மக்களிடம் சென்றால், இவ்வகையான உணவுகள் கிடைக்கும் என்று பாணனின் பசியை போக்குவதாக அமைந்துள்ளது.

### 3.11.5 பாலைத்திணையும் கலைஞரும்

பாலை நில மக்கள் வழிப்பறி தொழிலில் ஈடுபட்டிருந்தாலும் தம்மை நாடி வந்த கலைஞர்களுக்கு உணவளித்து அவர்களது பசி வறுமையைப் போக்கினர்.

### 3.11.4.1 பைதீர் கடும்பொடு பதம்மிகப் பெறுகுடி

காட்டில் ஈந்தின் ஓலை வேய்ந்த குடிசை, அங்குள்ள பெண்கள் பாறையால் கரம்பை நிலத்தைத் தோண்டி எறும்பு சேர்த்த புல்லரிசியை எடுத்தனர். நிலவுரலில் இட்டுக்குற்றி, கிணற்று நீரில், ஒறுவாய்ப் போன பானையில் களையாமல் உலையேற்றினர். அச்சோற்றோடு உப்புக் கண்டமும், அங்கு சென்றனர். தெய்வத்திற்குப் படையல்போடுவது போலத் தேக்கலையில் அவர்கள் கைஞர்களுக்கு உணவளித்தனர். இதனை,

**“பார்வை யாத்த பறைதாள் விளவி**

**னீழன் முன்றி லவுரற் பெய்து**

**குறுங்கா முலக்கை யோச்சி டுெங்கிணற்று**

**வல்லூற் நுவரி தோண்டித் தொல்லை**

**முரவுவாய்க் குழிசி முரியடுப் பேற்றி**

**வாரா தட்ட வாடூன் புழுக்கல்**

**வாடாத் தும்பை வயவர் பெருமக**

**னோடாத் தானை யொண்டொழிற் கழற்காற்**

**செவ்வரை நாடன்னெிய மெனினே**

**தெய்வ மடையிற் றோக்கிலைக் குவைஇதும்**

**பைநீர் கடும்பொடு பதமிகப் பெறுகுவீர்"**[56]

என்று இப்பாடல் வரிகள் விளக்குகின்றன.

### 3.11.4.2 ஆமான் சூட்டின் அமைவரப் பெறுகு

வெப்பம் விளங்கும் குடிலில் எயிற்றியர் சமைத்த புளிக்கறியை வெந்த சோற்றுடன் காட்டுப் பசுவின் இறைச்சியுடன் பெற்றனர் கலைஞர்கள் என்பதை,

**"விறல் வேல் வென்றி வேலூா ரெய்தி**

**னுறுவெயிற் குலைஇய விருப்பவீர் குரம்பை**

**யெயிற்றிய ரட்ட வின்புளி வெஞ்சோறு**

**தேமா மேனிச் சில்வளை யாயமொ**

**டாமான் ஆட்டி னமைவரப் பெறுகுவீர்"**[57]

மிகுந்த வெயில் வருத்த அதற்காக உள்ளுறைவோர் பெண்டிர், தேமாந்தளிர் போன்ற மேனியர், சில வளையல்களை அணிந்திருந்தனர். அவர்கள் சமைத்த இனிய தித்திப்பான புளிக்கறியிட்ட சுடு சோற்றை ஆமான் ஆட்டிறைச்சியோடு நும் பசி ஆறப் பெறுகுவீர்! என்று பாணன் மற்றொரு பாணனை வழி செல்லும் போது வழிப்படுத்துவதாக அமைகின்றது இப்பாடல்.

திணைச் சமூக மக்களால் கஞைர்கள் வரவேற்கப் பட்டமையையும், வறுமையில் உணவு கொடுத்து உதவியமையையும் சான்றுகளால் அறிய முடிகின்றன.

### 3.12 அரசு உருவாக்கத்தில் கலைஞர்களின் பங்கு

மனித வாழ்க்கைக்கு அடிப்படையான உணவு, உடை, உறையுள் ஆகியவற்றின் தேவை நிறைவு பெறுவதற்காகவே கலைஞர்கள் கலைத் தொழிலை மேற்கொண்டனர். பொருள் கொடுத்துக் கலையை நுகர்வோர் உலகிற் சிலரே கலையை நுகர்ந்து கலைஞர்களைப் பாராட்டிப் போற்றுதல் செல்வர்க்கு மட்டுமே உரியதானது. ஒரு கலைஞன் தன்னூரிலோ, அண்மை ஊரிலோ உள்ள செல்வர்களை மட்டும் நம்பி வார்ாது புதிய புரவலர்களையும் நாடிச் சென்றனர். அத்தகைய கலைஞர்கள் பசியைப் போக்குவதற்கும், வாழ்க்கைத் தேவையை தற்காலிகமாக நிறைவேற்றிக் கொள்வதற்கும், சீறூர் மன்னர்களையும் அரசர்களையும் நாடிச் சென்றனர் என்பதை தெளிவாக அறிய முடிகின்றது. இது கலைஞர்களின் வாழ்க்கை ஆதாரத்தை அறிந்து கொள்ள அவசியமாகின்றது.

#### 3.12.1 சீறூர் மன்னனும் கலைஞரும்

தனியுடைமை அரசு உருவானதற்கு முன்பு கலைஞர்கள் சீறூர் மன்னனை நாடிப் பரிசில் பெறச் சென்றனர். இனக்குழுத் தலைவர்களாக வளர்ந்த சீறூர் மன்னர்கள் பல்வேறு பெயர்களால் கலைஞர்களால் குறிக்கப் பெற்றனர்."இனக்குழு சமுதாயத்தில் தலைவன், கலைஞர்களுடைய ஆட்டப்பாட்டங்களில் தானும் கலந்து கொண்டான். முன் தேர்க்குரவை, பின் தேர்க்குரவை போன்ற வெற்றிச் சிறப்பில் கலந்து ஆடி மகிழ்ந்தான். ஏனெனில் அவன் இன்னும் குழுவின் உறுப்பாகவே இருந்து, குழுவின் கூட்டு ஆடல் பாடல்களில் பங்கு கொண்டான். அவன் மக்களின் கூட்டமைப்பிலிருந்து இன்னும் விலகிவிடவில்லை. ஆனால் உயர் குடியாட்சி முன்னேறி நிலைபெறும் போது அரசனும், இளவரசனும், மக்களும் கண்டு மகிழக் கலைஞர்கள் ஆடிப்பாடும் நிலை தோன்றிற்று"[58] என்று கைலாசபதி 'Tamil Herotic Poetry' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு கலைஞர்களுக்கும் இனக் குழுத் தலைவனுக்குமான தொடர்பு விளங்குகிறது.

### 3.12.1.1 சீறூர் மன்னனின் பகிர்ந்துண்ணும் பண்பு

சீறூர் மன்னன் இனக்குழு மக்கள் தலைவன். ஆதலால் அவர் மக்களிடமிருந்து தம்மைப் பிரித்துக் கொள்வதில்லை. அதுபோலவே கலைஞர்களையும் பேதமின்றி ஒன்றாக அமர்த்திக் கொண்டு உண்டனர். இதற்கு புறநானூற்றுப் பாடல்கள் சான்றுகள் தருகின்றன.

**"உழாஅது வித்திய பருஉக் குரற் சிறு தினை**

**முந்து விளை யாணர் நாள் புதிது உண்மார்,**

**மரை ஆன் கறந்த நுரை கொள் தீம் பால்**

**மான் தடி பழுக்கிய புலவு நாறு குழிசி**

**வான் கேழ் இரும் புடை கழாஅது, எற்றி,**

**சாந்த விறகின் உவித்த புன்கம்**

**கூதளம் கவினிய குலிவி முன்றில்,**

**செழுங் கோள் வாழை அகல் இலைப்பகுக்கும்"**[59]

குறவர் நல்ல நாள் பார்த்து உழாமலே தினையை விதைத்தனர். பரிய தொகையுடைய சிறுதினை முற்பட விளைந்தது. புதுவருவாயாகிய தினைக் கதிரை நல்ல நாளில் புதிதுண்ண வேண்டி, மானிறைச்சி சமைத்த புலால் நாறும் பனையைக் கழுவாதே, மடியாவைக் கறந்த நுரை கொண்ட இனிய பாலை உலை நீராக வார்த்து ஏற்றி, சந்தன விறகால் எரியூட்டித் தினையைச் சமைத்தனர். கூதாளியால் அழுகுபெற்ற மலை மல்லிகை நாறும் முற்றத்திடத்து, வளவிய குலைகளையுடைய வாழையின் இலையிலே, பலருடனும் பகுத்துண்ணுவர் என்று சீறூர் மன்னனின் பகுத்துண்ணும் பண்பை அறிவுறுத்துகிறது இப்பாடல் வரிகள்.

### 3.12.1.2 நளி மலை நாடன் நள்ளி

கடையேழு வள்ளல்களுள் ஒருவனான நள்ளி, வேட்டையாடிய விலங்கைத் தானே சமைத்துக் காட்டில் எதிர்ப்பட்ட கலைஞர்க்கு அளித்து , அவர்கள் பசியைப் போக்கியதைப் ,

**"கான் அதர் மயங்கிய இளையர் வல்லே**

**தாம் வந்து எய்தா அளவை, ஒய்யெனத்**

**தான் நெலி தீயின் விரைவனன் சுட்டு, நின்**

**இரும் பெர் ஒக்கலொடு தின்ம், எனத் தருதலின்**

**அமிர்தின் மிசைந்து, காய்ப்பசி நீங்கி"**[60]

காட்டு வழியில் வழிமயங்கிய இளையர், விரைய வந்து சேருவதற்கு முன்னே, நெய் இழுது போன்ற வெள்ளிய நிணமுடைய இறைச்சியை விரைவாகத் தீக்கடைக் கோலால் தானே மூட்டிய தீயில் சுட்டனன். சுட்ட அவ்விறைச்சியை நின் மிகப் பெரிய சுற்றத்துடன் தின்னுங்கள் என்று தந்தனன் என்று பெருமலை நாட்டுக்குரிய நள்ளி , அவன் என நாடும் பெயரும் , பிறர் வழியின்கண் சொல்லக் கேட்டோம் என்பதைத் தெளிவாக உணர்த்துகிறது.

### 3.12.1.3 நீசில மொழியா அளவை

சீறூர் மன்னனின் சிறப்புப் பாடும் கலைஞர்கள், அவர்களை பற்றிக் கூறும் போது,

**"முதுவோர்க்கு முகிர்த்த கையினை யெனவு**

**மிளையோர்க்கு மலர்ந்த மார்பினை யெனவு**

**மேரோர்க்கு நிழன்ற கோலினை யெனவுந்**

**தேரோர்க்  கழ்ந்த வேலினை யெனவுந்**

**நீசில மொழியா வளவை”[61]**

அரசர், ஆசிரியன், தந்தை, தாய் தன்முன் ஆகிய முதியோர்க்குப் பல காலூங் குவித்த கையையுடையவன் என்றும், வீரர் எறிதற்கும் மகளிர்க்கும் மலர்ந்த மார்பினன் என்றும், ஏரினையுடைய உழவர்க்கு நிழல் தருகின்ற செங்கோலினையுடையவன் என்றும், அவனை பேசுவதற்கு முடியாத நீண்ட நெடிய புகழுடையவன் என்று மன்னனைப் புகழ்கின்றனர்.

### 3.12.1.4 பொற் கலத்தில் விரும்புவன பேணி

நல்லியக்கொடன் என்னும் சிறூர் மன்னன் தம்மை நாடி வரும் பரிசிலரை உணவு உபசரிக்கும் முறையை,

**“கம்புசெநாலித் தன்ன வறுவை யடீஇப்**

**பாம்பு வெகுண் டன்ன தேற னல்கிக்**

**காவெரி யூட்டிய கவர்கனைத் தூணிப்**

**பூவரி கச்சைப் புகழொன் நன்முன்**

**பணிவரை மார்பன் பயந்த நுண்பொருட்**

**பனுவலின் வழாஅப் பல்வே றடிசில**

**வாணிற விசம்பிற் கோண்மீன் சூழ்ந்த**

**விளங்கதிர் ஞாயி றெள்ளுந் தோற்றத்து**

**விளங்குபொற் கலத்தில் விரும்புவன பேணி**

**யான விருப்பிற் றுனின் றூட்டித்”[62]**

குற்றமற்ற மூங்கிலை உரித்தாற் போன்ற மென்மையான , தூய்மையான ஆடையை முதலில் உடுக்கச் செய்வான். இவ்வாறு செய்வது ஒத்த தன்மையை உருவாக்குவதற்கு பாம்பு, சினந்து எழுந்தது போன்ற எழுச்சியைத் தரும் கள்

தெளிவைத் தருவான். காண்டவ வனத்தை எரித்த பிளந்த அம்பையுடைய அம்பாறாத் தூணியையும், பூத்தொழில் விரித்த கச்சையையும் அணிந்த அர்ச்சுனனது முன்னோனாகிய பீமசெனன், இமயமலை போன்ற பரந்து விரிந்த மார்பையுடையவன். அவன் எழுதிய நுண்மையான சமையல் சாத்திரத்தின் அடிப்படையில் அதனின்று வழுவாமல் செய்த பல்வேறு உணவு வகைகளை உண்ணச் செய்வான்.

ஒளி பொருந்திய வானத்தில் கொள் மீன்கள் ஆழ்ந்த, உதய சூரியனை இகழும் தோற்றத்தையுடைய பொன்கலத்தில் நீர் விரும்பும் உணவைக் குறையாத விருப்புடன், தானே நின்று ஊட்டுவான் என்று அவனது சிறப்பினை எடுத்துக் கூறி ஆற்றுப்படுத்துகிறது இப்பாடல்.

### 3.12.1.5 பரிபுலம்பு அலைத்தறும் வருத்தம் வீட

தம்மை நாடி வரும் பரிசீலரை அன்போடு வரவேற்று, அவர்களுடைய மிகுதியான வருத்தம் நீங்க, உபசரிப்பதாக மலைபடுகடாம்,

**“மன்றில் வதியுநர் சேட்புலப் பரிசிலர்**

**வேல்போர்ச் சேஎய்ப் பெருவிற லுள்ளி**

**வந்தோர் மன்ற வளியர் தாமெனக்**

**கண்டோ ரெல்லா மமர்ந்தனிதி னோக்கி**

**விருந்தினிர யவரவ ரெதிரக் கொளக் குறுகிப்**

**பரிபுலம் பலைத்தறும் வருத்தம் வீட”[63]**

பொது அம்பலங்களில் தங்குவோர், தூர இடத்திலிருந்து பரிசில் பெற வந்தோர், போரில் வெற்றியுடைய முருகன் போன்ற நன்னனை நினைத்து வந்தோர், அவர் நம்மால் போற்றத்தக்கோர் எனக் கருதிக் கண்டோர் எல்லாம் அன்புடன் இனிது நோக்கி விருந்தினராகக் கருதி ஏற்றுக் கொள்ள நெருங்கி, உம்முடைய மிகுதியான வருத்தம் நீங்கப் பரிசிலை வழங்குவான் என்று உணர்த்துகிறது.

### 3.12.1.6 கேள் அவன் நிலையே, கெடுகநின் அவலம்

முரசு முழங்கும் படையையுடைய மூவேந்தரை விட உலகில் வசையில்லாப் புகழுடையவனாக குறுநில மன்னன் இளந்திரையனிடம் சென்றால், நின் வறுமை நிலையைப் போக்கி அவனுடைய நிலையை உணர்ந்து வருவாய் என்று ஒரு பாணன் மற்றொரு பாணனை ஆற்றுப்படுத்துவதாக அமைந்துள்ளது. இதனை,

**“இருநிலங் கடந்த திருமறு மாரப்பின்**

**முந்நீர் வணன் பிறங்கடை யந்நீர்த்**

**திரைதரு மரபி னுரவொ னும்பன்**

**மலர்தரை யுலகத்து மன்னுயிர்க் காக்கு**

**மிலங்கு நீர்ப் பரப்பின் வளைமீக் கூறும்**

**வலம்புரி யன்ன வசைநீங்கு சிறப்பி**

**னல்லது கடிந்த வறம்புரி செங்கோற்**

**பல்வேற் றிரையற் படர்குவி ராயிற்**

**கேளவ னிலையே கெடுநின் னவல”**[64]

நீங்களும் பெரிய நிலத்தை வாமன அவதாரத்தில் தன் இரண்டியால் கடந்த, திரு உறைகின்ற மார்பினையுடைய கடல் வண்ணமாகிய திருமால் மரபில் பின் வந்தோறும் அக்கடல் திரையால் கரை சேர்க்கப் பெற்ற வலிமையுடைய குடியில் பிறந்தவன். இந்நிலவுலகத்து நிலைபெற்ற உயிர்களைக் காக்கும் நால்வகை முரசுடைய சேர, சோழ, பாண்டியருள் ஒளி விடுகின்ற கடல் நீரில் தோன்றும் சங்குகளில் சிறந்ததாகிய வலம்புரிச் சங்கு போன்றவன். தீமையை நீக்கி அறம் செலுத்துகின்ற செங்கோலையுடையவள். பலவகையான வேல்படையையுடைய இளந்திரையினை நோக்கிச் செல்வீராயின் கேள், உன் வறுமையால் ஏற்பட்ட துன்பம் ஒழியட்டும் என்று ஆற்றுப்படுத்துவதாக அமைகின்றது.

### 3.12.1.7 சீறூர் மன்னனைப் பாடினை செலினே

முல்லை நிலம் சார்ந்த சிற்றூர். இவ்வூரிலே சென்றால் வரகு, தினை முதலியவற்றை கொடுத்து, அத்தொடு கள்ளும் கொடுத்து உண்ணச் செய்வான் என்று பாணனை ஆற்றுப்படுத்துவதை,

**"புன்புலச் சீறூர், நெல்விளை யாதே**

**வரகும் தினையும் உள்ளவை எல்லாம்**

**இரவல் மாக்களுக்கு ஈயத் தொலைந்தன**

**அமைந்தனனே**

**அன்னன் ஆயினும் பாண நன்றும்**

**வெள்ளத் திடும்பாலுள் உள்ளுறை தொடரியொடு**

**களவுப் புளியன்ன விளை**

**வாடுஊன் கொழுங்குறை**

**கொய்குரல் அரிசியோடு நெய்பெய்து அட்டுத்**

**துடுப்பொடு சிவணிய களிக்கொள் வெண்சோறு**

**தருகுவன் மாதோ**

**தாளிமுதல் நீடிய சிறுநாறு முஞ்ஞை**

**முயல்வந்து கறிக்கும் முன்றில்,**

**சிறூர் மன்னனைப் பாடினை செலனே"**[65]

பொலிவற்ற இலைகளை உடைய, முல்லை நிலம் சார்ந்த சிற்றூர் அது. அங்கு நெல் விளையாது வரகு, தினை ஆகியவற்றை உண்டு வாழ்வர். அவையும் பிறர்க்குக் கொடுத்தலால் அப்போது அங்கில்லை. அதனால் பாணனே

பாத்திரத்தில் வைத்த பாலில் உறையிட அமைந்த தயிரைத் தொடரிப்பழம், களாம்பழம் ஆகியவற்றோடு கலந்து புளிப்பேறிய கள்ளும், வாட்டப்பெற்ற ஊன் துண்டும், அறுக்கப் பெற்ற நெல்லின் அரிசியோடு நெய் கலந்து ஆக்கியத் துடுப்பால் துளாவப் பெற்ற சுவைமிக்க சொற்றோடு உண்டு இனிதாக இருப்பாய். பின்னர் உனக்கு வேண்டுவன தருவேன். தாளி மரத்தின் அடியில் படர்ந்த மணமிக்க முஞ்ஞைக் கொடியை முயல் வந்து தின்னும். முற்றத்தைக் கொண்ட சிற்றூரின் தலைவனை , நீ பாடிச் சென்றால் உனக்கு வேண்டுவன தருவான் என்று பாடுவதாக பாணனின் ஆற்றுப்படுத்தும் தன்மை விளங்குகிறது.

### 3.12.1.8 தொன்மை சுட்டிய வண்மையோனே

தம்மை நாடி வரும் வறியோர்க்கு இல்லை என்று சொல்லாத இயல்புடைய மனம் உடையவன். குறுநில மன்னன் பரம்பரை கொடை வழங்கும் சிறப்புடை ஊர் அது. இவ்விடம் சென்றால் கொடைப்பொருள் கிடைக்கும். இதனை

**"வேந்துடைத் தானை முனைகெட நெரிதர**

**ஏந்துவளர் வலத்தன் ஒருவன் ஆகித்**

**தன் இறந்து வாராமை விலக்கலினி, பெருங்கடற்கு**

**ஆரி அனையன் மாதோ - என்றும்**

**பாடிச் சென்றோர்க்கு அன்றியும், வாரிப்**

**புரவிற்கு ஆற்றாத் சீறூர்த்**

**தொன்மை சுட்டிய வண்மை யொனே"[66]**

தன் வேந்தனின் படையின் முன்பகுதி அறியாமல் இருக்க, பகைப்படையை அழிக்க வாளை ஏந்திய வலிமையாளன் இவன் ஒருவனே என்று நினைக்குமாறு படையைத் தன்னைக் கடந்து வராமல் தடுத்தான். அதனால் அவன் பெரிய கடலுக்குக் கரை போன்றவன் ஆவான். எல்லா நாட்களும் பாடி வந்தவர்க்கு அல்லாமல், காவலுக்கும் வரி கட்டுவதற்கும், இயலாத சிறிய அவ்வூர்க்குப் பரம்பரையாகக்

கொடுக்கும் கொடையாளனும் அவன் ஆவான் என்று அவனுடைய கொடைச் சிறப்பை எடுத்துரைக்கிறது.

### 3.13 கலைஞனும் மன்னனும்

கலைஞர்கள் தமது வறுமையைப் போக்கிக் கொள்வதற்காக மன்னர்களை நாடிச் சென்றனர். அவ்வாறு சென்றபோது அவர்கள் உணவோடு சேர்த்து பொன்னும் பொருளும் பரிசாக அளித்தனர். இதனை சங்க இலக்கியப் பாடல்கள் அதிகமாக காட்டுகின்றன. மன்னனை வேந்தர்கள் என்றும் அழைத்தனர். வளரும் அரசுக்குரியவனை 'பணைகெழு வேந்தர்' என்றும், இருங்கடல் 'தானை வேந்தர்' என்றும், தேர் வல்லவரொடு செல்லும் 'யானை வேந்தன்' என்றும் பல்வேறு பெயர்களில் அழைக்கின்றனர். மன்னனும் வேந்தனும் ஒருவாராகக் கருதப்படுவதை அறிய முடிகின்றது.

#### 3.13.1. இரவலர்க்கு ஈயும் வள்ளியோன்

இரவலர்க்கு இல்லையென்று சொல்லாது கொடுக்கும் தன்மை கொண்ட வேள்பாரியின் பரிசில் சிறப்பை,

**"கார்ப் பெயல் தலைஇய காண்பு இன் காலை**

**களிற்று முக வரியின் பெதறும் வீழ்புப்ப**

**செம் புற்று ஈயலின் இன் அளைப் புளித்து**

**மென் தினை யாணர்த்து, நந்தும் கொல்லொ**

**நிழல் இல் நீள் இடைத் தனி மரம் போல**

**பனை கெழு வேந்தரை இரந்தும்**

**இரவலர்க்கு ஈயும் வள்ளியோன் நாடே"**[67]

நிழலலில்லாத நெடிய வழிக்கண் நின்ற தனிமரத்தை ஒப்ப, முரசுடைய வேந்தரைக் காட்டிலும் , மிகுதியாக இரவலர்க்கு வழங்கும் வண்மையுடைவன் வேள்பாரி.

அவனது நாடு கார்காலத்தில் மழை பெய்ததால், காட்சிக்கு இனிய காலமாயிற்று. யானை முகத்தின்கண் உள்ள புள்ளிபோலத் தெறுழ்மலர் பூத்தது. செம்பன்றியின் ஈரலை இனிய மோரோடு ஆட்டிச் சமைத்த புளிங்கறியை உடைத்து பாரிநாடு. மேலும் சிறு தினையாகிய வரகு புதுவருவாயும் முன்பு கெட்டழிந்தது. இவ்வாறு மன்னன் தோற்றாலும் தம்மை நாடி வரும் இரவலர்க்குக் கொடுக்கும் தன்மையை உடையவன் என மன்னனின் பரிசில் சிறப்பை விளக்குகிறது.

### 3.13.2 நீடுபசி ஒரா அல் வேண்டின்

பசியொடு செல்லும் பொருநனை மற்றொரு பொருநன் ஆற்றுப்படுத்தி கரிகால் பெருவளத்தான் என்னும் மன்னனை நாடிச் சென்றால், உண்ண உணவும், உடுத்த உடையும் கொடுப்பான். உமது பலநாள் பசியைப் போக்குவான் என்று வழிப்படுத்துவதாக,

**“ஆடுபசி யுழந்தநின் னிரும்பே ரொக்கலொடு**

**நீடுபசி பெயராஅல் வேண்டி னீழன்**

**றெழுமதி வாழி யேரின் கிழவ**

**பழுமர முள்ளிய பறவையின் யானுமவ**

**னிழுமன் சும்மை யிடனுரடை வரைப்பி”[68]**

உங்களை வருத்துகின்ற மிகுதியான பசித்துன்பத்தைப் போக்குவதற்குக் காலம் நீட்டிக்காமல், உடனே நான் சொல்லுகின்ற இடத்திற்குச் செல்வீராக’ ஏழு நரம்புகளை இயக்குகின்ற இசையின் தலைவனே’ பழுத்த மரத்தைத் தேடிச் செல்லும் பறவைகள் போன்று நானும் கரிகால் பெருவளத்தான் நகரை நோக்கிச் சென்றேன். போவோர் வருவோர் மிகுதியாக இருப்பதால் எப்போதும் ஒசை உடையதாக இருக்கின்றது, அவனுடைய பெரிய அரண்மனை வாசல் என்று பொருநன் ஆற்றுப்படுத்துவதாக அமைந்துள்ளது.

### 3.13.3 அன்றெ விடுக்கும் அவன் பரிசில்

மலையில் தோன்றிக் கடலை நோக்கிச் செல்லும் ஆறுகளைப் போல கலைஞர் அரசரை நோக்கிச் சென்று பரிசில் பெற்றனர். இதனை,

**"மாடுவன் டிமிரா வழலவிர் தாமரை**

**நிடீரும் பித்தை பொலியச் சூட்டி**

**யுரவுக்கடன் முகந்த பருவ வானத்துப்**

**பகற்பெயற் றுளியின் மின்னுநிமிர்ந் தாங்குப்**

**புனையிருங் கதுப்பகம் பொலியப் பொன்னின்**

**றொடையமை மாலை விறலியர் மலைய**

**நூலோர் புகர்ந்த மாட்சிய மால் கடல்**

**துணைபுணர் தொழில் நால்குடன் பூட்டி**

**யரித்தேர் நல்கீயு மமையான் செருத்தொலைத்**

**தொன்னாத் தெவ்வ ருலைவிடத் தொழித்த**

**விசும்புசெ லிவுளியொடு பசும்படை தரீஇ**

**யன்றே விடுக்குமென் பரிசிலின்"[69]**

இருண்ட வானத்தில் ஒளியையுடைய மதி போன்று, வதைப்போன்ற வண்டுகள் ஒலிக்காத தாமரை வடிவில் அமைந்த பொன் தாமரைப் பூவைப் பாணர்களுக்கு அவர்கள் தலையில் அரசன் சூட்டுவான். பாணனுடன் சென்ற விறலியர்க்குப் பகலில் பொழிகின்ற மழைத்துளிப் போன்ற மின்னலை ஒத்த பொன்னாலாகிய மாலையினைச் சூட்டுவான். குதிரைக்களுக்குரிய இலக்கண நூல்களில் சொல்லப் பெற்றுள்ள சிறந்த வெண்மையான பிடரி மயிரினையுடைய, நான்கு குதிரைகளைப் பூட்டியத் தேரில் அவர்களை ஏற்றி அனுப்புவான். அதனுடன்

போர்க்களத்தில் பகைவர்கள் புறமுதுகைக் காட்டி ஓடச் சென்றபோது பயந்து விட்டுச் சென்ற பொருள்களையும், அவர்களுக்குப் பரிசிலாகத் தருவான். இரவலர்க்கு சென்ற அன்றே உடனே காலம் தாழ்த்தாது பரிசில் தந்து அனுப்பும் சிறப்பு மிக்கவன். அத்தகைய மன்னனிடம் பரிசில் பெற்று வந்தனர் பாணர்.

### 3.12.5 நாள் மகிழ் இருக்கை

காலம் தப்பாது பெய்யும் மழையைப் போன்று, தம்மை நாடி வரும் வறியொர்க்கு இல்லையென்று கூறாமல் கொடுத்துக் கொண்டெ இருப்பான் மன்னன் என்று கலைஞன் கூறுவதாக,

**"தொலையா நல்லிசை யுலகமொடு நிற்பப்**
**பலர்புறங் கண்டவ ரருங்கலந் தரிஇப்**
**புலவோர்க்குச் சுரக்குமவ னீகை மாரியு**
**மகழுநர்ப் பிணிக்கு மாற்றலும் புகுநர்க்**
**கரசு முழுது கொடுப்பினு மமரா நோக்கமொடு**
**தூத்துளை தொழிந்த பொய்யா வானின்**
**வீயாது சுரக்குமவ னாண்மகி ழிருக்கை"**[70]

கெடாத சிறந்த புகழ் உலகம் நிற்கும் அளவும் நிற்க, அவன் செய்யும் செயல்களும், பகைவர் பலரையும் வென்று அவரிடமுள்ள அரிய அணிகளை எல்லாம் புலவர்க்குத் தரும், அவன் வள்ளல் தன்மையாகிய மழையும், தன்னை இகழ்பவரையும் பிணிக்கும அவனுடைய அறிவாற்றலும், அவனைப் புகழ்வோருக்குத் தான் வென்ற அரசுகள் முழுவதையும் கொடுத்தாலும் அமைதி பெறாத அறிவுடன், தூய துளிகளைப் பொழியும் பொய்யாத வானம் போன்று இடையறாது கொடுத்துக் கொண்டே இருக்கும், அவன் நாள்தோறும் கொடுக்கும் நாள்மகிளிருக்கைமாகிய இருக்கை என்பது புலனாகிறது.

### 3.12.5.1 குட்டுவற் கண்டனம் வரற்கே

அரசரைக் கண்டு தமது கலைத்திறமையை வெளிக்காட்டினால் தம் சுற்றமொடு இனிது உண்டு பசி ஆற்றலாம் என்ற செய்தியை,

**“வளன் அற, நிகர்ந்து வாழுநர் பலர்பட,**

**கருஞ்சினை விறல் வேம்பு அறுத்த**

**பெருஞ்சினக் குட்டுவற் கண்டனம் வரற்கே”[71]**

பேராற்றலையுடைய செங்குட்டுவனைக் காண்பதற்கு, சென்றால் நமக்கு தேவையான உணவினை உண்ணத் தருவான். நாங்கள் செல்கிறோம். பாடல் திறம் மிகுந்த வாழ்க்கையையும், அசையும் மாலையினையும் ஒல்கித் தளரும் இயல்பினையுடைய விறலியர்களே நீங்களும் வாருங்கள். உங்கள் சுற்றம் இனிதாக உண்ணலாம் என்று உணர்த்துகிறது.

### 3.12.5.2 பல்வேல் பொறையன் வல்லனால்

கருப்பந்தொப்பம் நதி கடந்தபின் துணையாகாது . ஆனால் பொறையின் வறுமையை நீக்குவதோடு எஞ்சிய காலத்திலும் காத்து, அணிகலன்களை அன்பாகத் தருவான். அத்தகைய இடத்திற்கு செல் என்று பாடினியை வழிப்படுத்துவதாக,

**“சென்றமோ பாடினி ! நன்கலம் பெறுகுவை**

**சந்தம் பூழிலொடு பொங்குநுரை சுமந்து,**

**தெண்கடல் முன்னிய வெண்தலைச் செம்புனல்**

**ஒய்யும் நீர்பழிக் கரும்பினும்**

**பல்வேல் பொறையன் வல்லனால், அளியே”[72]**

பாடினி! இளஞ்சேரல் இரும்பொறை சந்தனம், அகில் ஆகிய மரக்கட்டைகளோடு பொங்கிப் பெருகி வரும் நுரை சுமந்து, தெளிந்த கடலை நோக்கிச் செல்லும் வெண்மையான அலையுடன் திரியும் சிவந்த நீரினைக் கொண்டதுமான ஆற்று நீரில் அதனைக் கடக்கப் பயன்படுத்தும் வேளக்கரும்பால் ஆகிய தெப்பத்தைக் காட்டிலும் காத்தலில் வல்லவன். நீ அவனிடம் செல்க, சென்றால் நல்ல அணிகலன்களைப் பெறுவாய் என்று வழிப்படுத்துவதாக அமைகிறது இப்பாடல்.

### 3.13.5.3 தொழில்புகல் யானை நல்குவன்

மன்னை நாடிச் சென்றால், கள் பெறலாம் , மகளிர் ஆபரணம் பெறலாம், பாணர்க்கு பொற் பூ சூடுவர் தொழில் பல புரியும் யானையைப் பெறலாம். இவ்வாறாகப் பல பொருட்களை பெற்று மகிழலாம் என்பதை,

**"மென் இயல் களிர் எழில்நலம் சிறப்ப**

**பாணர் பைம்பூ மலைய இளையர்**

**இன்களி வழாஅ மென்சொல் அமர்ந்து**

**நெஞ்சுமலி உவகையர் வியன்களம் வாழ்த்தற்**

**தோட்டி நீவாது தொழ சேர்பு நின்று**

**பாகர் ஏவலின், ஒண்டிபாறி, பிசிரக்**

**காடுதலைக் கொண்ட நாடுகாண் அவிர்சுடர்**

**அழல்விடுபு மரீஇய மைந்தின்**

**தொழில்புகல் யாணை நல்குவன் பலவே"**[73]

வீரர்கள் மெல்லிய சொற்களைக் கூறி மகிழ்ச்சியுடன் போர்க்களம் வாழ்த்தவும் மென்மையான பெண்கள் மலர்ந்த வேங்கை மரம்போல் அணிகளால் அழகுமிகுந்து விளங்கவும், பாணர்கள் பொற்றாமரையினைச் சூடி விளங்கவும்,

உங்களுக்கும் பல யானைகளையளிப்பான். அங்குசத்தைச் செலுத்தாமல் பூனை அணிந்து தீப்பொறி பறக்க நாடு முழுவதும் காணும்படி ஒளிவீசி தீச்சுடர் போலச் சினத்தினை வெளிப்படுத்தும் யானைகள், பாகர் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்கும் பல யானைகளை உங்களுக்குத் தருவான். அதனால் சில வளையல்களை அணிந்த விறலியே நீ அவனிடம் செல்வாயாக என்று எடுத்துக்கூறுகிறது.

### 3.12.5.4 துவ்வா நறவின் சாய் இனத் தானே

பாண் மகளே! மன்னனிடம் சென்றால் தடைஇன்றி குறையாது பொருட்களை கொடுத்து வர்ங்குவான் என்பதை,

**“தொடைமடி களைந்த சிலையுடை மறவர்**

**பொங்குபிசிர்ப் புணரி மங்குலொடு மயங்கி,**

**வரும்கடல் ஊதையின் பனிக்கும்**

**துவ்வா நறவின் சாய் இனத் தானே”**[74]

படைபோர்த் தொழிலை விரும்பும் அவனும் அதை விரும்புகிறான். அவன் எப்போது எவ்விடத்துப்படை கொண்டு செல்வான் என்பது நமக்கு தெரியாது. நாம் இப்போது அவனைக் காண்பதற்கு ‘நறவு’ என்று ஊருக்குச் சென்றால், அவன் பொருட்களைத் தடை இன்றி நமக்கு வழங்குவான் என்று மன்னன் புகழ் பாடுவதாக அமைந்துள்ளது.

### 3.12.5.5 வாழ்க, அவன் தானே !

சில அரசர்களிடம் பரிசு கிடைப்பது உறுதி என்பதை, சில பாடல்கள் எடுத்துக்காட்டுகின்றன. விறகு வெட்டிக்குக் காட்டில் புதையல் கிடைக்கலாம். கிடைக்காமலும் போகலாம். ஆனால் கிள்ளிவளவனிடம் நிறைந்த செல்வத்தை உறுதியாகப் பெறலாம் என்னும் நம்பிக்கை இருந்ததாக பாணனிடம் விறலியோடு செல்க என்று ஆற்றுப்படுத்துவதாக இப்பாடல் விளக்குகின்றது.

**"நாற்ற நாட்டத்து அறு காற் பறவை**

**சிறு வெள் ஆம்பல் ஞாங்கள் ஊதும்**

**கைவள் ஈகைப் பண்ணன் சிறு குடிப்**

**பாதிரி கமழும் ஓதி, ஓள் நுதல்,**

**இன் நகை விறலியொடு மென்மெல இயலிச்**

**செல்வை ஆயின், செல்வை ஆகுவை**

**விறகு ஒய் மாக்கள் பொன் பற்றன்னதோர்**

**தலைப்பாடு அன்று அவன் ஈகை**

**நினைக்க வேண்டா வாழ்க அவன் தானே"**[75]

மணத்தை ஆராயும் இயல்புடைய வண்டு, சிறிய வெள்ளை ஆம்பல் மீது வட்டமிடும் கையில் வண்மையான கொடையை உடைய பண்ணனின் சிறிய குடிவழியே பாதிரி மலர் மணக்கும் கூந்தலையும், ஒளியையுடைய நுதலையும், இனிய முறுவலையுமுடைய விறலியுடன் மெல்ல மெல்ல நடந்து செல்க, சென்றால் செல்வத்தை அடைவாய். விறகுகளைக் காட்டினின்று எடுத்துச் செல்லும் மக்கள், பொன் பெறுவது போன்ற தன்மையில் அவனுடைய ஈகை அமையாது. அவனுடைய கொடைப்பொருள் பெறுவமோ என நினைக்க வேண்டாம் உறுதியுடன் பொருள் பெறுவாய். அவன் தான் வாழ்க என்று வாழ்த்துவதாக அமைந்துள்ளது.

### 3.13.5.6 மனம்கவல்பு இன்றி மாழாந்து எழுந்து

தவம் செய்தவர்கள் தம் உடம்போடு அதன் பலனைப் பெற்றதைப் போல வருத்தம் நீங்கிக் கவலையின்றி எழுந்தனர். முதல் நாள் மாலை உள்ள வறுமையையும், மறுநாள் காலை உள்ள நிலையையும் கண்டு, கனவோ என மயங்கி நேரிட்டதாக பொருநனின் பசி வறுமையை நீக்கியமையை எடுத்துக்காட்டுகிறது.

**"தவந்செய் மாக்க டம்முடம் பிடாஅ**

**ததன்பய மெய்திய வளவை மான**

**வாறுசெல் வருத்த மகல நீக்கி**

**யனந்தர் நடுக்கமல்ல தியாவது**

**மனங்கவல் பின்றி மாழாந் தெழுந்து"**[76]

தவஞ் செய்கின்ற மக்கள் தத்தம் துன்பம் நீங்கிக் தவத்தின் பயனை அடைந்ததைப் போன்று நாங்களும் மகிழ்வோடு அங்கிருந்தோம் வழிச் சென்ற களைப்பு நீங்கத் தூங்கினோம். தேறல் உண்டதால் ஏற்பட்ட மயக்கமும் நடுக்கமும் தவிர வேறு மனத்துன்பம் எங்களுக்கு இல்லாதிருந்தது. பின்பு காலையில் மயக்கம் நீங்கி எழுந்தோம் என்று மன்னனைச் சந்திப்பதற்கு முன்பு இருந்த வறுமையும், மன்னனைச் சந்தித்ததற்கு பின்பு இருந்த தெளிவையும் எடுத்துக் காட்டுகிறது.

### 3.13.5.7 கலைஞரும் மன்னனின் நாள் மகிழிருக்கையும்

கலைஞர்கள் வள்ளல்களைக் கண்டு நான் மகிழிருக்கையில் பரிசில் பெறுவர். பண்டை காலத்திலே நண்பர்கள் கள்ளுண்டு மகிழ்ந்திருப்பது மரபு. அங்ஙனம் மகிழ்ந்திருக்கும் நிலையிலேயே கலைஞன் பரிசில் பெறச் செல்லுவான். இதனை புறப்பாடல்களும், ஆற்றுப்படை நூல்கள் எனக் கருதப் பெறும் பத்துப்பாட்டு நூல்களும் விளக்குகின்றன.

### 3.12.5.7.1 இன்இயம் இயக்கினிர் வழிமின்

பாணனை யாழ் இசைத்து, திரு.வெ.ஃ.காவின் சிறப்பினைக் கூறி, திருமால் வழிபாட்டோடு செல்லுங்கள். இளந்திரையனின் பரிசில் பொருள் உங்களுக்கு கிட்டும் என்பதை அறிவீர்கள் என்று வழிப்படுத்துவதாக,

**"நீலப் பைங்குடந் தொலைச்சி நாளும்**

**பெருமகி ழிருக்கை மாஇச் சிறுகோட்டுக்**

**குழவித் திங்கட் கோணேர்ந் தாங்குச்**

**கறவுவா யமைத்த சுரும்பு சூழ் சுடர்ந்த**

**னறவுபெயர்த் தமைத்த நல்லெழின் மழைக்கண்**

**மடவரன் மகளிரொடு பல்விளை யாழப்**

**பெறற்கருந் தொல்சீர்த் துறக்க மெய்க்கும்**

**பொய்யா மரபிற் பூமலி பெருந்துறைச்**

**செல்விடிகாள் பலரோ டசைஇ யவ்வயி**

**னருந்திருறற் கடவுள் வாழ்த்திச் சிறிதுநுங்**

**கருங்கோட் டின்னிய மியக்கினர் கழிமின்”**[77]

மென்மையான பெண்களுடன் பகலில் மகிழ்வோடு (நாண் மகிழிருக்கை) விளையாடுகின்ற இடமாக திரு. வெக்காச்சோலை அமைந்திருந்தது. பெறுவதற்கு அரிய மேல் உலகம் போன்று பூக்கள் மலிந்த அப்பெருந்துறை இருந்தது. அங்கு இளவேனிற்காலத்தில் மகிவும் செல்வர்களோடு நீங்களும் மகிழ்ந்து திரு.வெக்காவில் உறைகின்ற இறைவனை வாழ்த்தி, உங்களுடைய கரிய கொம்பினையுடைய யாழை இசைத்து மகிழ்ந்து செல்லுங்கள் என்று கூறுகிறது.

### 3.12.5.7.2 பாணர் புரவல, பரிசிலர் வெறுக்கை

பாணர்களை காப்பதிலே வல்லவன் இம்மன்னன் என்று மன்னனின் நாண் மகிழிருக்கையின் சிறப்பையும் எடுத்துக் கூறி, பரிசிலருக்கு அவனே செல்வம் போன்று திகழும் தன்மையை உடையவன் என்பதை பதிற்றுப்பத்து,

**“பாணர் புரவல, பரிசிலர் வெறுக்கை**

**பூண்அணிந்து விளங்கிய புகழ்சால் மார்ப, நின்**

**நாள் மகிழ் இருக்கை இனிது கண்டிருமே**

**தீம் தொடை நரம்பின் பாலை வல்லோன்**

**பையுள் உறுப்பின் பண்ணுப் டிபயர்த்தா“கு**

**செறுசெய் மாரியின் அளிக்கும் நின்**

**சாறுபடு திருவின் நனைமகி ழானே”**[78]

பாணர்களை காத்தலில் வல்லவனே, பரிசிலர்க்குச் செல்வம் போன்றவளே, ஆரம் முதலியன அணிந்து விளங்கும் மார்பை உடையவனே, பாலை யாழை பாடுபவன் பாலைப் பண்ணின் வகைகள் பலவற்றையும் ஒவ்வொன்றாக மாறி மாறி வாசிக்கும் பொது இசையின்பம் ஏற்படும் அதனைப் போல் உண்டவர்களுக்கு ஒன்றே ஒன்று ஒவ்வாத புதுப்புது இன்பத்தினை உண்டாக்குவதும் சேற்றினை உண்டாக்கும் மழை போன்றதும், திருவிழாவின் தன்மை பொருந்தியதுமான மதுவினைக் கொண்டது நாள்மகிழ் இருக்கையாகிய செல்வம் ஆகும்.

### 3.12.5.7.3 பாண் முற்றுக, நின்நாள் மகிழ்இருக்கை

நாள் மகிழ் இருக்கை பகற்பொழுதிலே பலரும் வந்து காணுமாறு மகிழ்வுறுத்தும் படி வீற்றிருக்கும் அவை. இத்தகைய அவைஇரவலர்க்குக் கள்ளீத்துப் பெறும் மகிழ்ச்சியை தரக்கூடியது என்பதை,

**“அழல் புரிந்த அடர் தாமரை**

**ஐது அடர்ந்த நூற் பெய்து**

**புனை வினைப் பொலிந்த பொலின் நறுந் தெரியல்**

**பாறு மயிர் இருந்தலை பொலியச் சூடி**

**பாண் முற்றுக, நின்நாள் மகிழ் இருக்கை”**[79]

நெருப்பிலிட்டுத் தகடாக்கிச் செய்த தாமரை மலரை, மெல்லிய கம்பியாகச் செய்த வெள்ளியிழையாகிய நூலில் இட்டதும், வேலைப்பாடமைந்த அங்கு பொலிவதுமாகப் பொன்னலாகிய நல்ல மாலை விளங்கும். அதனைப் பரந்த மயிருடைய கரிய தலையில் பாணர்தம் சுற்றம் பொலிவுடன் சூடியவராய் நின்னைச் சூழ்ந்து விளங்குவதாக, நின் அவைக்களம் என்று நான் மகிழ் இருக்கையின் சிறப்பையும், அதனால் கலைஞர்கள் பெறும் பரிசில் சிறப்பையும், நாள் மகிழ் இருக்கை தெளிவுற எடுத்துக் காட்டுகிறது.

### 3.13 கலைஞர்கள் ஊடகமாகச் செயல்பட்டமை

தொல்காப்பியர் காலத்தியச் சமுதாயத்தில் இருந்தே பாணர்கள் இன்றியமையாத இடத்தைப் பெற்று இருந்தனர். அவர்கள் இசையைக் கலையாக வளர்த்தார்கள் என்றும், அதேபோன்று கூத்தர்கள் குறித்தும், விறலி குறித்தும், பழங்கால இலக்கணமாக தொல்காப்பியம் சான்று தருகின்றது. கற்பில் கூற்று நிகழ்த்தும் மாந்தர்களாக பாணன், கூத்தன், விறலி, பரத்தை ஆகியோர் கூறப்படுகின்றனர். இதனை,

> **“பாணன், கூத்தன், விறலி, பரத்தை**
>
> **யாணம் சான்ற அறிவர், கண்டோர்**
>
> **பேணுதகு சிறப்பின் பார்ப்பான் முதலா**
>
> **முன்னுறக் கிளந்த அறுவரொடு தொகைஇத்**
>
> **தொல்நெறி மரபின் கற்பிற்குரியர்”[80]**

பாணன், கூத்தன், விறலி, பரத்தை உள்ளத் தெளிவுடைய அறிவர், கண்டோர் ஆகிய அறுவரோடு களவில் கூற்று நிகழ்த்துவோர் அறுவரும் சேர்த்துப் பன்னிருவர் என பழைமையான நெறியுடைய கற்பின் கூற்றுக்கு உரியர் என்று தொல்காப்பியர் கூறுகிறார். இவ்வாறு கூற்றுக்களாக வரும் பாணன், தலைவன் தலைவிக்கு ஊடல் தீர்க்கும் வாயிலாகவும், கூற்று நிகழ்த்துவோராகவும் சங்க இலக்கியத்தில் காட்டப்படுகின்றனர்.

### 3.13.1 செவ்வழி நல்யாழ் இசையிணன்

பாணன், தன் யாழை வருடிச் செவ்வழிப் பண்பாடித் தலைவன் வினைமுற்றி மீள்வதாக தலைவிக்கு ஆறுதல் கூறுவதாக அமைந்துள்ளது. அகநானூற்றுப் பாடல் தலைவியின் தனிமைத் துயரைக் கண்டு அவளுக்கு ஆறுதல் மொழியும் விதமாக பாணன் கூற்றாக இப்பாடல் அமைகின்றது.

**"பதவுமேயல் அருந்த மதவுநடைநல்ஆன்**

**வீங்குமாண் செருத்தல் தீம்பால் பிலிற்ற**

**கன்று பயிர் குரல் மன்றுநிறை புகுதரும்**

**மாலையும் உள்ளார் ஆயின் காலை**

**யாங்கு ஆகுவம்கொல் ? பாண என்ற**

**மனையோள் சொல் எதிர் சொல்லால் சொல்லென்**

**செவ்வரி நல்யார் இசையினென், பையென**

**கடவுள் வாழ்த்தி, பையுள் மெய்ந்நிறுத்து**

**அவர்திறம் செல்வேன் கண்டனென் யானே**

**விடுவிசைக் குதிரை விலங்குபரி முடுக**

**கல்பொருது இரங்கும் பல்ஆர் நேமிக்**

**கார்மழை முழுக்கு இசை கடுக்கும்**

**முனைநல் ஊரன், புனைநெடுந்தாரே"**[81]

பசுக்கள் ஊர் மன்றத்தில் வந்து வடும்படியான இந்த மாலைப்பொழுதில் கூடத் தலைவன் வரவில்லை. இரவு எனக்கு எப்படியிருக்குமோ என்று கேட்ட தலைவிக்கு பதில் கூறமாட்டாது நிற்கிறேன். இவள் துயரைத் தீர்க்க என் யாழினை வருடிக் கொண்டு தலைவன்பால் சென்றென். அச்சமயம் தலைவன் விரைந்து வரும்

குதிரைகளின் ஒலியைக் கேட்டேன். தலைவன் வரும் தேரை என் கண்களால் கண்டேன் என்று தலைவன் வரைவக் குறிப்பால் உணர்த்தித் தலைவியின் துயர் துடைக்க முயன்றுள்ளான். தலைவி இல்லிருத்தல், தலைவன் வினை முற்றி மீளுதலுமாகிய இரண்டையும் கூறி ஆற்றுப்படுத்துவதாக அமைகின்றது.

### 3.13.2 பூசல் கேட்டும் அருளா தோயே

தலைவன் இருக்கும் பாசறைக்கண் சென்று பிரிவால் வாடும் தலைவிக்கு அன்பு காட்டுமாறு கூறும் பாணனை ஐங்குறுநூறு பின்வருமாறு காட்டுகிறது.

**“நினக்குயாம் பாணரேம் அல்லேம், எமக்கு**

**நீயும் குருசிலை அல்லை மாதோ!**

**நின்வெங் காதலி தன்மனைப் புலம்பி,**

**ஈர்இதழ் உண்கண் உடுத்த**

**பூசல் கேட்டும் அருளா தோயே”[82]**

தலைவா! உனக்கு நான் பாணனாக இருத்தலை விரும்பவில்லை. எமக்கு நீர் தலைவன் இல்லை. ஏனெனில் நனி பால்மிகுதியான அன்புகொண்ட உன்னிடம் நின்மனையாள் தன் வீட்டில் தனித்துக் கிடந்து புலம்பி வருந்துகிறாள். அதன் காரணமாக தன் இரண்டு இதழ்களையுடைய மையுண்ட கண்கள் உடுத்த கண்ணீரைப் பற்றி நீ அருளாதிருக்கின்றாய் என்று பாணன் தலைவனிடம் கூற்று நிகழ்த்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

### 3.13.3 ஒருங்கு அமர் ஆயமொடு

வையை வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுவதை மன்னின் ஈகைக்கு ஒப்பிட்டு புலவன், பாணன், கூத்தன் ஆகியோர் புகழ்ந்து வறுமையையுடைய அனைவருக்கும் கைநிறைய பொன்னைக் கொடுக்கும் பாண்டிய மன்னனைப் போல வையைப் பெருக்கெடுத்து ஓடுகிறது. இதை கூட்டத்தோடு அனைவரும் வாழ்த்தினர் என்று

**“இலம்படு புலவர் ஏற்றகை நெமரப்**

**பொலம்சொரி வழுதியின், புனல்இறை பரப்பி**

**செய்யில் பொலம்பரப்பும் செய்வினை ஒயற்க**

**வருந்தாது வரும்புனல் விருந்து அயர் கூடல்**

**அருங்கறை அறைஇசை வயிரியர், உரிமை**

**ஒருங்குஅமர் ஆயமொடு ஏத்தினர் தொழவே”[83]**

வெள்ளத்தைக் கண்டு விருந்து அயரும், மதுரையில் இசைக்கு உரிமையையுடைய புலவரும், பாணரும், கூத்தரும் ஒருங்கு புகழ்ந்து தொழ வறுமையுடைய அனைவருக்கும் கைநிறைய பொன்னைச் சொரியும் பாண்டியனைப் போல வையை நதியானது வயலில் பொன்னைப் பரப்பும் செயல் என்றும் இருப்பதாக என்று விரும்பும் கூட்டத்தோடு வாழ்த்தினர்.

இவ்வாறு கலைஞர்கள் வாயில்களாக செயல்பட்டுள்ளனர். அப்போது தலைவியின் ஏசல்களுக்கும் உள்ளாகி உள்ளனர். கலைஞர்கள் வயிற்றுப் பிழைப்புக்காக பல்வேறு தொழில்களில் ஈடுபட்டுள்ளனர் என்பதும் புலனாகிறது. அதாவது கலைத்தொழில் மட்டுமல்லாமல் பிற தொழில்களிலும் ஈடுபட்டுள்ளமை விளங்குகிறது.

### 3.14 முடிவுரை

- வாய்மொழிப் பாடல்கள் தோன்றிய பொழுதே மனிதனுக்குள் கலைகளும் கலைஞர்களும் தோன்றினர்.
- கலைஞர்கள் கலைத் தொழிலை தங்களது வாழ்க்கை ஆதாரமாகவே கொண்டிருந்தனர்.
- கலைஞர்களில் பாணர், கூத்தர், பொருநர், விறலி குறித்து ஆராய்ந்துள்ளது இந்த இயல்.

- சங்க இலக்கியங்கள் கலைஞர்களின் வறுமை நிலையை எடுத்துக் கூறி, பின்பு கலைஞனே வழிப்படுத்தி மன்னனிடமும் மக்களிடமும் கலைஞர்களை ஆற்றுப்படுத்துவதாக அமைந்துள்ளது.
- கலைஞர்கள் மன்னனைக் காணச் செல்லும்போது கலைத்திறமையை மட்டுமல்லாது, மன்னனின் பண்புகளையும், புகழ்ந்து பாடிய தன்மையினால் கலைஞர்களின் வாழ்க்கைப் பின்புலம் புலப்படுகிறது.
- கலைஞர்கள் வயிற்றுப்பசி காரணமாக புரவலரை நாடிச் சென்று பரிசில் பெற்று வந்தமையையும், தங்களது கலைத் திறமையை வெளிப்படுத்தியமையையும் அறிய முடிகின்றது.
- கலைஞர்கள் தலைவன், தலைவி இருவருக்கும் ஊடல் தீர்க்கும் வாயிலாக இருந்தமையை அறிய முடிகின்றது.
- இன்றைய காலகட்டங்களை நினைத்துப் பார்க்கும் போது அன்றைய காலகட்டங்களில் கலைஞர்கள் மதிக்கப்பட்டமை புலப்படுகிறது.
- கலைஞர்களின் பொருளாதார நிலை என்பது சங்க கால திணை மக்களையும், மன்னனையும் நம்பியே இருந்தன என்பது புலப்படுகிறது.
- கலைஞர்கள் இனக்குழுவாக வாழ்ந்ததால் சேமிக்கும் வழக்கம் இல்லை. ஆதலால் சமூகப் பொருளாதாரத்தில் பின்தங்கியே இருந்தனர்.
- சங்க இலக்கியங்களினுள் புறநானூறும், ஆற்றுப்படை இலக்கியங்கள் என அழைக்கப்பெறும் பத்துப்பாட்டும், கலைஞர்களைக் குறித்து மிகுதியாக வெளிப்படுத்துகின்றன.
- கலைஞர்கள் சமூகத்தில் மதிக்கப்பட்டாலும்,புலவருக்கு அடுத்த நிலைலேயே இருந்தனர். புலவர்களே முதன்மைப்படுத்தப்பட்டனர்.
- கலைஞர்கள் சமூகத்தின் பார்வையில் கலைத்திறமையோடு காணப்பட்டாலும், அவர்களுடைய வாழ்வாதாரத்தை ஆராயும்போது,வயிற்றுப்பிழைப்புக்கு மற்றவர்களை நம்பியே இருந்தனர் என்பது புலப்படுகிறது.

**இயல்-3**

## சங்ககாலக் கலைஞர்களின் சமூகப் பொருளாதாரப் பதிவுகள்

**குறிப்புக்கள்**

1. பாக்யமேரி, காலந்தோறும் தமிழர் கலைகள், பக்-7,8.
2. மேலது, ப-7.
3. மேலது, ப.7.
4. முத்துவீராசாமி நாயுடு, இலக்கியச் செவ்வி, பக்-5,6.
5. கலைக்களஞ்சியம், தொகுதி-2, ப-338.
6. முத்துவீராசாமி நாயுடு, இலக்கியச் செவ்வி, ப-8.
7. கோதண்டராமன், இந்தியக்கலைகள், பக்-8.
8. மேலது, ப-2.
9. நவநீதகிருட்டிணன், தமிழ் இலக்கியத்தில் ஆற்றுப்படை, ப-310.
10. திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், பக்-119-126.
11. வின்டர்னிசு,Some probems of Indian Literature,ப-9.
12. K.M.Penikkar, History of Kerala,ப-428.
13. செயராமன், சங்க இலக்கியத்தில் பாடாண் திணை, ப-318,319.
14. இளம்பூரணர், தொல்காப்பியம் புறத்திணை, நூ-30
15. அருணாச்சலம், தமிழ் இலக்கிய வரலாறு, ப-213.

16. மேலது, ப-213.

17. நவநீதகிருட்டிணன், தமிழ் இலக்கியத்தில் ஆற்றுப்படை, ப-62.

18. மேலது,ப-63.

19. சுவாமிநாதன், சங்க கால வரலாறு, ப-90.

20. சு.தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியங்கள் உணர்த்து மனித உறவுகள், ப-296.

21. புறநானூறு, பக்-540, 541.

22. மலைபடுகடாம், ப-498.

23. புறநானூறு, ப-874, 875.

24. அகநானூறு,ப-71,72.

25. வெ.வரதராசன், தமிழ்ப்பாணர் வாழ்வும் வரலாறும், ப-5.

26. மேலது, ப-5.

27. மேலது, ப-5.

28. கா.சுப்பிரமணியன், சங்க காலச் சமுதாயம், ப-73.

29. வெ.வரதராசன், தமிழ்ப்பாணர் வாழ்வும் வரலாறும், ப.5.

30. கா.சுப்பிரமணியன், சங்க காலச் சமுதாயம் ப-73.

31. சுவாமிநாதன், சங்ககால வரலாறு, ப-90.

32. நவநீதகிருட்டிணன் தமிழ் இலக்கியத்தில் ஆற்றுப்படை, பக்- 308,309

33. புறநானூறு, பக்-588, 589.

34. புறநானூறு, பக்-650.

35. சிறுபாணாற்றுப்படை, ப-140.

36. பெரும்பாணாற்றுப்படை, ப-181.

37. பொருநராற்றுப்படை ப-87.

38. புறநானூறு, பக்- 320, 321.

39. பொருநராற்றுப்படை, ப- 86.

40. மலைபடுகடாம், ப-511.

41. மலைபடுகடாம்,பக்- 588, 589.

42. சிறுபாணாற்றுப்படை,பக்- 129,130.

43. பெரும்பாணாற்றுப்படை, ப-188

44. மேலது,ப-189.

45. மலைபடுகடாம், பக்-575,576.

46. மலைபடுகடாம், ப-576.

47. மலைபடுகடாம், பக்- 577,578.

48. பெரும்பாணாற்றுப்படை, பக்-188,189.

49. பெரும்பாணாற்றுப்படை, ப-90.

50. மலைபடுகடாம், ப-592.

51. சிறுபாணாறறுப்படை, பக்-143,144.

52. பெரும்பாணாற்றுப்படை, பக்- 198,199.

53. பெரும்பாணாற்றுப்படை, ப.199.

54. பெரும்பாற்றுப்படை, பக்-200,201.

55. சிறுபாணாற்றுப்படை, ப-141.

56. பெரும்பாணாற்றுப்படை, பக்-200,201.

57. சிறுபாணாற்றுப்படை, பக்-142,143.

58. ந.சுப்பிரமணியன், சங்ககால சமுதாயம், ப-87.

59. புறநானூறு, பக்- 402,403.

60. புறநானூறு,பக்- 347, 348.

61. புறநானூறு, ப -146.

62. புறநானூறு, பக்- 146,147.

63. மலைபடுகடாம், பக்- 596,597.

64. பெரும்பாணாற்றுப்படை, ப-182.

65. புறநானூறு, பக்- 819, 820

66. புறநானூறு, ப-821.

67. புறநானூறு,பக்-276, 277.

68. பொருநராறறுப்படை, ப-87.

69. பெரும்பாணாற்றுப்படை, பக்- 208,209.

70. மலைபடுகடாம், பக்- 569,570.

71. பதிற்றுப்பத்து, பக்-85,86.

72. பதிற்றுப்பத்து, பக்- 147,148.

73. பதிற்றுப்பத்து, ப-69.

74. பதிற்றுப்பத்து, ப-103.

75. புறநானூறு, ப-183.

76. பொருநராற்றுப்படை, ப-90.

77. பெரும்பாணாற்றுப்படை, பக்- 202,203.

78. பதிற்றுப்பத்து, ப-112.

79. புறநானூறு, பக்- 82,83.

80. தொல்,செய்யுளியல், ப-864.

81. அகநானூறு, ப-37.

82. ஐங்குறுநூறு, ப-484.

83. பரிபாடல், ப- 236.

## இயல்-4

## சங்ககாலப் புலவர்களின் சமூகப்பொருளாதாரப் பதிவுகள்

### பொருளடக்கம்

4.5.1.3. கேளிர் போலக் கேள்கொளல் வேண்டி

4.5.2. ஒற்றுமை

4.5.3. அறிவுரை

4.6. அஞ்சாமை

4.7. புலவரும் பரிசிலும்

4.8. பகுத்துண்ணும் பண்பு

4.9. புலவரும் போரும்

4.9.1. ஈன்றுபுறந் தருதல

4.9.2. செருமுக நோக்கிச் செல்கென விடுமே

4.9.3. கோற்றுறைத் குற்றில மாதோ வென்று

4.9.4. மலைத்தனை யென்பது நாணுத்தக வுடைத்தே

4.9.5. கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்

4.10 முடிவுரை

## இயல்-4

## சங்ககாலப் புலவர்களின் சமூகப்பொருளாதாரப் பதிவுகள்

### 4.1.முன்னுரை

சங்க காலத் தமிழர் பண்பாட்டிற்கு ஆட்சியாளர்களுக்கும் அறிவாளர்க்கும் இடையே அமைந்திருந்த நெருக்கமான உறவு சான்றாகும். இவ்வுறவின் பண்முகத் தன்மையை புலவர் பாடல்களின் பின்புலங்கள் வாயிலாக அறிய முடிகின்றது. சங்க இலக்கியப் பாடல்கள் பல புலவர்களால் பல்வேறு சூழல்களில் பாடப்பட்டு இருந்தாலும் அவற்றில் காணப்படும் உள்ளடக்கம், வெளிப்படும் முறை சில வகைப்பாடுகளுக்குள் அடங்கும் என்பதும், அவ்வகைப்பாடுகள் புலவர்களின் சமூகப்பொருளாதாரப் பதிவுகளை அறிவதற்கு உதவும் என்பதும் திண்ணம் புலவரின் மரபு ரீதியான பதிவினை அறிந்துக்கொள்ள அக,புற இலக்கியங்கள் பெரிதும் துணை நிற்கின்றன. புலவரின் சமூக மதிப்பு குறித்தும், புலவருக்கும் சான்றோருக்குமான உறவு குறித்தும், புலவரும் போரும், புலவரும் மன்னனும், புலவரின் பகுத்துண்ணும் பண்பு, புலவரும் பரீசலும் ஆகியவை குறித்தும் விளக்குகிறது இந்த இயல்.

### 4.2.புலவர் - சொல் விளக்கம்

புலவர்களைக் குறிப்பதற்கு சான்றோர், பரிசிலர், இரவலர் ஆகிய பல்வேறு சொற்கள் பயன்பட்டன.'புலவர்களைக் குறிக்க வழங்கிய பிறசொற்கள் சான்றோர், பரிசிலர், இரவலர் என்பனவாகும். 'சால்' என்னும் சொற்கு 'நிறைவு' என்பது பொருளாகும். எனவே அறிவானும் ஒழுக்கத்தானும் நிறையுடையோர் முழுமை பெற்றவர்கள் என்னும் பொருளிற் சான்றோர் என்னும் சொல்லை ஆண்டனரெனத் தெரிகின்றது."[1] எனக் குறிப்பிடுகிறார்.

'பரிசிலர் என்னும் சொல் புலவர்க்கும், பாணர் முதலான கலைஞருக்கும் பொதுவாக வழங்கிற்று. மக்களால் வரிசை தந்து நன்கு மதிக்கும் உயர்ந்த

பரிசுடையாராதலின் இவர்களைப் 'பரிசிலர்' என்ற பெயரால் தமிழர் பாராட்டிப் போற்றுவாராயினர் என்ற கருத்துமுண்டு"[2] என்று குறிப்பிடுகிறார்.

'இரவலர் என்னும் சொல்லும் புலவர், பாணர் முதலான பலர்க்கும் பொதுவான சொல்லாகவே வழங்கிற்று".[3]

### 4.3.புலவரின் சமூகமதிப்பு

மொழியறிவு மட்டுமே உடையவரெனக் கருதி ஏளனமாக, ஏட்டுச் சுரைக்காய் என்று சுட்டப்படுபவரலியர் புலவர். புலமையுடையோரே புலவராவார். அற்றேல் இலக்கியப் புலமையுடையோரையே புலவரென அழைப்பதும் உண்டு. குறித்த பொருளைப்பற்றிப் பாடினும் எழுதினும் உலகின் தத்துவநிலையை ஓர்ந்தது பெற்றியே செய்வர் புலவர் ஆவர். இத்தகைய புலவர் சமூகத்தில் நன் மதிப்புடன் வாழ்ந்தனர் என்று சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. "சமூகத்தில் மாறுபட்டப் பண்பும் மனிதகுலப் பண்பாடும் பாதுகாக்கப்படுகின்றன. உண்டு, உடுத்து, உறங்கிக் கழிப்பதற்கல்ல மனிதப்பிறவி. தன் வீடு, தன் பெண்டு, தன் பிள்ளை என்று உழன்று தனிவதற்கல்ல குடும்ப வாழ்க்கை. உயிரோடு வாழுகின்ற காலத்தில் இயங்குகின்ற சமுதாயத்தில் ஒவ்வொருவருக்கும் ஏதாவது ஒரு விதத்தில் பங்கு வகித்துக் கொண்டிருக்கின்றனர்."[4] அந்த வகையில் புலவர்கள் சமூகத்தின் செயல்பாடுகளிலும், மாற்றங்களிலும் பெரும்பங்கு வகிக்கின்றனர். சங்ககாலச் சமூகத்தின் அரசர்களிடமும், மக்களிடமும், வேந்தர்களிடமும் நன்மதிப்பைப் பெற்றிருந்தனர் புலவர்.

#### 4.3.1.அல்லது செய்தல் ஒம்புமின்

கல்வி, ஒழுக்கம், வேள்வி ஆகியவற்றில் சிறந்து விளங்கியவர் புலவர் பெருமக்கள். மக்களையும் மன்னனையும் நல்வழிப்படுத்தலே புலவரின் தொழிலாக இருந்தது. இதனை

**'நல்லது செய்தல் ஆற்றுநீர் ஆயினும்,**

**அல்லது செய்தல் ஓம்புமீன், அதுதான்**

**எல்லாரும் உவப்பது, அன்றியும்**

**நல் ஆற்றுப் படுஊம் நெயியுமார் அதுவே"[5]**

நல்வினைகள் செய்யமாட்டீராயினும், தீவினைகளையாவது செய்யாது விலக்குங்கள், அச்செயல்தான் எல்லாராலும் புகழ்ப்படுவது, அது மட்டுமல்லாமல் நம்மை நன்னெறியில் செலுத்தும் வழியும் அதுவாகும் என்று இப்பாடல் வரிகள் விளக்கம் தருகின்றன. புலவர்கள் நல்ல சிந்தனைகளை எடுத்துரைப்பதால் சமூகத்தில் நன்மதிப்பு பெற்றுத் திகழ்ந்தனர்.

**4.3.2.புலவர் பாடாது வரைக வென் நிலவுரை**

புலவர்கள் சமூகத்திற்கு நல்லது செய்தார்கள் என்பதை மன்னன் தன்நாட்டில் பல்வேறு புலவர் பெருமக்கள் வாழ்வதே ஆட்சிக்கு உரிய சிறப்பாகக் கருதுகின்றார். நாட்டில் புலவருக்கு இருந்த சமூகமதிப்பை 'ஒரு நாட்டின் பண்பட்ட மரபுகளைக் கட்டிக்காக்கும் காவலராயும், வாழ்வுக்குக் கரையமைப்பது சான்றோர்களேயாவர். இதனை நன்குணர்ந்த சங்க காலச் சமூகம், புலவர்கட்கு மிகப்பெரிய சிறப்பளித்து"[6] என்று குறிப்பிடுகிறார். சங்க இலக்கிய பாடலான

**'ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி**

**மாங்குடி மருதன் தலைவன் ஆக**

**உலகமொடு நிலைஇய பலர் புகழ் சிறப்பின்**

**புலவர் பாடாது வரைக, என் நிலவுரை"[7]**

சிறந்த தலைமையையும் மேம்பட்ட புலமையும் உடைய மாங்குடி மருதன் முதல்வனாக, உலகத்தில் வாழும் நிலையுடையோர் பலராலும் பாராட்டப்பட்ட சிறப்பினையுடைய புலவர் பலரும் என் நில எல்லையைப் பாடாது நீங்குக! என்று இப்பாடல் வரிகள் பொருள் தருகின்றன. இக்கருத்தினையே

**'அன்று அவிந்து அடங்கிய கொள்கைச்**

**சான்றோர் பலர், யான், வாழும் ஊரே"**[8]

புலவர் பிசிராந்தையார் தம் நரைதிரையில்லாத இன்ப வாழ்விற்குக் கூறும் காரணங்களுள், ஆன்றவித் தடங்கிய சான்றோர் பலர் தம்மூரில் வாழ்தலுமொன்றாகும் என்று இப்பாடல் வலியுறுத்துகின்றன.

புலவருக்கும் அவர்தம் செய்யுளுக்கும் பண்டைத் தமிழகம் அளித்த பெருமையினைச் சங்கப் புலவர்கள் கொடத்துள்ள அடைமொழிகளை அறியலாம்.

**'செலுத்த செய்யுட் செய்செந் நாவின்**

**வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்"**[9]

என்றும்,

'பொய்யா நாவிற் கபிலன்"[10]

என்றும்,

'திருந்து மொழி மோசி"[11]

என்றும்,

'மெய்சொல் நுண்டேர்ச்சிப் புலவர்"[12]

என்றும்

'புகழ்ந்த செய்யுட் கழாத்தலை"[13]

என்றும் பல்வேறு பாராட்டு மொழிகளால் அறிய முடிகின்றது.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுக்கு நல்தோர் அறிவுரை வழங்குவதை,

**'பொற்புவிளங்கு புகழவை நிற்புகழ்ந்து ஏத்த**

**விலங்குஇழை மகளிர் பொலங்கலத்து ஏந்திய**

**மணங்கமழ் தேறல் மடுப்ப நாளும்**

**மகிழ்ந்து இனிது உறைமதி பெரும்**

**வரைந்துநீ பெற்ற நலஊழியையே"[14]**

என்று பாடல் வரிகள் உணர்த்துகின்றன. இப்புலவரே இம்மன்னனையே பாடும் புறப்பாட்டு,

**'ஒண்தொடி மகளிர் பொலங்கலத்து ஏந்திய**

**தண்'கமழ் தேறல் மடுப்ப மகிழ்சிறந்து**

**ஆங்கினிது ஒழுகுமதி பெரும ஆங்கது**

**வல்லுநர் வாழ்ந்தோர் என்ப ,,[15]**

என்ற பாடல் வரிகளில் இன்புற்று வாழ்வதே வாழ்க்கை அவ்வாறு செய்யாதவர்களுடைய வாழ்வு பயனுற்று என்பதை அறிய முடிகின்றது.

**4.4. புலவரும் சான்றோரும்**

புலவர் சான்றோனைப் பற்றி கூறுவதிலும் தானும் ஒரு சான்றோனாக, திகழ்ந்து மன்னனுக்கும், மக்களுக்கும் அரிய கருத்துக்களை வழங்கி உள்ளமையை சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன. பெரியோரை மதித்து நடப்போரும் பழிச் செயல்களைச் செய்யாதவரும், நீதியோடும் அறநெறியோடு நடப்போறும் சான்றோர் ஆவர். இதனையே புலவர்கள் தங்களது வாழ்க்கைத் தொழிலாக மேற்கொண்டனர். 'சான்றோர் கல்வி கேள்விகளாற் சிறந்து, என்றும் அமைதியான கொள்கைகளையுடையவர்களாவர். அன்புடைய உள்ளத்தினராயும் அருள் நிறைந்த செய்கையினராயும் விளங்குவர். உலகிற்கு நல்ல நெறிகளை வகுத்துக் காட்டுவாரும் இவர்களேயாவர். தீமை செய்தார் மாட்டும் பொறுமையாய் நன்மையே செய்யும் இயல்பினராவார்" என்று குறிப்பிடுகிறார்.

#### 4.4.1 சான்றோன் ஆதல் நற்கு அறிந்தனை

சான்றோார் கூறிய நல்வழியில், ஒழுக்க நெறியில் நடத்தல் வேண்டும் என்பதை,

**'நாருடை நெஞ்சத்து ஈரம் பொத்தி,**

**ஆன்றோர் செல் நெறி வழாஅச்**

**சான்றோன் ஆதல் நற்கு அறிந்தனை தெளிமே"[16]**

என்ற வரிகளில் அஞ்சில் ஆந்தையார் என்னும் புலவர் அன்புடைய உள்ளத்தில் அருளுடையவனாய், ஆன்றோர் சென்று போற்றிய நன்னெறியில் குறைநேராது ஒழுகும் பண்புடைய சான்றோனாய் அமைதலை நன்கு அறிகின்றனை என்று சான்றோர் நன்னெறி குறையாது ஒழுக்கத்தோடு பண்போடு வாழ்ந்தனர் எனக் குறிப்பிடுகிறார்.

#### 4.4.2 சான்றோர் கடன் நிலை குன்றலும் இலர்

சான்றோர் பழிபடும் செயலை செய்யாதவர் என்பதை,

**'நாடல் சான்றோர் நம்புதல் பழி எனின்,**

**பாடு இல கலுழும் கண்ணொடு சாஅய்ச்**

**சாதலும் இனிதே – காதல் அம் தோழி**

**அந்நிலை அல்ல ஆயினும் சான்றோர்**

**கடன் நிலை குள்றலும் இலர்"[17]**

நம்மை நாடி ஒழுகும் பெரும்பண்புகள் அமைந்த நம் தலைவரை நாம் நம்பிக்கொள்வது பழி என்றால், துயிலாது, அழுகின்ற கண்களோடு வருந்திச் சாதலும் இனியதாகும். அவ்வாறு இறத்தல் என்பது இயற்கைக்கு ஒத்தது அன்று.

ஆயின், சான்றாண்மை மிக்கவர் தம் கடமைப் பாட்டிலிருந்து குறைபட மாட்டார் என்று உணர்த்துகின்றது இப்பாடல் வரிகள்.

### 4.4.3.பழியாங்கு ஒல்பவோ காணுங்காலே

பெரியோரை வணங்கி ஒழுகுதல் சான்றோருக்கு செய்யும் ஒழுக்கப் பண்பில் தலைசிறந்ததாகும். இதனை கிடங்கில் குலபதி நக்கண்ணன் என்னும் புலவர்,

**‘ சான்றோர்**

**புகழும் முன்னர் நாணுப**

**பழியாங்கு ஒல்பவோ காணுங் காலே”**[18]

என்று சான்றோர்கள் தங்களை யார் புகழ்ந்தாலும் அவருக்கு முன் சான்றோர்கள் வெட்கப்படுவர். அப்படிப்பட்டவர்கள் பழி ஏற்க நேர்ந்தால் எவ்வாறு தாங்குவர் என்று கூறுவதாக அமைந்துள்ளது.

### 4.4.4.வணங்கிய சாயல், வணங்கா ஆண்மை

பெரியோருக்கு தெரிவிக்கும் வணக்கத்தை கபிலர் என்னும் புலவர்,

**‘வணங்கிய சாயல், வணங்கா ஆண்மை**

**இளந்துணைப் புதல்வரின் முதியர்ப் பேணி,**

**தொல்கடன் இறுத்த வெல்போர் அண்ணல்”**[19]

வணங்கிய மேன்மையினையும், வணங்காத ஆண்மையினையும் உடைய இளம் துணைப் புதல்வர்களைப் பெற்றமையால் குலத்து முன்னோர்களைப் பேணி இல்லத்தார் செய்ய வேண்டிய செயல்களைச் செய்து நிறைவேற்றிச் சிறந்து விளங்கும் வெல்போர் அண்ணலே எனக் குறிப்பிடுகிறார் புலவர்.

### 4.4.5. பெரியோர் ஒழுக்கம்

பெரியோரிடத்தும் அந்தணர்களிடத்தும் ஏனையோரிடத்தும் எவ்வெவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதை தொல்காப்பியர்,

**‘அந்தணர் திறந்தும், சான்றோர் தேஎத்தும்**

**அந்தமில் சிறப்பின் பிறர் பிறர் திறத்தினும்**

**ஒழுக்கம் காட்டிய குறிப்பினும்”[20]**

அந்தணரிடத்தும் சான்றோரிடத்தும் பிறரிடத்தும் எவ்வாறு நடக்க வேண்டும் என்ற ஒழுக்க முறையை குறிப்பிடுகிறார். பெரியோர் ஒன்றைத் தாம் விரும்பிய போதிலும் அவற்றை அடையும் முன்னதாகத் தமது கல்வி கேள்விகளால் நன்கு ஆராயந்து அறம் பொருள் ஒழுக்கத்தில் வழுவாமல், தமது தகுதியையும் நோக்கிக் கண்ட பின்னரே, செயலில் ஈடுபடுபவர் இது அவரது சிறந்த ஒழுக்கமாகும் என்பதை,

**‘விழைய உள்ளம் விழையும் ஆயினும்**

**என்றும், கெட்டவை தோட்டிஆக மீட்டு ஆங்கு**

**அறனும் பொருளும் வழாமை நாடி**

**தற்தகவு உடைமை நோக்கி, மற்று அதன்**

**பின் ஆ கும்மே, முன்னியது முடித்தல்,**

**அனைய பெரியோர் ஒழுக்கம்”[21]**

பெரியோர் தமது மனம் விரும்பாத ஒன்றை விரும்பினால் கேள்விக் குறியாகிய அங்குசத்தைக் கொண்டு மனமாகிய யானையை நல்வழியில் திருப்பி இல்லறமும் பொருளும் வழுவாத வண்ணம் தமது தகுதிக்கேற்ப, தம் விருப்பம் இருக்கிறதா? என்று ஆராய்ந்து பின்னரே அதன்படி செய்வர் என்ற கருத்திலிருந்து புலப்படுகிறது,

புலவரின் ஒழுக்கநெறி வலியுறுத்தும் பண்பு.

### 4.4.6 தொல் மருங்கு அறிஞர்

பொன் முதலிய ஆபரணங்கள் சிதைந்தாலும் மீண்டும் செய்து கொள்ள இயலும். ஆனால் ஒழுக்கம் தவறினால் மீண்டும் சீா் செய்வது இயலாததாகும். ஒழுக்கம் தவறாது நடப்பது உயர்ந்த பண்புடைமையாகும் என்பதை கபிலா்,

**'முத்தினும் மணியினும் பொள்ளிலும், அத்துணை**

**நேர்வரும் குறைய இயல்பும் கலம் கெடின், புணரும்**

**சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின்**

**மாசு அறக் கழிஇ வியங்கு புகழ் நிறுத்தல்,**

**ஆசு அறு காட்சி ஐயர்க்கும், அ்நிலை**

**எளிய என்னார், தொல் மருங்கு அறிஞர்"[22]**

ஒழுக்கத்தின் பண்பினை சுட்டிக்காட்டுகிறாா்.

**4.4.7.அறங்கள் கூறும் சான்றோர்**

ஆற்றுதல் போற்றுதல் முதலிய ஒழுக்க நியதிகளை ஆசிரியா்,

**'ஆற்றுதல் என்பது ஒன்று அலர்ந்தவர்க்கு உதவுதல்**

**போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை**

**பண்பு எனப் படுவது பாடநிற்து ஒழுகுதல்**

**அன்பு எனப் படுவது தன்கிளை செறாஅமை**

**அறிவு எனப் படுவது பேதையார் சொல்நோன்றல்**

**செறிவு எனப் படுவது ஒறியது மறாஅமை**

**நிறைவு எனப் படுவது கண்ணோடாது உயிர்வௌவல்"[23]**

'அன்பு' கூறப்பெறுவது தன்னுடைய சுற்றத்தாரைத் தழுவிக் கொள்ளுதல் 'அறிவு' என்று கூறப்பெறுவது அறிவற்றோரின் சொல்லைப் பொறுத்துக் கொள்ளுதல்,

‘செறிவு’ என்று கூறப்பெறுவது தாம் சுட்டியதை பின்பு மறுக்காதிருத்தல், ‘நிறைவு’ என்று கூறப்பெறுவது மறைபொருளை பிறா் அறியாமல் பாதுகாத்தல் முறை என்றுச் சொல்லப் பெறுவது கொலைக் குற்றம் செய்தார்க்கு இரக்கம் இன்றி மரணதண்டனை வழங்குதல், ‘பொறுமை’ என்று கூறப்பெறுவது தம்மை பழிப்பவரையும் பொறுத்துக் கொள்ளும் பண்பு என்று குறிப்பிடுகிறார். இத்தகைய சிறப்பிற்குரிய பண்புகளைப் பெற்றிருப்போர் சான்றோர் ஆவர்.

### 4.5.புலவரும் மன்னனும்

பழந்தமிழருடைய வரலாற்றை நோக்குங்கால் புலவருக்கும் மன்னனுக்கும் இருந்த நட்பு தெளிவுற விளங்கும். அத்தோடு நில்லாமல் மன்னர்கள் தவறு செய்தாலும் அஞ்சாது கண்டித்தமையும் உணர்த்துவது சங்க இலக்கியங்கள் அகநானூறு. சங்ககாலத்தில் “புலவரும் மன்னரும் நட்போடு வாழ்ந்தனர் எனபதற்கு பல்வேறு சான்றுகள் உள்ளன. இதனை அதியமானின் அவைக்களப் புலவராகக் கபிலர் திகழ்ந்தார். கோட்பெருஞ்சோழனின் உயிர் நண்பராகப் பிசிராந்தையர் இலங்கினார். புகழும் தரத்தக்கச் செயல்கள் செய்தவிடத்துப் புலவர்கள் மன்னரைப் போற்றிப் பாராட்டினார் “புலவர்கள் தங்களைப் புகழ்ந்து பாடுவதைப் பெரும் பேறாகக் கருதினர். நாடாளும் தலைவர்கள் இலக்கியம் இயற்றும் புலவர்களையே விழுமியோராகப் போற்றி வந்தனர்.அரசனை அவன் என்றும், புலவரை அவர் என்றும் சுட்டியதில் உள்ள நாகரீக மதிப்பு அரசியலில் தலையிட்டு அறிவுரை கூறியும், அறிவுரை நல்கியும், அரசரின் போக்கைத் திருத்தும் உரிமை புலவருக்கு இருந்தது”[24] என்று மு.வரதராசனார் குறிப்பிடுகிறார்.

#### 4.5.1.வேந்தர் புலவர்களைப் போற்றல்

வேந்தர்கள் புலவர்மீது கொண்டிருந்த மதிப்பு குறிப்பிடத்தக்கது. புலவர்களை புலமையாளராகவும் சான்றோராகவும் கருதிப் போற்றினர். தம்மை நாடி வந்த புலவர்களை மன்னர் அன்புடன் வரவேற்று வேண்டியவை நல்கிப் போற்றினர். தம்மை விட்டுப் பிரியும் பொழுது ஏழடி புலவரின் பின் சென்று வழியனுப்பும் பண்பாட்டை,

**‘கோட்டிற் செய்தா கொடுஞ்சி நெடுந்தே**

**ரூட்டுளை துயல்வர வோரி நுடங்கப்**

**பால்புரை புரவி நால்குடன் பூட்டிக்**

**காலி னேழடிப் பின்சென்று கோலின்”[25]**

யானைக்கொம்பால் செய்த தாமரை முகையினையுடைய நெடிய தேரிலே, சாதிலிங்கம் ஊட்டின் தலையாட்டம் பொங்கக் கழுத்தின் மயிரசைய, பாலையொத்த நிறத்தை உடைய குதிரைகள் நான்கினைச் சேரப்பூட்டி, தான் காலாலே ஏழடி பின்னே வந்து வழி அனுப்பினர் என்று இப்பாடல் வரிகள் பொருள் தருகின்றன.

**4.5.1.1.இரலவர்க்கு கெளிதே**

புலவர்கள் மன்னர்களைத் தாம் விரும்பிய நேரத்தில் காணவும், கண்டு பேசவும் உரிமை பெற்றிருந்தனர். புலவர்களின் வரவைத் தடுக்காதவையாக அந்நாளைய வேந்தரின் வாயில்கள் விளங்கின என்பதை, கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார்,

**‘உடையோர் போல இடையின்று குறுகி,**

**செம்மல் நாள் அவை அண்ணாந்து புகுதல்**

**எம் அன வாழ்க்கை இரலர்க்கு எளிதே”[26]**

அவ்வூர்க்கு உரியவர் போல காலம் பாராது, பலமுறை அணுகி அவனுடைய அவையிலே செம்மார்தத தலையுடன் புகுதல் எம்போன்ற இரவர்க்கு எளிது எனக் குறிப்பிடுகிறார். இவ்வாறு மன்னனது சிறப்பைப் போற்றுகிறார் புலவர்.

**4.5.1.2.புலவன்,கொண்டுவ் தனனே.**

புலவன் வறியவன் என்ற நிலையில் சிறப்புப் பெற்று இருந்தாலும், நாடாளும் வேந்தன் என்ற நிலையில் மன்னன் இருப்பினும், மன்னன் மகளை புலவர் தன்மகளேக் கருதும் போக்கை கபிலர்.

**‘இவர்யாா’? என்குவை ஆயின், இவரே**

**ஊருடன் இரவலர்க்கு அருளித் தேருடன்**

**முல்லைக்கு ஈத்த செலலா நல்இசைப்**

**படுமணி யானை, புறநானூறுபின் கோமான்**

**நெடுமாப் பாாி மகளிர் யானே**

**த்தை தோழன், இவர் எண் மகளிர்”[27]**

இவன் யார்? என்று ீ கேட்டால். இவர் இரவலர்க்கு ஊர்களையும் வளத்தையும் தந்து முல்லைக்குத் தேர்கொடுத்த புகழை உடைய பாரி என்று கூறி புறநானூறு மலைத் தலைவன் பாரியின் மகளிரை நான் பாரியின் நண்பன் அதனால் இவர் என் மக்கள் எனக் குறிப்பிடுகிறார்.

**4.5.1.3.கேளிர் போலக் கேள்கொளல் வேண்டி**

வேந்தன் புலவரை அன்புடன் வரவேற்று அவருக்கு வேண்டுவன தந்து, அன்பொழுக, கனிவுடன் அவர்களைப் பார்ப்பான் என்றும், அவனது பார்க்கும் பார்வையில் புலவரின் உள்ளம் உருகுவதைவிட, எரும்புகளை போல மெழுகுகள் உருகுவதாக முடத்தாமக் கண்ணியார்,

**‘ஒன்றியான் பெட்டா வளவையி னென்றிய**

**கேளிர் போலக் கேள்கொளல் வேண்டி**

**வேளாண் வாயில் வேட்பக் கூறிக்**

**கண்ணிற் காண நண்ணுவழி யிரீஇப்**

**பருகிவன்ன வருகா நோக்கமோ**

**குருகு பவைபோ லென்பு குளிர்கொளீஇ”[28]**

முன்பே தன்னோடு பொருந்திய நட்டாரைப் போல என்னுடன் உறவு கொள்ளுதலை விரும்பி, தான் உபகரித்தற்கு வழியாகிய இரட்பினையே யான் விரும்பும்படி உபசாரங்களைக் கூறி, தன் கண்ணிலே காணும் படி தனக்கு அண்ணிதான இடத்திலே என்னை இருத்தி, உருகும் மெழுகு முதலியன போல் நெகிழும்படி உபசரிப்பான் என்று மன்னின் உபசரிப்பை புலவர் பாராட்டுகிறார்.

**4.5.2.ஒற்றுமை**

புலவர்கள் மூவேந்தர்க்கும் ஒற்றுமையை வலியுறுத்த வேண்டுமென்று எண்ணி, பல்வேறு பாடல்களில் ஒற்றுமை உணர்வை வலியுறுத்தியுள்ளனர். வேந்தர் காக்கும் நாடு அனைத்து வளங்களையும் உடையதாக இருப்பினும், அவர் இறக்கும் பொழுது வருவது நல்வினை ஒன்றே. எனவே நாடி வருவார்க்கு வளம் பலவும் வழங்கி நலவினையுடையவராக இருங்கள் என்று மூவேந்தர்க்கும் ஔவையார்,

**‘கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்திர்**

**யான்அறி அளவையோ இதுவே, வானத்து**

**வயங்கித் தோன்றும் மீனினும், இம்மெனப் பரந்து இயங்கு**

**மாமழை உறையினும்,**

**உயர்துமேந் தேன்றிப் பொலிக,நும்நாளே”[29]**

வெண்கொற்றக் குடையையும், கொடித் தேரையும், உடைய வேந்தர்களே நான் அறிந்தளவு இதுவே யாம். வானில் விளங்கும் விண்மீன்களினும் முழங்கிப் பெய்யும் மழைத்துளிகளினும், மிகவும் மேம்பட்டவையாக உங்கள் வாழ்நாட்டில் விளங்குவன ஆகட்டும் என்று வேந்தர்களிடையே ஒற்றுமையை வலியுறுத்துகிறார் புலவர். மற்றொரு புலவர் வாழ்த்தும் போது அறம் சார்ந்த அறிவுரைகளை வழங்கி, இருவரும் இன்றுபோல் அன்புகொண்டு ஒற்றுமை உணர்வோடு உறுதுணையாக வாழ வேண்டும் என்பதை,

**‘நல்ல போலவும்,நயவ போலவும்**

**தொல்லோர் சென்ற நெறிய போலவும்**

**காதல் நெஞ்சின்நும் இடைபுதற்கு அலமரும்**

**ஏதில் மாக்கள் பொதுமொழி கொள்ளாது**

**இன்றே போல்கறும் புணர்ச்சி"[30]**

காரிக் கண்ணனார் என்னும் புலவர், நல்லன போலவும், விரும்பத்தக்கன போலவும் முன்னோர் சென்ற முறையில் சென்று அன்பால் பொருந்தி, உங்களிடையே புகுந்து உங்களைப் பிரிக்கத் தவிக்கும் பகைவருடைய சொல்லைக் கேளாமல் இன்று போலவே என்றும் உறவோடு இருங்கள் என குறிப்பிடுகிறார்.

### 4.5.3.அறிவுரை

மன்னரிடத்துப் பரிசில் பெற வந்த புலவர்கள் பரிசீலோடு மீளாது, தக்க அறிவுரைக் கூறிச் செல்லும் மரபை சங்க இலக்கியங்களில் காண முடிகிறது. இம்மரபினையே வள்ளுவர்,

**"இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்**

**கொடுப்பா ரிலானுங் கெடும்"[31]**

எனக் குறிப்பிடுகிறார். ஆளும் வேந்தனிடத்தில் அன்பும் அருளும் நீங்காது நிறைவுற்றிருத்தல் வேண்டும். அவை மன்னன் இடத்தில் இல்லையாயின்,அவன் ஆட்சி நெடிது நாள் நிலைபெற்றிராது . இதனை நரிவெரூஉத்தரலயார் என்னும் புலவர்,

**'அருளும் அன்பும் நீக்கி, நீங்கா**

**நிரயம் கொள்பவரோடு ஒன்றாது, காவல்**

**குழவி கொள்பவரின், ஓம்புமதி**

**அளிதோ தானே, அதுபெறல் அருங்குரைத்தே"[32]**

அருளையும் அன்பையும் ஒழித்துத் தீவினை புரிதலான் நரகத்திலிருந்து நீங்காது இருக்கும் தன்மையை அடைபவர் சிலர், அவரோடு சேராது உன்னால் காக்கப்படும் நாட்டைக் குழந்தையைப் பேணுபவர் போல நின்று நாட்டை பாதுகாக்க வேண்டும் என்று குறிப்பிடுகிறார். உழவுத் தொழிலுக்கு அடிப்படைத் தேவையாக அமைவது நீர் உழவுத் தொழிலைப் போற்ற நினைக்கும் வேந்தன் முதலில் நீர் நிலைகளைப் பெருக்க வேண்டும் என்று அறிவுறுத்துகிறார் புலவர் குடபுலவியனார். பசியும் பிணியும், பகையுமின்றி மக்கள் வாழ வேண்டுமானால் உணவுக்கு குறை உண்டாதல் கூடாது என வலியுறுத்தி,

**‘நீர் இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்**

**உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே,**

**உண்டி முதற்றே யுணவின் பிண்டம்**

**உணவெனப்படுவது நிலத்தோடு நீரே**

**நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு**

**உடம்பு உயிரும்  படைத்திசினோரே”**[33]

நீரின்றி அமையாத உடல் உணவால் அமைவது, உணவையே முதன்மையாகவும் உடையது, உணவு தந்தவர், உயிரைத் தந்தவர் ஆவர். எனவே உணவு எனப்படுவது நிலத்துடன் நீரும் சேர்ந்தது. நிலத்தையும் நீரையும் ஒன்று சேர்த்தவர் இவ்வுலகில் உடலையும் உயிரையும் கூட்டிப் படைத்தவர் ஆவர் என்று நாட்டை காப்பது மன்னனின் கடமை என வலியுறுத்துகிறது பாடல் வரிகள்.

மூவேந்தரும் ஒற்றுமை உணர்வோடும், நாட்டை நன்முறையிற் காக்கும் தூய சிந்தனையோடும் இருக்க வேண்டுமென அறிவுரைக் கூறுவதாக புலவர் பாடல்கள் அமைந்துள்ளன.

**4.6.அஞ்சாமை**

வேந்தரிடத்தில் அன்போடும், அறிவுரையோடும் நடந்து கொண்ட புலவர் அவர்கள் மன்னன் தவறு செய்யும் போது அதனை அஞ்சாது சுட்டிக் காக்கவும் தவறவில்லை. நெடுங்கிள்ளியைக் கோவூர் கிழார்,

**‘அறவை ஆயின்,நினது எனத் திறத்தல்**

**மறவை ஆயின், போரொடு திறத்தல்**

**அறவையும் மறவையும் அல்லையாக**

**திறவாது அடைத்த திண் நிலைக் கதவின்**

**நீள் மதில் ஒரு சிறை ஒழுங்குதல்”**[34]

நீ அறமுடையவனாயின் மதிலை முற்றிருக்கும் நலங்கள்ளியிடம் உள்ளுடையது ‘அவ்வூர்” எனக் கூறி மதிலைத் திறந்து விடுக, வீரமுடையவனாயின் போரின் பொருட்டு மதிலைத் திறப்பாயாக என்று அஞ்சாது உரைப்பதாக அமைந்துள்ளது.

நலங்கிள்ளிக்கும், நெடுங்கிள்ளிக்கும் உறையூர்க் கோட்டையில் போர் தொடங்கியது. நலங்கிள்ளி பெரும்படையுடன் கோட்டையை முற்றிருந்தான். இந்நிலையை தவிர்க்க விழைந்த புலவர் கோவூர்கிழார்.

**‘இரும்பனை வெண் தோடு மலைத்தேன் அல்லன்**

**கருஞ்சினை வேம்பின் தெரிய லோன் அல்லன்**

**நின்ன கண்ணியும் ஆர் மிடைந்தன்றே, நின்னொடு**

**பொருவோன் கண்ணியும் ஆர் மிடைந்தன்றே**

**ஒருவீர் வேறல் இயற்கையையும் அன்றே, அதனால்**

**இருவீர் வேறல் இயற்கையும் அன்றே, அதனால்**

**குடிப்பொருள் அன்று, நும் செய்தி, கொடித்தேர்**

**நும் ஓர் அன்ன வேந்தர்க்கு**

**மெய்ம் மலி உவகை செய்யும் இவ் இகலே"[35]**

பெரிய பனையில் வெண்மையான தோட்டினை மாலையாக அணிந்த சேரனும் அல்லன். கரிய கிளைகளுடைய வேம்பின் மலர்களை மாலையாக அணிந்த பாண்டியனும் அல்லன். உன்னுடைய மாலையும் ஆத்தி மலர்களால் தொடுக்கப்பட்டது. உன்னுடன் போரிடுவோன் மாலையும் ஆத்தி மலர்களால் தொடுக்கப்பட்டது. உம்முள் எவர் ஒருவர் தோற்றாலும் தோற்பவர் உம் சோழர் குடியினரே, என்று ஒரே குடியினுள் போர் வேண்டாம் என, அஞ்சாது அறிவுரை கூறுவதாக அமைந்துள்ளது இப்பாடல் வரிகள். அறிவிலார் செல்வம் இரவலர்க்கு பயன்படாது . எவ்வளவு வறுமையுற்றாலும் அதனை நினையோம். நல்லறிவுடையோர் வறுமையறின் அவரையே பெரிதாக எண்ணி, அவர் வாழ யாமும் வாழ்த்துவோம் என்று புலவர்

**'சீறூர் மன்னர் ஆயினும், எம் வயின்**

**பாடு அறிது ஒழுகும் பண்பினாரே,**

**மிகப் பேர் எவ்வம் உறியும், எனைத்தும்**

**உணர்ச்சி இல்லோர் உடைமைத உள்ளேம்**

**நல்லறிவு உடையோர் நலகுரவு**

**உள்ளுதம், பெரும யாம் உவந்து நனி பெரிதே"[36]**

சிற்றூர் வேந்தராயினும் எம்மிடத்துச் செய்யும் முறைமையை அறிந்து நடக்கும் குணத்தினையுடையவர். யாம் மிகப் பெரிய துன்பமுற்றாலும் சிறிதும் அறிவில்லா தோருடைய செல்வம் பயன்படாமையின் அதனை நினையோம். நல்லறிவுடையவர் மிக்க வறுமையுற்றராயினும், அவ்வறுமை பயன்படுத்தலின் அதனை யாம் மகிழ்ந்து மிகப் பெரிதும் நினைப்பேம் என்று மதுரைக் குமரனார் கூறுகிறார்.

### 4.7. புலவரும் பரிசிலும்

புலவருக்கு வரையாது வழங்கும் பரீசீலராகவும், புரவலராகவும் மன்னர்கள் விளங்கினர். பரிசீல்களைப் பொறுத்த வரையில், புலவர் பெற்றனவற்றையும் வேறுபடுத்திக் காண இயல்வில்லை. “கூற்றுகளாகப்பாடப்பட்ட செய்யுட்களில் அவர்கட்குக் கொடுக்கப்பட்டனவாகச் சுட்டப்படும் பரிசில்கள் யாவும் புலவர்க்கும் அளிக்கப்பட்டவையென்பதில் ஐயமில்லை”[37] என்றுகுறிப்பிடுகிறார் தட்சிணாமூர்த்தி.

புலவர் பெருமக்கள் தமக்கு இன்ன பரிசில் வேண்டுமெனக் கேட்கும் உரிமை பெற்றிருந்தனர். குமணனை வேண்டிப் பெருஞ்சத்திரனார் என்னும் புலவர்

**‘கழும் சோறும் கடைஇ,ஊழின்**

**உள்இல் வறுங் கலம் திறந்து, அழக்கண்டு,**

**மறப் புலி உரைதத்தலும், மதியம் காட்டிலும்**

**நொந்தனளாகி, றுந்தையை உள்ளி,**

**பொடிந்த நின் செல்வி காட்டு”[38]**

மிகத் தொலையாத செல்வத்தை மிகுதியாக விரைவாக, பரிசில் தந்து விடுவதை யாம் விரும்புவோம் என்று புலவர்கள் பரிசில் கேட்டுப் பெறுவதாக இப்பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

‘புலவர்கட்கு யானை, குதிரை, தேர், முதலான ஊர்திகளோடு அருங்கல வெறுக்கையும், பொன்னும், மணியும், முத்தும் யானை மருப்பும், சாந்தமும், ஆணிரையும், நெல்லும் நிலமும், உயர்ந்த ஆடைகளும், இன்சுவையுணர்வும் வழங்கப்பட்டமையை”[39] தட்சிணாமூர்த்தி குறிப்பிடுகிறார். புலவர்க்கு தான் தேடிச் சென்று பரிசில் வழங்கும் தன்மையை,

**‘வாரா ராயினு மிரவலர்வேண்டித்**

**தேரிற் றந்தவர்க் கார்பத னல்கும்**

**நசைசால் வாய்மொழி யிசைசா றோன்றல்”[40]**

வறுமையில்லாமையால் பொருள் பெறுவோர் உன்னைத்தேடி வரமாட்டார் எனினும் நீ அவர்களைத் தேடிச் சென்று, கண்டு தேரில் கொண்டு வந்து உணவளித்து யாவரும் விரும்பும் வாய்மொழியுடைய புகழ்மிக்க தலைவனே என்று பரிசில் நல்கியது, அவர்தம் பரிசில் கொடுத்தது அவரது மறுமை நோக்கியன்று, பரிசிலரின் வறுமை நோக்கியே என்பதை,

**'மறுமை நோக்கின்றோ வன்றே**

**பிறர் வறுமைநோக் கின்றவன் கைவண்மையே"**[41]

பரணர் என்னும் புலவர் குறிப்பிடுகிறார்.

இக்கருத்**தையே உறையூர் ஏணிச்சேரி முட மோசியாகும்.**

**'இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்**

**அறவிலை வணிக னாயலன் பிறகும்**

**சான்றோர் சென்ற நெறியென**

**ஆங்குப்பட்டன் நவன்கை வண்மையே"**[42]

இப்போது செய்யும் அறம், பின்பு பயன்படும் என்று கருதுவார் போல, அறத்தை விலைக்குப் பொருளாக, விற்கும் வணிகன் அல்லன் ஆய்வெள். குணங்களால் நிறைந்த பிறகும் சென்ற வழி இது. என்று அவன் கருதி கொடைத்தன்மை அந்நிலையில் அமைந்தது என்று குறிப்பிடுகிறார்.

சேரலாதன் பல ஆண்டுகள் மழைபெய்யாமல் மாரி பொய்ப்பினும், தன்னை அடைந்தவர் பசித்தீர்த்து வைக்கும் கோமகன் எனக் குமட்ரூர் கண்ணனார்,

**'மன்னுயி ரழிய யாண்டுபல துளக்கி**

**மண்ணுடை ஞாலம் புரவெதிர் கொண்ட**

**தண்ணிய லெழிலி தலையாது மாறி**

**மாரி பொய்க்குவ தாயினும்**

**சேரலாதன் பொய்யல னசையே"[43]**

மண் திணிந்த உலகத்தைக் காப்பதனை ஏற்றுக்கொண்ட குளிர்ந்த மேகம் மாறிப் பல ஆண்டுகள் உயிர்கள் துன்புறாத படி மழை பெய்யாமல் பொய்த்தாலும் சேரலாதன் தன்னை நாடி வந்த பரிசிலரின் விருப்பம் பொய்யாகும் என்று குறிப்பிடுகிறார்.

### 4.8.பகுத்துண்ணும் பண்பு:

அக்கால மக்கள் ஒருவருக்கொருவர் கொடுத்து உதவி சமூக வாழ்க்கையைச் சிறக்கச் செய்தனர். இல்லாமையால் மன்னரையாண்டி பரிசில் பெற்றுப் புலவர் கூடப் பொருளைப் பாதுகாவாது எல்லோருக்கும் கொடுத்துப் பகுத்துண்டு வாழும் பண்புடையராகக் காணப்பட்டனர். குமண வள்ளலிடம் பரிசில் பெற்று வந்த பெருஞ்சித்தரனார் என்னும் புலவர், உதவி பெற வந்தவர் தகுதியை ஆராயாது சுற்றத்தார்க்கும் பிறர்க்கும் வாரி வழங்கினர். இதனை

**'நின் நயந்து உறைநர்க்கும், நீ நயந்த உறைநர்க்கும்**

**பல்மாண் கற்பின் நின்கிளை முதலோர்க்கும்**

**கடும்பின் கடும்பசி தீரயாழ நின்**

**நெடுஞ் குறியெதிர்ப்பை நல்கி யோர்க்கும்**

**இன்னோர்க்கும் என்னாது நீயும்**

**எல்லோர்க்கும் கொடுமதி-மனைகிழவோயே**

**பழம் தூங்கு முதரத்துக் கிழவன்**

**திருந்துவேல் குமணன் நல்கிய வளனே"[44]**

மிக்க வறுமை நிலையில் வாழ்ந்த போதிலும் பொருளைத் தனக்கெண வைத்துக்கொள்ளாத பரிசிலரின் உயரிய மனப்பாங்கை இப்பாடல் வரிகள் வெளிப்படுத்துகின்றன. கழங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் பெரும் பேறாகக் கருதினார்.

**'பகுத்தூண் தொகுத்த ஆண்மை**

**பிறர்க்குஎன வாழ்த்திநீ ஆகன் மாறே"[45]**

பிறர்க்குக் கொடுத்து உண்ணும் தன்மையையும், ஆண்மையையும் உடையவனாக உள்ளாய். அதனால் பிறர்க்காக நீ வாழ்கின்றாய் என்று புலவரின் பகுத்துண்ணும் பண்பை, விளக்குகிறார் புலவர்.

### 4.9.புலவரும் போரும்

மனித வரலாற்றில் ஒவ்வொரு கால கட்டத்தில், ஒவ்வொரு இயல்பு நிலைகள் சிறப்பாகப் போற்றப்படுகின்றன. அவ்வியல்புகளை சங்க இலக்கியங்கள், புலவர் பாடல்களின் கருத்துக் கருவூலத்தால் வெளிப்படுத்துகின்றன. பழந்தமிழருடைய மறப் பண்புகளை மிகுதியாக எடுத்துக்காட்டும். சங்க இலக்கியப் பாடல்கள், புலவர்களால் உருவாக்கப்பட்டவை என்பதை அறியலாம்.

#### 4.9.1.ஈன்றுபுறந் தருதல்

வீரனுக்குரிய கடமையாக, மகளைப் பெற்று வளர்த்தல் தாயின் கடமை என்றும் வீரனாகுதல் தந்தையின் கடமை என்றும் போருக்கு வேண்டிய வேலைகளை ஆக்கிக் கொடுத்தல் கொல்லனுக்கு கடமை என்றும் நல் ஒழுக்கங்களையும் நிலங்களையும் தருதல் அரசருக்கு கடமை என்றும், அரிய போரில் யானையை அழித்து வெற்றியுடன் திரும்புதல் வீரனுக்குக் கடமை என்றும், களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே கடமைகளை பொன்முடியார் என்னும் புலவர்,

**'ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே**

**சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே**

**வேலவடித்துக் கொடுத்தல் கொலலற்குக் கடனே**

**நன்னடை நலகல் வேந்தருக்குக் கடனே**

**ஒன்றுவாள் அருஞ்சமம் முருக்கி"**[46]

என்ற பாடல் வரிகள் வெளிப்படுத்துகிறார்.

பழங்கால மறவர்கள் வீரத்தன்மை பெற்று திகழ்ந்தமையால் தான் சங்க இலக்கியகளை வீரயுகப்பாடல்கள் எனக் குறிப்பிடுகிறோம். 'மறவர்களின் வீர இயல்பை முதன்மையாக்கிப் படைக்கப்பட்ட பாடல்கள் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றிருந்தால் சங்க காலத்தை வீரவுழிக் கால என்பார்"[47]. இதனை நா.செயராமன் அவர்கள், சங்க காலத்தை மறம் மட்டுமே செறிந்த வீரவுழிக்காலம் என்பதை மறுப்பார்" வீரத்தை மறுப்பதும் ஏற்பதும், இருவரின் வேறுபட்ட கருத்தாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

அரசுகள் தோன்றி நிலைபெற்றுவிட்ட பின்பு தனிமனித வீரமும், பெருமையும் புறக்கணிக்கப்பட்டு, அனைத்து புகழும் அரசனுக்கு உரிமையாயின 'சங்க இலக்கியங்களின் பொருளடக்கத்தை நோக்க, சங்க காலத்தை முற்றுமாக வீரவுழிக் காலம் என்பது பொருத்தம் அற்றுப் போகிறது. எனினும் தமிழிலக்கிய வரலாறு மறவர்களை மாண்புறுத்திப் பாடும் வீரவூழியைப் பெற்றிருந்தது. அவ்வாறு அது பெற்றிருந்த காலம், சங்க காலத்திற்கு முற்பட்ட காலமாகும்"[48] புறநானூற்றுப் பாடல்கள் மிகுதியாகப் போர் குறித்த கருத்துக்களை வெளிப்படுத்துகின்றன. அதிலும் பாடாண் திணைப் பாடல்களே மிகுதி, போர் இல்லாத நாள்களில் தம்முடைய பூரித்த தோள்களைத் தட்டி நடுவரோடொருவர் பொருது மடிய வேண்டும் என்ற மறபண்பு கொண்டு விளங்கினர் என்று,

**' புட் பனக்கு**

**ஏவான் ஆகலின், சாவேம் யாம், என,**

**நீங்கா மறவர் வீங்கு தோள் புடைப்ப”**[49]

தமக்குள் உட்பகை தோன்றயதால், பகைவர்க்குப் பறவைகள் செய்யும் தீய குறிகளுடைய போர்க்களத்திற்கு வீரரை ஏவான், நாங்கள் மடியமாட்மோம் என்று வருந்தி நீங்காத வீரமுடைய, வீரர் தம்முடைய பருத்த தோளைத் தட்டுவர் புலவர் கோவூர் கிழார் சோழன் நலங்கிள்ளியைப் பாடியுள்ளார்.

### 4.9.2 செருமுக நோக்கிச் செல்கென விடுமே

நடந்த போரில் தன் தந்தையையும், நேற்று நடந்த போரில் தன் கொழுநனையும், இழந்த பின்னரும் இன்றும் போர் பறை ஒலிப்பதைக் கேட்டு தன் ஒரே மகனை வெள்ளுடை உருத்தி, வேலைக் கையில் கொடுத்துப் போருக்கு அனுப்பும் மறக்குடி பெண்டிரின் மாண்பினை புறநானூறு எடுத்துக்காட்டுகிறது.

**“கெடுக சிந்தை, கடிதுஇவள் துணிவே**

**மூதில் மகளி ராதல் தருமே**

**மேலநாள் உற்ற செருவிற்கு இவள் தன்னை,**

**யானை எறிந்து, களத்து ஒழிந்தனனே,**

**நெருநல் உற்ற செருவிற்கு இவன் கொழுநன்,**

**பெருநிரை விலங்கி, ஆண்டுப் பட்டனே,**

**இன்றும், செருப்பறை கேட்டு, விருப்புற்று, மயங்கி,**

**வேல்கைக் கொடுத்து, வெளிதுவிரித்து உடீஇப்,**

**பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி**

**ஒரு மகன் அல்லது இல்லோன்**

**செருமுகம் நோக்கி செல்க என விடுமே”[50]**

இவள் எண்ணம் கெடுக இவள் ஊக்கம் துணிவானதே, இவள் முதுக்குடிப் பெண் என்பது தரும். முதல் நாளில் ஏற்பட்டடோருக்கு இவள் தந்தை சென்று போர்க்களத்தில் யானையை வீழ்த்தி தானும் இறந்தான். அடுத்த நாள் நிகழ்ந்த போருக்கு இவள் கணவன் சென்று பெரிய பசுக்கூட்டம் மீட்டுத் தந்து அங்கு இருந்தன. இன்றும் போர்ப்பறை கேட்டு விரும்பியவளாய் ஈடுபட்டு வேலைக் கையில் தந்து வெண் பட்டினை உடுத்தி, உலர்ந்த தலைக்கு எண்ணெய் தடவித் தன் ஒரே மகனைப் போர்க்களம் நோக்கிச் செல்க என அனுப்புகின்றாள் என்று புலவர் ஒக்கூர் மாசாத்தியார் முதுகுடிப்பெண்டிரின் மறப்பண்பினை எடுத்துக் காட்டுகிறார்.

புலவர், மன்னனை நோக்கி ஏவல் செய்து வாழாமையினாலே உன்னாடானது, பகைத்தலைச் செய்தவருடைய நாடு களன் கெட்டுப் பாழாகிவிட்டன என்று நெடுஞ்செழியனின் வீரச் செயலை மாங்குடி மருதனார்,

**“வாழா மையின் வழிதவக் கெட்டு**

**பாழாயின நின் பகைவர் தேஎம்”[51]**

நின் சொல் கேட்டு வாழாதலால் வாழும் வழிகள் முழுவதும் கெட்டுப் பாழாயின நின் பகைவருடைய நாடு என்று குறிப்பிடுகிறார்.

கோற்றுறைத் குற்றில மாதோ வென்று

அரசரிடையே புலவர்க்கு மிகுந்த மதிப்பு இருந்தமையாலேயே இவர்கள் புலவரைத் தூதராகவும் அனுப்பினர். புலவர்கள் தூதுத் தொழிலைச் செவ்வனே செய்து முடிக்கும் ஆற்றல் உடையவர் என்பதை, ஔவையாரே உரையாக,

**“இவ்வே, பீலி அணிந்து, மாலை சூட்டி**

**குணட திரள் நோன் காழ் திருத்தி, ரெய் அணிந்து,**

**கடியுடை வியல் நகரவ்வே,அவ்வே,**

**பகைவர்க் குத்தி, கோடு, நிதி, சிதைந்து**

**கொல்துறைக் குற்றிலமாதோ-என்றும்”[52]**

பெண்டிரும் தூது சென்ற சிறப்புக்குரியவர் என்பதை, தன்னுடைய வீரமுணர்ந்த நிலையில் தொண்டைமான்பால் இரங்கிய அதியமான் ஔவையை தூதாக விடுவித்தான். ஆவன் கருதியபடி தூது சென்று துணிவுடன் உரைத்தமையை விளக்குகிறது இப்பாடல்,

### 4.9.4 மலைத்தனை யென்பது நாணுத்தக வுடைத்தே

புறத்தே வந்து போர் செய்யாது அஞ்சி நடுங்கி, நாட்டுப் பாதுகாவலைக் கவனியாது, மான்மின்றி மகிழ்வோடிருந்த ஒரு சேர மன்னனின் தலைநகராகிய அவனின் காவல் மரத்தை வெட்டினான். வேட்டும் ஓசை ஊரிலுள்ள மன்னனின் காவலை உடைய கோயிற்கண்ணே சென்றொலித்து. அதற்கும் வெளிப்பாடாது நாணமின்றி இருந்தான் மன்னன். இத்தகைய மன்னனோடு நீயும் முரசொலிப்பப் பொருந்தாய் என்பது கேட்டார்க்கு நானும் தகுதியை உடைத்து என்று கூறிச் சோழ மன்னனின் போர்ச் செயலைத் தடுக்க முயறன்றமையை,

**“கடி மரம் தடியும் ஓசை தன் ஊர்**

**நெடு மதில் வரைப்பின் கடி மனை இயம்ப,**

**ஆங்கு இனிது இருந்த வேந்தனொடு, ஈங்கி, நின்**

**சிலைத் தார் முரசம் கறங்க,**

**மலைத்தனை என்பது நாணுத் தகவு உழைத்தே”[53]**

என்ற பாடல் வரிகளின் மூலம் அறிய முடிகின்றது.

### 4.9.5 கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்

வெண்ணிப்பறத்தலையிற் கரிய பனங்குருத்தில் அலா்ந்த ஒலையையும், கரிய கொம்பினையுடைய வேம்பின் அழகிய தளிராற் செய்த மாலையையும், அடையாளப் பூக்களைச் சிறப்புறச் சோழா் சூடினாா் என்பதை, பொருநராற்றுப்படை உணா்த்துகிறது.

**“இரும்பனம் போந்தைத் தோடும், கருஞ்சினை**

**அரவாய் வேம்பின் அம்குழைத் தெரியலும்**

**ஓங்கு இருஞ் சென்னி மேம்பட மிலைந்த**

**இருபெரு வேந்தரும் ஒரு களத்து அவிய,**

**வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்தான்**

**கண்ஆர் கண்ணி, கரிகால் வளவன்”**[54]

வெண்ணிப் பறத்தலை என்ற இடத்தில் பனம்பூவைச்சூடிய சேரனையும், வேப்பமாலையை அணிந்த பாண்டியனையும் ஒரே நேரத்தில் வென்று வாகை சூடினான் என்று கரிகாலனின் ஆற்றலை முடத்தாமக்கணியாா் எடுத்துக் காட்டுகிறாா்.

புலவா்கள் மன்னா்களோடு நெருங்கி உறவாடினா் என்பதோடு, போா்த்தொழிலும் மன்னா்களுக்கு பக்கத் துணையாக இருந்தனா் என்பதை சங்க இலக்கியங்கள் மூலம் அறிய முடிகின்றது.

**4.10 முடிவுரை:**

❖ சங்கப் புலவா்கள் தம் முதிா்ந்த புலமையாலும் அறிவுத்திறனாலும் தம் இயல்புணா்ச்சியிலேயே மரபுக்கு இன்றியமையாமை கொடுத்து, இலக்கியத்தை தடையாக இடையூறாகவோ நினையாமல் மிகச் சிறந்த சங்கப்பாடல்களை உலகிற்கு வழங்கயுள்ளனா் என்பது இவ்வியலின் மூலம் புலப்படுகிறது.

❖ புலவர், கல்வி கேள்வி, ஒழுக்கங்களில் சிறந்து விளங்கியதோடு நற்பண்புகளையும் தம் வாழ்க்கையாகக் கொண்டு வாழ்ந்தனர் என்பதைச்சங்கப்பாடல்கள் உணர்த்துகின்றன.

❖ சங்க காலத்தில் புலவர்களை சான்றோர் என்னும் சொல்லால் வழங்கயமையை சங்க இலக்கியங்களின் மூலம் அறிய முடிகின்றது.

❖ சங்கப் புலவர்கள் கல்வியறிவையும், கலை வேட்கையையும் பரிசளிக்கத்தக்க பொருள் வளமும் கொண்ட மன்னரையும் பிற செல்வங்களையும் கருத்திற் கொண்டு செய்யுட்கள் இயற்றினர் என்பது புலனாகிறது.

❖ பண்டை காலப் புலவர்களுக்கு மன்னர்கள் பொருளை வழங்கினர். புலவர்களும் பொருளை ஏற்று தம் வாழ்வாதாரத்தை மேற்கொண்டனர்.ஈவோரும், ஏற்போரும் என்னும் நிலை ஒரு பகுதியே, முழுமையானது அன்று.

❖ புலவர்கள் மன்னரிடத்து தாம் கூறமுனைந்த கருத்தை அஞ்சாது எடுத்துரைத்தமையை சங்க இலக்கியப் பாடல்கள் உணர்த்துகின்றன.

❖ சங்க இலக்கியங்களில் புறத்திணைப்பாடல்களில் ஒரு புலவர் பல தலைவர்களைப் பாடியுள்ளமையையும், பல புலவர்கள் ஒரு மன்னனையும் பாடியுளமையையும் காண முடிகின்றது.

❖ மூவேந்தருள் சேர வேந்தனின் கொடைப் பண்பு குறிப்பிடத்தக்கதாய் அமைந்துள்ளது. புலவர்க்கு கொடை மடம் வழங்கியமையை பதிற்றுப்பத்தின் மூலம் நன்குஅறியலாம்.

❖ கலைஞர்களைப் போலவே புலவர்களும் பகுத்துண்டு வாழ்ந்தனர் என்பதற்கு சங்க இலக்கியங்கள் சான்று.

## இயல்-4

## சங்ககாலப் புலவர்களின் சமூகப் பொருளாதாரப் பதிவுகள்

**குறிப்புகள்:**

1. தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், ப.263.
2. மேலது, பக்-263-264.
3. மேலது, ப-264.
4. குருவம்மாள்.மு. பண்பு பாராட்டும் உலகு, ப-31.
5. புறநானூறு, பக்-470-471.
6. தட்சிணாமூர்த்தி,சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்,ப-264.
7. புறநானூறு, பக்-188-189.
8. மேலது, ப-462.
9. மேலது, ப-141.
10. மேலது, ப-420.
11. மேலது,ப-368.
12. மேலது,ப-98.
13. மேலது,ப-6.
14. ஞானசம்பந்தன்.அ.ச. அகமும் புறமும், ப-306.
15. ந.சண்முகம்பிள்ளை, சங்கத் தமிழர் வாழ்வியல், பக்-265-266.
16. நற்றினை, பக்-429-430.
17. மேலது,ப-603.
18. குறுந்தொகை,ப-515.
19. பதிற்றுப்பத்து, பக்-120-121.
20. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம் தெளிவுரை, பக்-434-435.
21. அகநானூறு, ப-339.
22. குறிஞ்சிப்பாட்டு, ப-467.
23. கலித்தொகை,ப-581.
24. முத்துலட்சுமி.வே, தமிழரின் வாழ்வியல் நெறிகள், பக்-39-40.

25. இராமலிங்கம்.அரங்க, சங்க இலக்கியத்தில் வேந்தர்,ப-60.

26. பொருநராற்றுப்படை,பக்-96-117.

27. புறநானூறு, பக்-143-144.

28. மேலது, பக்-711-712.

29. பொருநராற்றுப்படை, பக்-89-109.

30. புறநானூறு, பக்-856-857.

31. மேலது,பக்-576-577.

32. மேலது,பக்-14-15.

33. மேலுது,பக்-123-124.

34. மேலது,பக்-125-126.

35. மேலது, பக்-476-477.

36. தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனிதஉறவுகள்,ப-281-282

37. புறநானூறு,ப-376-377.

38. தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்,ப-282.

39. பதிற்றுப்பத்து, ப-97-98.

40. புறநானூறு,ப-650.

41. மேலது, பக்-642-643.

42. பதிற்றுப்பத்து, ப-64.

43. புறநானூறு,ப.324.

44. பதிற்றுப்பத்து,ப.43.

45. புறநானூறு,ப-806.

46. K.Kailasapathy,Tamil Heroic Poetry,pg-229-271.

47. நா.செயராமன், சங்க இலக்கியத்தில் பாடஎண்திணை, பக்-310-311.

48. க.ப.அறவாணன், அற்றை நாட்காதலும் வீரமும், ப-238.

49. புறநானூறு, பக்-177-178.

50. புறநானூறு,பக்-780-781.

51. மதுரைக்காஞ்சி, ப-300.

52. புறநானூறு, பக்-229-230.

53. புறநானூறு,பக்-102-103.

54. பெருணாற்றுப்படை,ப-125.

# முடிவுரை

- சங்ககால மக்கள் தங்களிடையே தலை சிறந்த அம்சங்களைக் கொண்டிருந்தனர் என்பதற்கு திணைப் பாகுபாடு தக்க சான்றாகும்.
- மனித குடியேற்றங்கள் நிரந்தரமாக அமைவதற்கு முன்பு உணவு சேகரித்தலையும், வேட்டையாடுதலையும் , புன்புல வேளாண்மையையும் ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்தனர் குறிஞ்சி நில மக்கள் என்பதை அறிய முடிகின்றன.
- குறிஞ்சியில் உணவு உற்பத்தியைவிட உணவு சேகரித்தலே முக்கிய ஆதாரமாக அமைந்தது என்பது தெளிவுற விளக்கப்பட்டுள்ளன.
- ஆநிரை மேய்த்தலையும், ஆநிரைகள் மூலம் கிடைக்கக் கூடிய தயிர், மோர் (பால் - பால்படு பொருள்கள்) ஆகியவை முல்லைத் திணையின் பொருளாதாரச் செயற்பாடுகளை அறிவதற்கு உதவுகின்றன என்பது இந்த ஆய்வின் மூலம் புலப்படுகின்றன.
- வேளாண்மையின் தொடக்கத்திற்கு குறிஞ்சி நிலமே அடிப்படை. ஏனெனில் மக்கள் வேட்டையாடி வாழும் சமூக வாழ்விலிருந்து விலகி வேளாண்மையை மேற்கொள்ளத் தொடங்கியமையை சங்க இலக்கியங்கள் எடுத்துக்காட்டுகின்றன.
- இனக்குழுச் சமூகமாக வாழ்ந்த மக்கள் கூட்டம் அந்நிலையிலிருந்து பின்பு தனித்தனியாக வாழத் தொடங்கினர். இதற்கு மருதத் திணை தக்க சான்றாகும்.
- நிலம் என்பது பொதுச் சொத்தாக இருந்து உடைப்பொருளாக மாறிய பின்பு பொருளாதாரத்திலும் ஏற்றத்தாழ்வுகள் உருவாகியமையை புலப்படுத்துகின்றது இந்த இயல்.
- சங்ககாலத்தின் பொருளாதாரச் செயற்பாடுகளுக்கு பண்டமாற்று , வாணிபம் ஆகியவை முதன்மை ஆதாரமாக விளங்கியமை உறுதிப்படுத்தப்படுகின்றன.
- மருதம் , நெய்தல் நிலங்கள் பொருளாதார வளமையில் கோலொச்சியதனை அறிய முடிகின்றது.

- திணைசார்ந்த மக்கள் உணவுப் பொருட்களின் தேவை அறிந்தும் சேமிக்காமல் பகுத்துண்டு வாழ்ந்தனர். இப்போக்கிலிருந்து மாறி தங்களுக்கென தனியொரு உடைமையை கொண்டு வாழக் கற்றுக் கொண்ட தன்மையை சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன.
- பண்டைத் தமிழரின் பொருளாதாரச் செயற்பாடுகளை அறிந்து கொள்ள பண்டமாற்றும் வாணிபமும் முதன்மைத்துவம் பெருகின்றது என்பதை இந்த ஆய்வின் மூலம் அறிய முடிகின்றது.
- பண்டமாற்று முறையையும், நிலம் சார்ந்த மக்களின் உற்பத்தி முறைகளையும், அம்மக்களின் தொழில்களையும் அடிப்படையாக வைத்தே நடைபெற்றன என்பது புலப்படுகிறது.
- உப்பு, நெல், அரிசி, மீன், யானைத் தந்தம் முதலிய பல்வேறு பொருட்கள் சங்ககால மக்களிடையே பண்டமாற்று செய்யப்பட்டமையை அறிய முடிகின்றது.
- பண்டமாற்றை அடியொற்றியே உருவான நாணயமாற்று முறை, வெளிநாட்டினரின் வருகையால் உருவாயின என்பதும், அதற்கு நெய்தல், குறிஞ்சி, நிலத்தில் உற்பத்தி செய்யப்பட்ட பொருட்கள் முழுமுதற்காரணமாக அமைந்தன என்பதம் தெளிவாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.
- சங்க கால நாணய முறை என்பது காசு, பொன், அரசின் சின்னங்கள், உலோகத்தால் செய்யப்பட்டிருந்தன.
- சங்ககால எடைகள், பேரெண்களாகவும், பின்னங்களாகவும் காணப்பட்டன. சங்ககாலத்தில் வெள்ளம், ஆம்பல், தாமரை ஆகியன எடையின் மதிப்பு அளவைக் குறிக்கப் பயன்படுத்தப் பட்டன என்பது தெரிகிறது.
- அரசு உருவாக்கத்திற்கு பின்பு நாணயங்களின் புலக்கம் அதிகமாகக் காணப்பட்டன என்பதும், பெண்கள் முதற் தொட்டே தங்க நாணயங்களை அரைஞானாக அணிந்திருந்தனர் என்பதும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.
- அளவைகள் என்பது சங்ககாலத்தில் முகத்தல் அளவைகளாகவும், நீட்டல் அளவைகளாகவும் பயன்படுத்தப்பட்டன. அவை, துணி, மரக்கால், அம்பணம்

பதக்கு என்ற முகத்தல் அளவைகளாளும், ‘அணு,தேர்த்து, இம்மி,எள்,பெருவிரல் என்ற நீட்டல் அளவைகளாகவும் அளக்கப்பட்டன. இத்தகைய பல்வேறு செயற்பாடுகளினால் பண்டமாற்று முறை, வாணிபம் ஆகியன சங்ககாலத்தில் நடைபெற்றமைத் தெளிவாகப் புலப்படுகிறது.

- வாய்மொழிப் பாடல்கள் தோன்றிய போதே மனிதனுக்குள் கலைகளும் கலைஞர்களும் தோன்றினர்.
- கலைஞர்கள் கலைத் தொழிலை தங்களது வாழ்க்கை ஆதாரமாகவே கொண்டிருந்தனர்.
- கலைஞர்களில் பாணர், கூத்தர், பொருநர், விறலி குறித்து ஆராய்ந்துள்ளது இந்த இயல்.
- சங்க இலக்கியங்கள் கலைஞர்களின் வறுமை நிலையை எடுத்துக் கூறி, பின்பு கலைஞனே வழிப்படுத்தி மன்னனிடமும் மக்களிடமும் கலைஞர்களை ஆற்றுப்படுத்துவதாக அமைந்துள்ளது.
- கலைஞர்கள் மன்னனைக் காணச் செல்லும்போது கலைத்திறமையை மட்டுமல்லாது, மன்னனின் பண்புகளையும், புகழ்ந்து பாடிய தன்மைப் புலப்படுகிறது.
- கலைஞர்கள் வயிற்றுப்பசி காரணமாக புரவலரை நாடிச் சென்று பரிசில் பெற்று வந்தமையையும், தங்களது கலைத் திறமையை வெளிப்படுத்தியமையையும் அறிய முடிகின்றது.
- கலைஞர்கள் தலைவன், தலைவி இருவருக்கும் ஊடல் தீர்க்கும் வாயிலாக இருந்தமையை அறிய முடிகின்றது.
- இன்றைய காலகட்டங்களை நினைத்துப்பார்க்கும் போது அன்றைய காலகட்டங்களில் கலைஞர்கள் மதிக்கப்பட்டமை புலப்படுகிறது.
- கலைஞர்களின் பொருளாதார நிலை என்பது சங்க கால திணை மக்களையும், மன்னனையும் நம்பியே இருந்தன என்பது புலப்படுகிறது.
- கலைஞர்கள் இனக்குழுவாக வாழ்ந்ததால் சேமிக்கும் வழக்கம் இல்லை. ஆதலால் சமூகப் பொருளாதாரத்தில் பின்தங்கியே இருந்தனர்.

- சங்க இலக்கியங்களினுள் புறநானூறும், ஆற்றுப்படை இலக்கியங்கள் என அழைக்கப்பெறும் பத்துப்பாட்டும், கலைஞர்களைக் குறித்து மிகுதியாக வெளிப்படுத்துகின்றன. கலைஞர்கள் சமூகத்தில் மதிக்கப்பட்டாலும்,புலவருக்கு அடுத்த நிலைலேயே இருந்தனர். புலவர்களே முதன்மைப்படுத்தப்பட்டனர்.
- கலைஞர்கள் சமூகத்தின் பார்வையில் கலைத்திறமையோடு காணப்பட்டாலும், அவர்களுடைய வாழ்வாதாரத்தை ஆராயும்போது,வயிற்றுப்பிழைப்புக்கு மற்றவர்களை நம்பியே இருந்தனர் என்பது புலப்படுகிறது.
- சங்கப் புலவர்கள் தம் முதிர்ந்த புலமையாலும் அறிவுத்திறனாலும் தம் இயல்புணர்ச்சியிலேயே மரபுக்கு இன்றியமையாமை கொடுத்து, இலக்கியத்தை தடையாக இடையூறாகவோ நினையாமல் மிகச் சிறந்த சங்கப்பாடல்களை உலகிற்கு வழங்கயுள்ளனர் என்பது இவ்வியலின் மூலம் புலப்படுகிறது.
- புலவர், கல்வி கேள்வி, ஒழுக்கங்களில் சிறந்து விளங்கியதோடு நற்பண்புகளையும் தம் வாழ்க்கையாகக் கொண்டு வாழ்ந்தனர் என்பதைச்சங்கப்பாடல்கள் உணர்த்துகின்றன.
- சங்க காலத்தில் புலவர்களை சான்றோர் என்னும் சொல்லால் வழங்கயமையை சங்க இலக்கியங்களின் மூலம் அறிய முடிகின்றது.
- சங்கப் புலவர்கள் கல்வியறிவையும், கலை வேட்கையையும் பரிசளிக்கத்தக்க பொருள் வளமும் கொண்ட மன்னரையும் பிற செல்வங்களையும் கருத்திற் கொண்டு செய்யுட்கள் இயற்றினர் என்பது புலனாகிறது.
- பண்டை காலப் புலவர்களுக்கு மன்னர்கள் பொருளை வழங்கினர். புலவர்களும் பொருளை ஏற்று தம் வாழ்வாதாரத்தை மேற்கொண்டனர். ஈவோரும், ஏற்போரும் என்னும் நிலை ஒரு பகுதியே, முழுமையானது அன்று.
- புலவர்கள் மன்னரிடத்து தாம் கூறமுனைந்த கருத்தை அஞ்சாது எடுத்துரைத்தமையை சங்க இலக்கியப் பாடல்கள் உணர்த்துகின்றன.
- சங்க இலக்கியங்களில் புறத்திணைப்பாடல்களில் ஒரு புலவர் பல தலைவர்களைப் பாடியுள்ளமையையும், பல புலவர்கள் ஒரு மன்னனையும் பாடியுளமையையும் காண முடிகின்றது.

- மூவேந்தருள் சேர வேந்தனின் கொடைப் பண்பு குறிப்பிடத்தக்கதாய் அமைந்துள்ளது. புலவர்க்கு கொடை மடம் வழங்கியமையை பதிற்றுப்பத்துபத்தின் மூலம் நன்கு அறியலாம்.
- கலைஞர்களைப் போலவே புலவர்களும் பகுத்துண்டு வாழ்ந்தனர் என்பதற்கு சங்க இலக்கியங்கள் சான்று.
- இறுதியாக சங்க இலக்கியத்தில் சமூகப் பொருளாதாரத்தை ஆராயும் போது மனித உழைப்பு , உழைப்பு சார்ந்த உற்பத்தியில் ஏற்றத்தாழ்வுகள் உருவாகியமையால், பொருளாதாரத்திலும் ஏற்றத் தாழ்வுகள் காணப்பட்டது என்பதை அறிய முடிகின்றது.

## மேலாய்வுக்குரிய களங்கள்:

1. மார்க்கசிய தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு சங்க இலக்கியங்களை அரசியல் சார் பொருளாதார நோக்கில் ஆய்வு செய்வது.
2. சமூகவியல் வைத்து சங்ககால சமூகத்தின் பொருளாதாரக் கொள்கைளை ஆராய்வது.
3. வணிகம் - சங்ககாலம் முதல் இக்காலம் வரை மாற்றம் பெறும் முறை ஆராய்வது.

## துணை நூற்பட்டியல்

### முதன்மை ஆதாரங்கள்:


1. உ.வே.சாமிநாதையர் (ப.ஆ)., "பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியருரையும்" கபீர் அச்சுக்கூடம், சென்னை. ஆறாம் பதிப்பு-1961
2. ச.வே.சுப்பிரமணியன்., "சங்க இலக்கியம் எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும்" மணிவாசகர் பதிப்பகம், பாரிமுனை. சென்னை. முதற்பதிப்பு-2010.
3. சுப்பிரமணியன் ச.வெ., "சங்க இலக்கியம் பத்துப்பாட்டு மூலமும் தெளிவுரையும" பாரிமுனை, சென்னை. முதற்பதிப்பு-2010.
4. பரிமணம்.அ.மா.(ப.ஆ) பாலசுப்பிரமணியன்.கு.வெ.(ப.ஆ) "புறநானூறு மூலமும் உரையும்" நியு செஞ்சுரிபுக் ஹவுஸ், சென்னை. முதற்பதிப்பு-2004 மூன்றாம் அச்சு-2007

5. பரிமணம்.அ.மா.(ப.ஆ)
பாலசுப்பிரமணியன்.கு.வெ.(ப.ஆ)

"நற்றிணை
மூலமும் உரையும்"
நியு செஞ்சுரிபுக் ஹவுஸ்
சென்னை.
முதற்பதிப்பு-2004.
மூன்றாம் அச்சு-2007.

## துணைமை ஆதாரங்கள்


1 அறவாணன்,க.ப., "அற்றைநாட் காதலும் வீரமும" பாரி நிலையம், சென்னை. முதற்பதிப்பு-1971

2 அருணாச்சலம்., "தமிழ் இலக்கிய வரலாறு" சாந்தி வித்தியாலயம், மாயவரம்-1970 முதற்பதிப்பு

3 இளம்பூரணர் (உ.ஆ)., "தொல்காப்பியம் பொருளதிகாரம்" சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் மதுரை முதற்பதிப்பு—1960

4 கார்த்திகேசு சிவதம்பி "பண்டைத் தமிழ்ச் சமூகம்" (வரலாற்று புரிதலை நோக்கி) நியு செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை. முதற்பதிப்பு-2010

5 கணேசையர்(ப.ஆ)., "தொல்காப்பியம் பொருளதிகாரம் நச்சினார்க்கினியம்" திருமகள் அழுத்தகம், முதற்பதிப்பு-1948

6 கமலையா.க.சி., "தமிழக நுண்கலைகள்" பாரி நிலையம், சென்னை. முதற்பதிப்பு-1978.

7 குருவம்மாள்.மு., "பண்பு பாராட்டும் உலகு"
ஜ்வாலா பதிப்பகம்,
குருமணி இல்லம்,
திண்டுக்கல்.
முதற்பதிப்பு -2002 .

8 கோதண்டராமன். "இந்தியக் கலைகள்"
நியு செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை.
முதற்பதிப்பு-1987.

9 சசிவல்லி.வி.சி., "பண்டைத் தமிழர் தொழில்கள்"
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
முதற்பதிப்பு-1989.

10 சண்முகப்பிள்ளை.க., "சங்கத் தமிழர் வாழ்வியல்"
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
முதற்பதிப்பு-1997.

11 சிவசுப்பிரமணியன்.ஆ., "வரலாற்றுப் பொருள்முதல்
வாதம்லூர் அரிச்சுவடி"
நியு செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை.
முதற்பதிப்பு-2009.

12 சீனிவாசன்.ந., "பொதுப் பொருளாதாரம்"
மீனாட்சிப் பதிப்பகம்,
மதுரை.
மறுபதிப்பு-2000.

13 சுப்பிரமணியன் ச.வே., "தொல்காப்பியம் தெளிவுரை"
மணிவாசகர் பதிப்பகம்,
பாரிமுனை.
சென்னை.
முதற்பதிப்பு-2010.

14 சுப்பிரமணியன்., "சங்க கால சமுதாயம்"
நியு செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை.
முதற்பதிப்பு-2011.

15 செயராமன்.நா "சங்க இலக்கியத்தில் பாடாண்திணை"
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை.
முதற்பதிப்பு-1975

16 சுவாமிநாதன்.ஏ., "சங்க கால வரலாறு"
விஜயா சபரி பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு-1994.

17 செல்வராசு., "சங்க இலக்கியத்தில் பாழ் நிலப் பயணம்"
ஸ்ரீ நிதி பிரிண்டர்ஸ்,
திருச்சி.
முதற்பதிப்பு-2006.

18 சோமசுந்தரனார்., "புறப்பொருள் வெண்பாமாலை"
கழக வெளியீடு
சென்னை
ஐந்தாம் பதிப்பு-1969

19 ஞானசம்பந்தன்.அ.ச., "அகமும் புறமும்"
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
முதற்பதிப்பு-1991

20 தட்சிணாமூர்த்தி., "சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்"
மங்கையர்கரசி பதிப்பகம்,
தஞ்சாவூர்.
முதற்பதிப்பு-2001.

21 தமிழண்ணல்., "சங்க மரபு"
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை.
முதற்பதிப்பு-2009

22 தர்மராஜன்.எம்.ஏ(மொழி.பெ)., "வரலாற்றுப்பொருள் முதல்வாதம்" ஓர் அரிச்சுவடி"
நியு செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை.
முதற்பதிப்பு-1985.

23 திருநாவுக்கரசு, "திருக்குறள்நீதி இலக்கியம்"
சென்னைப் பல்கலைக் கழகம்,
சென்னை.
முதற்பதிப்பு-1970.

24 துரை.சு., தமிழிலக்கிய ஆய்வுகளில் மார்க்சிய நோக்கு,
காவ்யா வெளியீடு,
பெங்களூர்.
முதற்பதிப்பு-2000

25 நவநீத கிருட்டிணன்.மா., "தமிழ் இலக்கியத்தில் ஆற்றுப்படை"
குறிஞ்சி மலர் வெளியீடு,
மதுரை.
முதற்பதிப்பு-1988.

26 பாலுச்சாமி.நா., "பொருளியற் சிந்தனைகள்"
மதுரைக் காமராஜ் பல்கலைக்கழகம்,
மதுரை.
முதற்பதிப்பு-1999

27 பாக்ய மேரி .எ.்.ப்., "காலந்தோறும் தமிழர் கலைகள்"
பூவேந்தன் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு-2005.

27 பெருமாள்சாமி.வெ., "சங்ககாலத் தமிழகத்தின் சமூகநிலை"
செம்மலர்,
மதுரை.
முதற்பதிப்பு-2006.

28 மாதையன்.பெ., "சங்க இலக்கியத்தில் குடும்பம்"
நியு செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை.
முதற்பதிப்பு-2010.

29 முத்து வீராசாமி நாயுடு., "இலக்கியச் செல்வ"
சைவ சித்தாந்த நூற்பதிக்கழகம்,
சென்னை.
முதற்பதிப்பு-1954.

30 முத்துலட்சுமி.வே., "தமிழரின் வாழ்வியற் நெறிகள்"
அனிதா பதிப்பகம்,
திருச்சி.
முதற்பதிப்பு-2004.

31 வரதராசன்., "தமிழ்ப்பாணர் வாழ்வும் வரலாறும"
கவிக்குயில் அச்சகம்,
சென்னை.
இரண்டாம் பதிப்பு-2007.

32 வித்தியானந்தன்., "தமிழர் சால்பு"
குமரன் புத்தக நிலையம்,
சென்னை.
முதற்பதிப்பு-2006.

33 வேங்கடசாமி.மயிலை.சீனி., "பழங்காலத் தமிழர் வாணிகம்"(சங்க காலம்),
நியு செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை.
முதற்பதிப்பு-1995.

34 இராச மாணிக்கனார்.மா., "பத்துப்பாட்டு ஆராய்ச்சி,"
சென்னைப் பல்கலைக் கழகம்,
சென்னை.
முதற்பதிப்பு-1970.

35 இராமலிங்கம்.அரங்க., "சங்க இலக்கியத்தில் வேந்தர்"
மீனாட்சி பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு-2008.

36 ஜார்ஜ் தாம்ஸன்(மொ.ஆ) தமிழாக்கம்.ராஜதுரை.எஸ்.வி "முதலாளியும் அதன் பிறகும்"
விடியல் பதிப்பகம்,
கோவை.
முதற்பதிப்பு-2005.

இதழ்

1 ரவிக்குமார்., மணற்கேணி,
மணற்கேணி பதிப்பகம்,
சென்னை.
பதிப்பு-2011.

**ஆங்கில நூல்கள்**


1 **Kailasapathy.K** **"Tamil Heroic Poetry"**
**The Claredon Press**
**Oxford**
**F.E.1968**

2 **Panikkar.k.m** **"A history of kerala"**
**Annamalai University**
**Annamalai.**
**First Edition – 1960.**

களஞ்சியங்கள்

1. கலைக் களஞ்சியம், தொகுதி-9, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, மு.ப.1963.

2. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி -13 தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், ம.ப.1991.

அகராதிகள்:

1. இன்னாசி.கு (பதி.அ), வீரமாமுனிவர் அருளிய சதுரகராதி, மாதா பதிப்பகம், சென்னை, 1928.

2. கதிர் வேற்பிள்ளை.நா, தமிழ் மொழி அகராதி, ஏசியன் எஜுகேஷனல் சர்வீசஸ், புதுடெல்லி, ம.ப.1981.

நிகண்டுகள்:


1. சிவசுப்பிரமணி கவிராயர், வையாபுரிப்பிள்ளை.எஸ், (உ.ஆ), ‘நாமதீப நிகண்டு” தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1930.

2. பிங்கல முனிவர். ‘பிங்கலந்தை என்னும் பிங்கல நிகண்டு” தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1968.

**ஆய்வுக் கோவை:**


1. **இரா.மோகன்,**
   **மணிவேல்.மு,**
   **நாச்சிமுத்து.கி,**
   **சேதுபாண்டியன்.தூ,**
   **(தொ.ஆ),**
   **'இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம்"**
   **தொகுதி -2,**
   **மதுரை காமராசர் பல்கலைக் கழகம்,**
   **மதுரை,**
   **பதிப்பு -2008.**

2. **வசந்தா.த**
   **"பண்டைய தமிழ்நாட்டில் ஏற்பபப்பட்ட சமூக பொருளாதார மாற்றத்தின் தன்மைகள்"**
   **தென்னிந்திய வரலாற்று பேரவை,**
   **ராசப்பாளையம்,**
   **முதற்பதிப்பு-1990.**